# நடைச் சித்திரம்







ஆசிரியர்: வ.ரா.



குழந்தை ராமு
மைக் குறத்தி
தாசில் அய்யர்
வாத்தியார்
நாணுவய்யர்
மந்திரி பதி
பெரிய கலேட்டர்
சாமி
குப்பிப் பாட்டி
சமையல் சாமா
தரகு கிருஷ்ணன்
டாக்டர் திருமலே
மைனர்
துரைக்கண்ணு
பூசாரி சரவணே
தாலூகா குமாஸ்தா
தாஸி கோகிலாம்பாள்
ஹோட்டல் மணி
கான்ஸ்டேபிள்
சுப்பய்யா

முதலிய

**37**

சித்திரங்கள்




ஜி. டி., சென்னே

'வ. ரா.வின் தமிழ் நடை அலாதியானது. மிகச் சமீப காலத்தில் தோன்றிய ஆங்கில அமெரிக்க இளம் எழுத்தாளர் நடை போன்றது. ரத்தினச் சுருக்கமாயும், குறித்த பொருளைத் தெளிவாய் உணர்த்துவதாயும், ஜனங்களிடையே ஜீவனோடு விளங்குகிற சொற்கள் நிறைந்ததாயும் இருக்கும்.

'மைக் குறத்திகள், அங்காடிக் கூடைக்காரிகள், மார்க்கட்டு மாணிக்கங்கள், வண்டிக்காரச் செல்லமுத்துகள், குப்பிப் பாட்டிகள், தாசில் அய்யர்கள், கலெக்டர்கள், தலையாரிகள், கிராமக் கணக்குப்பிள்ளைகள்—இப்படித் தமிழ் நாடெங்கும் பரந்து வாழும் ஆசாமிகளிடம் அவருக்குள்ள பிரேமை சொல்லுந் தரமன்று.'

— ப. ராமஸ்வாமி

# நடைச் சித்திரம்

வ. ரா.






ஜார்ஜ் டவுன், சென்னை

# சமர்ப்பணம்

கர்ம வீரனும் தியாகியும் ஆன எனது நண்பர்,

தமிழ் நாட்டின் தனிப்பெரும் புதல்வர்,

கு. சீநிவாஸன் அவர்களுக்கு

இந்த நூல் காணிக்கை

# முகவுரை

தமிழ் இலக்கியத்தில், நடைச் சித்திரம் என்பது புதிய சரக்கு. மோரிசுக் கடலை, நாட்டுக் கடலையை வெருட்டிவிட்டு, வேரூன்றிப்போன கதை உங்களுக்குத் தெரிந்திருக்கும். அது போலவே, நடைச் சித்திரம் என்பது வேற்று நாட்டு இலக்கியத்தின் சிறந்த ஆபரணமாயிருந்தும், நமது தமிழ் நாட்டிலும் எப்படியோ நிலைத்துவிட்டது.

நான் நடைச் சித்திரத்தை துவக்கின வரலாறு விசித்திரமானது. நடைச் சித்திரம் தமிழில் எழுத வேண்டும் என்று எனக்கு ஆவல் உண்டானது ஏ. ஜி. கார்டினர் அவர்களாலே. இங்கிலீஷில் நடைச் சித்திரம் எழுதுவதில் அவர் நிபுணர். இந்தச் சரக்கை தமிழிலும் ஏன் கொண்டுவரக் கூடாது என்று என்னையே நான் கேட்டுக்கொண்டேன். கண்டிப்பாய் செய்யவேண்டிய காரியம் என்று என் மனதிலிருந்து எனக்கு பதில் கிடைத்தது.

இந்த பதிலை கெட்டிப்படுத்தி அமுலுக்குக் கொண்டுவரும்படியாகச் செய்தவர் எனது அருமை நண்பர் சீநிவாஸன் அவர்கள். நாங்கள் 'மணிக்கொடி' பத்திரிகையை 1933 - செப்டம்பர்மீ ஆரம்பித்தோம். வாரத்துக்கு ஒரு நடைச் சித்திரம் நிச்சயமாய் வரவேண்டும் என்று சீநிவாஸன் (மணிக்கொடியின் ஆசிரியர்) எனக்கு உத்தரவு போட்டார். அந்த உத்தரவின் பலன்தான் இந்தச் சித்திரங்கள்.

நடைச் சித்திரம் தமிழில் வந்த வரலாறைக் குறிப்பிடுவதற்காக, நான் இந்த முகவுரையை எழுதினேனேயொழிய, சம்பிரதாயத்தைக் கருதி அல்ல. இந்த சித்திரங்களில் கண்ட பேர்வழிகள் யாவரும் நமது தமிழ்நாட்டு சகோதரர்களும் சகோதரிகளும்தான். ஆகவே, கால தாமதம் செய்யாமல், நீங்கள் அவர்களோடு சல்லாபம் செய்யும்படி இடம் கொடுத்துவிட்டு, நான் விலகிக்கொள்ளுகிறேன்.

திருவல்லிக்கேணி
10-12-'40

வ. ரா.

# பொருளடக்கம்

# குழந்தை ராமு

குழந்தை ராமுவுக்கு இன்னும் ஆறு வயதாகவில்லை. ஆனால், அவனுடைய தாத்தா வெகு அக்கறையாக, அவனைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து, படிக்கும்படி செய்துவிட்டார். இந்த ஆறு வயது ராமுவையும் அவனுடைய அறுபத்து ஒன்பது வயது தாத்தாவையும், நேரிலே நான் காணும்பொழுதெல்லாம், எனக்கு ஆனந்தமும் துக்கமும் சேர்ந்தாற் போல வரும்.

குழந்தை ராமு தங்கத்தை உருக்கி வார்த்த விக்கிரகத்தைப் போல இருப்பான். அகன்ற நெற்றி, செந்தாமரைக் கண்கள், சுவாமி விவேகானந்தரைப் போன்ற தலை, பூமியில் ஒரு நிமிஷமும் தரிக்காமல், எப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கும் கால்கள், ஓயாத நாக்கு, ஸயன்ஸ்காரர்கள் கூட விளக்கத்தோடு பதில் சொல்ல முடியாத கேள்விகள், பம்பரம் போல் வினாடியில் தூங்கும் குணம், சொன்னதை வேதமாக நம்பும் தன்மை — இவைகள் எல்லாம் சேர்ந்ததுதான் ராமு.

'ஏண்டா, இந்தக் கிழிசல் துண்டைக் கட்டிக்கொண்டிருக்கிறாய்?' என்று தாத்தா கேட்பார். 'நல்ல வேட்டி இல்லை' யென்பான் ராமு. 'என்னடா, நல்ல வேட்டி, வேட்டி! நல்ல தமிழ் பேசுகிறாய்! வேஷ்டி என்று சொல்லு' என்பார்

தாத்தா. பம்பரத்துக்கு நூல் சுற்றிக்கொண்டே, 'வேஷ்டி என்று சொல்லு, வேஷ்டி என்று சொல்லு' என்று சொல்லிக் கொண்டே, மாயமாய்ப் பறந்து போவான்.

'தாத்தா, எனக்கு கிராப்பு வைத்து விடேன்' என்பான் ராமு. 'மடப்பயலே! நான் பரிகாரியா? என்ன, வரவரக் கெட்டுப்போச்சு! இந்த நாள் நாகரிகம் இரண்டு வயதிலேயே படிந்துபோக வேண்டுமோயில்லையோ? கலி முற்றி, காலம் கெட்டு வருகிறதோன்ன!' என்பார் தாத்தா. 'தாத்தா, நீங்கள் அம்பட்டனில்லை' என்று சிரிப்பான் குழந்தை. 'எடடா கம்பை!' என்று சொல்லுவதற்குள், குழந்தை ராமு இருக்கிற இடம் தெரியாது.

'நம்மாத்து மாகாளி மகன் உங்களைக் கூப்பிடுகிறான்' என்பான் ராமு. 'துஷ்டப்பயலே! நீ அவன் கிட்டப் போய் விட்டயோ? வேஷ்டியை மாற்று' என்பார் பெரியவர். 'தாத்தா, நான் அவன் கிட்டப் போகவில்லை. அவன் என் கிட்ட வந்துவிட்டான். அவன் வேஷ்டியைத்தானே மாற்றவேண்டும்?' என்று அறியாக் குழந்தை, அவனறியா மலே தர்க்க சாஸ்திரம் பேசிவிடுகிறான்.

'என்னடா காந்தி வேஷ்டி! என்ன வேண்டியிருக் கிறது? காந்தி வேஷ்டி கட்டிக்கொண்டால், ஜெயிலுக்குப் போகணும். நீ போறியா?' என்பார் தாத்தா. 'போ தாத்தா! காந்தி பெரியவர். உன்னைக் காட்டிலும் பெரியவர். நான் அவரைப் பார்த்தேனே, தாத்தா! நான் ஒரு ரூபாய் காந்தி கையிலே கொடுத்தேன், தாத்தா! என்னை காந்தி தொட்டார், தாத்தா' என்று குழந்தை ராமு அடுக்கிக் கொண்டே போனல், அதைத் தடுத்து தாத்தா பேச முடியுமா?

'தாத்தா! பள்ளிக்கூடத்திலே அந்த வாத்தியாருக்கு நன்றாய்ச் சொல்லிக் கொடுக்கத் தெரியவில்லை. வாத்தியார் குறட்டை விட்டுக்கொண்டு தூங்குகிறார். விழித்துக் கொண்டால், குழந்தைகளைப் பொத்துப் பொத்தென்று சாத்துகிறார். நல்ல பள்ளிக்கூடம்! நல்ல வாத்தியார்! தாத்தா, நான் அந்தப் பள்ளிக்கூடத்துக்குப் போக மாட்டேன். தாத்தா! போகமாட்டேன் தாத்தா!' என்று ராகம் இழுத்துக்கொண்டு சொல்லுவான்.

தாத்தாவைக் குழந்தை ராமு துளைப்பதைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கும். ஆறுக்கும் அறுபதுக்கும் உள்ள சம்பந்த வித்தியாசங்கள் யாவும் ஒன்றுவிடாமல் தெரியும். குழந்தை ராமுவுக்கு இயற்கையாக உண்டாகும் தேசபக்தி, கதர்ப்பித்து முதலியன, தாத்தாவுக்கு என்ன சொன்னாலும் உடம்பிலே ஏறுது. ஏறுதது மாத்திரமா? தம்மை யறியா மலே குழந்தையின் நல்லுணர்ச்சிகள் வளரவொட்டாமல் தடுக்கவும் செய்கிறார்.

குழந்தை ராமு, தாத்தாவைக் கண்டால், கொஞ்ச மாவது பயப்படுவான். பாட்டியைக் கண்டால் அவனுக்கு 'ஜோர்' வந்துவிடும். 'ஏ ராமு! எங்கே ஓடுகிறாய்? எண்ணெய் தேய்த்துக்கொள்ள வேண்டாமோ?' என்று பாட்டி சொன்னால், 'பாடம் படிக்கிறதைக் காட்டிலும் எண்ணெய் தேய்த்துக்கொள்வது ஒசத்தியோ?' என்று சிரித்துக்கொண்டு, சிலேட்டுக் குச்சியைத் தரையில் வைத் துத் தேய்ப்பான். இதுதான் அவன் படிக்கிற பாடம்.

* * *

'பாட்டி, உனக்கு பஸ் தெரியுமா?' என்பான்.

'எனக்கு என்னடாப்பா தெரியும்? பஸ் என்றால் என்ன? நீதான் சொல்லு, பார்ப்போம்?' என்பாள் பாட்டி.

ராமு சொல்லுவான்: 'பழம் புடவையைக் கிழித்தால் டர்; மூச்சு விட்டால் புஸ்; போதும் என்று சொன்னால் பஸ். பஸ் என்றால் போதும் என்று அர்த்தம், பாட்டி!'

'இதையாடா பஸ் என்கிறது?' என்பாள் பாட்டி.

'உன்னை ஏய்த்தேன்; நம்ப ஊர் ரோட்டிலே ஓடுகிறதே பஸ், மோட்டார் பஸ், அதற்குப் பெயர்தான் பஸ்!' என்று சொல்லிவிட்டு ஓட்டம் எடுப்பான்.

'அடே கோமாளி!' என்று பாட்டி ஆனந்தமடைவாள்.

'அம்மா, நான் "ராங்கி" எழுதப் போகிறேன்' என்பான் ராமு. 'என்னடா ராங்கி? ராங்கி என்றால் என்னடா? இதுதான் நீ படிக்கிற படிப்போ?' என்பாள் பெற்ற தாய் 'உனக்குத் தெரியாதா? வாத்தியார் "ட்ராயிங்" என்று சொன்னார். அடுத்த வீட்டுக் காமுவுக்கு அந்த வார்த்தை வாயிலே நுழையவில்லை. அவள் "ராங்கி" என்று உருப்போட்டுக் கொண்டிருக்கிறாள். ட்ராயிங் என்றால் சித்திரம் எழுதுகிறது. அம்மா, நீ படிக்கிறபொழுது ராங்கி உண்டோ?' என்று துடுக்காகக் கேட்பான் ராமு. 'நான் பெற்றதுதான் ராங்கியாய்ப் பேசுகிறது!' என்று சந்தோஷத்துடன் சொல்லுவாள் அம்மாள்.

'பள்ளிக்கூடத்திலே பாட்டு, அம்மா!' என்பான். 'என்ன பாட்டுடா?' 'கையை நீட்டுகிறதற்கு, கையை மடக்குகிறதற்கு, உட்காருவதற்கு, எழுந்திருப்பதற்கு, — எல்லாவற்றிற்கும் பாட்டு!' என்பான். 'எங்கே, பாடு

பார்ப்போம்!' என்பாள் தாயார். 'நான் பாடுவேன்; நீ அந்த மாதிரி கையை நீட்டி மடக்கணும்; உட்கார்ந்து எழுந்திருக்கணும். செய்கிறாயா, பாடுகிறேன். அது "ட்ரில்" பாட்டு, அம்மா!' என்று சொல்லிக்கொண்டே, வெளியிலே கூப்பிடும் சோமுவின் குரலைக் கேட்டு ஓட்டம் எடுப்பான்.

*　　*　　*

சோமு: ஏண்டா, ராமு, கோலியாட வருகிறாயா?

ராமு: வருகிறேன்.

சோமு: வரேன் என்றால் வாயேன்.

ராமு: வாயேன் என்றால் வாய் சாப்பிடுவதற்குத் தான்.

சோமு: என்ன, வாத்தியார் மாதிரி பேசுகிறாய்?

ராமு: நான் வாத்தியார் இல்லேடா. நான் ப்ரொபஸர்!

சோமு: ஏதாவது சொல்லிக்கொண்டிரு.

ராமு: நீ முதலிலே கட்டை வைத்தால், நான் கோலியாட வருகிறேன்.

*　　*　　*

இவர்களுக்கு மத்தியஸ்தர் தாத்தா.

சோமு: பாருங்கோ தாத்தா, ராமு கோலியாட வரமாட்டேன் என்கிறான்.

ராமு: சோமு முதலிலே முட்டிவைக்கணும், தாத்தா! நான்தானே கோலி கொண்டுவருவேன்.

தாத்தா: அவன் கோலி கொண்டுவந்தால், நீ முட்டி வைக்கிறயா?

ராமு: அவன் கோலி எதற்கு? அவன் கோலி மா கோலி. அடிச்சா நொறுங்கிப்போகுமே! என்னுது அசல், ஒண்ணு நம்பர், பளிங்குக்குண்டு, தாத்தா! நேத்திக்கு நீ வாங்கித் தந்தையே, அந்தக் கோலி, தாத்தா!

தாத்தாவுக்கு நைஸாக ராமு லஞ்சம் கொடுப்பான்.

* * *

'என் அப்பா! சூரியன் ஆகாயத்திலே தொங்குகிறதே, அது பொத்தென்று கீழே விழுந்துவிடாது?' என்று ராமு கேட்டால், அதற்கு, அவனுக்குச் சமாதானம் வரும்படியாக, யார் எப்படிப் பதில் சொல்ல முடியும்? 'கண்ணே, விழாது' என்பார் தகப்பனார். 'இந்தக் கோலிக்குண்டு நிற்கமாட்டேன் என்கிறதே. விட்டுவிட்டால் கீழே விழுந்துவிடுகிறதே!' என்பான் ராமு. 'ஆமாம்' என்பார் தகப்பனார். 'சூரியன் ஏன் விழவில்லை?' என்று கேட்பான் ராமு.' நீ பெரியவனைப் போனால் உனக்குத் தெரியும். இப்பொழுது தெரியாது' என்பார் தகப்பனார். 'தாத்தா உன்னைவிடப் பெரியவர் என்று பாட்டி சொல்றா. அவருக்கும் தெரியவில்லையே!' என்பான் ராமு. பதில் சொல்ல முடியாத சங்கதி!

* * *

ராமுவுக்கு ஒரு சிறியதகப்பனார். அவரிடம் ராமுவுக்கு ரொம்பப் பிரியம். 'ஏன் சித்தி! என்னை உன் ஸைகிளில் வைத்துத் தள்ளிக்கொண்டு போகிறாயா? நான் விழ மாட்டேன். கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டிருப்பேன்' என்பான் ராமு. 'மோட்டார் காரைக் கண்டால், ஸைகிள் வெறிக்குமடாப்பா!' என்று குறும்பாகச் சித்தப்பா பதில் சொல்லுவார். 'போ சித்தி! போ! வெறிக்குமாம்! நீதான் பிடித்துக்கொண்டிருக்கிறாயே!' என்பான் ராமு.

## குழந்தை ராமு

குழந்தை ராமுவைப் போல விளையாடிக்கொண்டிருக்கும் குழந்தைகள் நம் நாட்டின் வருங்காலத் தலைவர்கள். அவர்களுடைய இன்றைய நடத்தையைப் பொறுத்தது, அவர்கள் வாழப் போகிற வாழ்வு. அவர்களை மண்டையிலடித்து, அவர்களின் மூளையைக் குழம்ப வைப்பது வயது மூத்தவர்களுக்கு அழகல்ல. அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு வாய்ப் பதட்டத்துடன் இருக்கிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு இந்த நாட்டுக்கு அவர்களால் நலம் உண்டாகும்.

## மைக் குறத்தி

'காடை, கவுதாரி, மைனு வாங்கலியோ, ஆயாளோ!' என்று தகரச் சோடாவைத் தட்டிக்கொண்டு பாடி, காடை, கவுதாரி, மைனு இவைகளை அடியோடு மறந்துபோய், 'ஊசி வேணுமா, சாமி, ஊசி!' என்று ஊசி வியாபாரம் செய்யும் ஆசாமி மைக் குறத்தியல்ல. அவளுக்கு நரித் தொம்பச்சி என்று நாகரிகப் பெயர். அவளுக்கு வலது கையில் தகரச் சோடாவும், இடது தோளில் நரித்தோல் பையும், வலது தோளில் ஒரு குழந்தையும் இருக்கும்.

'கூடை முறம் கட்டலியோ!' என்று அழுகை ப்ராஸம் செய்துகொண்டு, கூடையில் பனை ஆக்குகளையும் ஒரு முழ நீள அரிவாளையும் கொண்டுவந்து, கூடை முறம் கட்டுவதில் ஊர் ஸ்திரீகளிடம் பேரம் செய்கிறாளே, அவளும் மைக் குறத்தி அல்ல. அவள் உப்புக் குறவன் பெண்சாதி - உப்புக் குறத்தி. வீட்டார் அயர்ந்துபோனால், இவள் மூலமாய்ப் பித்தளைச் செம்புக்கு ஆபத்து என்று கிராமத்திலே சொல்லிக் கொள்ளுகிறார்கள். உப்புக் குறத்தியின் 'கைப்பிடி நாயகனுக்கு' காடாறு மாதம், வீடாறு மாதம்: அதாவது,

வருஷத்திலே ஆறு மாதம் வெளியே இருப்பான்; ஆறு மாதம் சிறையிலிருப்பான்.

'பச்சை குத்தணுமா, குறி சொல்லணுமா, காட்டுக் கருவேப்பிலை வாங்கலியோ!' என்று ஒய்யாரமாய்ச் சொல்லி வருகிறளே, அவள்தான் மைக் குறத்தி. பாரதியார் சொல்லுவது போல, அவள் நிறம் 'நேர்த்தியான மைக்கருப்பு'. 'சொல்லினைத் தேனில் குழைத்துரைப்பாள், சிறு வள்ளி' யின் குலத்தைச் சேர்ந்தவள் தான் என்று மைக் குறத்தி பெருமையாகச் சொல்லிக்கொள்ளுவாள். 'பச்சைமலை பவளமலை எங்கள் மலைநாடு' என்று அவள் பாடத் துவக்கிவிட்டால், நமது வாய்கள் தாமாகவே ஏற்றச் சால்களைப் போல விரிந்து போகும்.

மலைநாட்டு வாசிகளை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவர்கள் சதா 'ஏறி இறங்கும் திருமேனி'களாய் வாழவேண்டியிருப்பதால், உயரமாய் வளருவதில்லை. எப்பொழுதும் உணவுக்கு வேலை செய்துகொண்டு இருக்கவேண்டு மாகையால், உட்கார்ந்து உயரமாய் வளர்வதற்கு நேரம் இல்லையோ என்னவோ! உயரம் என்ற விஷயத்தில் அவர்கள் மோசம் போனர்களே யொழிய, கனத்தில் மோசம் போகவில்லை. அவர்கள் 'கட்டைக் குட்டை'. தேகம் குண்டுக் கல். ஆனல் தூக்கிப் போட்டால் உடைந்துபோக மாட்டார்கள்.

பட்டரைப் பலகையில் நாள் முழுதும் உட்கார்ந்து வியாபாரம் செய்பவர்களின் உடம்புகளும் கனத்துத்தான் இருக்கும். ஆனல் அந்தத் தேகங்கள் நீர் கோத்துக்கொண்டிருக்கிற வெள்ளரிப் பழங்கள், பரங்கிப் பழங்கள். தொப்பென்று விழுந்தால் நீராய் ஓடும். அடைமழையில் ஊறின

தோல் எப்படியிருக்கும்? இரவு முழுதும் தொண்டை வரண்டுபோகும்படி கத்தின நீர்த் தவளை எப்படி ஊதியிருக்குமோ அப்படி யிருக்கும் சுகவாசிகளின் உடம்பு. லங்காபட்டணம் தாண்டின ஹனுமானைப் போல, மலைவாசிகள் தாண்டித் தாண்டி நடக்கவேண்டியிருப்பதால், அவர்கள் உடம்பு கெட்டிப்பட்டுப் போவதில் என்ன ஆச்சரியம்?

நாகரிக ராஜாங்கக் கொடி பறக்காத காடுகளில் மலைக் குறவர்களுக்கு வாசம். ஏதோ நினைப்பு வந்த காட்டு யானைகள், சில சமயங்களில், நாட்டிலிருக்கும் கிராமங்களில் தங்கள் பார்வையைச் செலுத்தி, அங்கே வேண்டுமளவு சேஷ்டைகள் செய்துகொள்ளுவது போல, மலைக் குறவனும் குறத்தியும், குடும்ப சகிதமாக, காட்டுக் கருவேப்பிலை, பச்சை குத்தும் ஊசி, மை, குறி சொல்லும் கோல் — இவைகளை உடன்கொண்டு, நாட்டில் இறங்குவார்கள்.

நடு நெற்றியிலே நீண்ட ரேகைப் பச்சை யோட, அதனடியில் பச்சைப் பொட்டு அதைத் தாங்கி நிற்க, சட்டுச் சட்டு என்று அடி எடுத்துவைத்து நடந்துவரும் குட்டைக் குறத்தியின் சத்தத்தைக் கேட்டால், ஊராருக்கு ஆனந்தம். புதுப் பேர்வழி வந்தால், கிராமத்திலே எல்லோருக்கும் சந்தோஷம். வெடுக்கு வெடுக்கென்று துடுக்குப் பேச்சை அடுக்கு அடுக்காய்க் கொட்டிப் பேசும் மலைக் குறத்தியினிடம் ஆண், பெண், குழந்தை, கிழங்கள் — யாருக்குத்தான் காதல் உண்டாகாது? மலைக் குறத்திகளுக்கு, கிராமத்தில் 'விருந்து வேட்டை'; காடுகளில் காட்டு மிருகங்கள் வேட்டை.

'காட்டுக் கருவேப்பிலை வாங்கு, அம்மா! குழம்பிலே போட்டுத் தாளித்தால், குருணிச் சோறு சாப்பிடலாம். ஆறு மாசத்துக்குக் குழம்பு ஊசிப் போகாது. ராசாத்தி மாதிரி பாக்கிறயே!' என்பாள் மைக் குறத்தி, மலைக் குறத்தி வள்ளியின் தங்கை. 'வீட்டுப் புருஷன் சரியாயிருந்தால் தானே, காட்டுக் கருவேப்பிலை வாங்கி, குழம்புச் சாதம் உருட்டி உருட்டித் தின்பதற்கு? கருவேப்பிலை இருக்கட்டும். எல்லோரும் கூடுவதற்கு முன் என் கையைப் பார்த்து, குறி சொல்லடி!' என்பாள் வீட்டுப் பெண்.

'கொண்டைச் சொருக்கி ஒத்தி உன் புருஷனைத் துண்டு துண்டாய் வெட்டி வாராள். அந்த ஐயனுக்குச் சொந்தப் புத்தி யில்லை. காசு கரியாச்சு, காயம் பொய்யாப் போச்சு. நெஞ்சு உனக்குப் பொடிப் பொடியாப் போச்சு. நல்ல நாள் வருது, சொல்லுகிறேன், கேளம்மா!' என்று மைக் குறத்தி அடுக்கிக்கொண்டே போவாள். 'எப்போ நல்ல காலம் வருது? எப்படி வருது?' என்பாள் வீட்டு அம்மணி. 'மைக் குறத்தி கையாலே, மருந்து போட்டால் நல்ல காலம்' என்பாள் குறத்தி. 'உன் கிட்ட இருக்கா?' என்பாள் அம்மணி. பேரம் முடிவதற்குள் கூட்டம் கூடிவிடும்.

இதற்குள் ஒரு சிறு பெண் தன் கையை நீட்டுவாள். கையைப் பார்த்த மைக்குறத்தி, அதைச் சத்தம் போட்டு முத்த மிடுவாள். 'என்ன ஒண்ணும் சொல்லாமலே முத்தம் இடுகிறாய்?' என்பாள் ஒரு கிழவி. 'கையைப் பாரு அம்மா, ராஜாத்தி கை! ராஜாக் கள்ளன், மந்திரிக் கள்ளன் இரண்டு பேரும் வரான். மந்திரிக் கள்ளன் மலையேறிப் போனான். ராஜாக் கள்ளன் இந்த ராஜாத்தி வள்ளியைக் கொண்டோடிப்

போனான். ஆறுமாசம் பொறுங்க!' என்பாள் குறத்தி. வரப் போகிற புருஷன் எந்தப் பெண்ணுக்கு ராஜாவாகத் தோற்று வான் என்பதைக் கூட்டத்தார் மறந்துபோவார்கள். ஆனால் குறத்தி அதை மறப்பதில்லை. குறத்திக்குக் கொண்டாட் டந்தானே?

வண்டிக்கார அழகப்பன் வந்து தோன்றுவான். வண் டிக்காரனுக்கு எந்த இடத்திலும் சலுகை. பெண்கள் அவ னைக் கண்டு கூச்சப்படமாட்டார்கள். 'ஆயா! நீ குறி சொன்னது போதும். என் வள்ளாங் கையிலே (இடது கையிலே) நான் எப்போதும் பார்க்கும்படியாய் அழகான பெண்பிள்ளையை எனக்குப் பச்சை குத்து, பார்ப்போம்!' என்பான் அழகப்பன். 'பொம்பளைக்கு சேலை கட்டியா, அல் லாட்டி......' என்று அவனைப் பார்த்துச் சிரிப்பாள் குறத்தி. மலைக்குறத்தி இருக்கிற இடத்தில் வெட்கம் என்பதே தலைகாட்டாது.

கிடைக்கும் சம்மானங்களைப் பெற்றுக்கொண்டு குறத்தி அப்புறம் நகர்வாள். இளங் காளைகள் கூட்டமொன்று அவளைப் பிடித்துக்கொள்ளும். 'ஏ, வள்ளியக்கா! உன்னை வெகு நாளாக இந்தப் பக்கம் காணோமே!' என்று ஏக காலத் தில் எல்லோரும் கூச்சல் போடுவார்கள். 'என்னைப் பெத்த ராசாக்களே! ஒத்தியைப் பாத்து எல்லோரும் மோகிக்க லாமா? உங்க சாதி வழக்கமோ?' என்று சொல்லிச் சிரிப் பாள். 'குறத்தி ராஜாத்திக்குக் கோபம் வருதுடோ!' என் பார்கள் எல்லோரும். 'வீட்டுச் சோறு இப்படித்தான் உங்களைப் பேசச் சொல்லும்' என்று சொல்லிவிட்டு மேலே செல்லுவாள்.

## மைக் குறத்தி

பொக்கை வாயை மென்றுகொண்டிருக்கும் கிழவர் ஒருவர், அவளைக் கைதட்டிக் கூப்பிடுவார். ‘ சாமி, சுகமா ?’ என்பாள் நேர்த்தியான மைக் குறத்தி. ‘உன்னைக் காணாமல் என் கண் பூத்துப் போச்சடி !’ என்பார் கிழவர். ‘ என்ன சாமி! கட்டின பெண்டாட்டி மாதிரி அடி போட்டுச் சொந்தம் கொண்டாடுறே !’ என்று சிரிப்பாள். ‘ எனக்கு எப்போ காலம் ? கையைப் பார்த்துக் குறி சொல் பார்ப்போம்’ என்பார் கிழவர். ‘ காலம் கிட்ட, கிட்ட வருது ; நீ எட்ட எட்டப் போய்விடரயே !’ என்பாள். என்னவென்று அவளை வெறித்துப் பார்ப்பார் கிழவர், காமக் கண்களுடன். ‘ சாமி, என்னை வெறிச்சுப் பார்க்காதே. அதோ என் புருஷன் வாரான் ’ என்று சொல்லிவிட்டு ஓட்டமெடுப்பாள் சுந்தரிக் குறத்தி. மைக் குறத்தியின் ஜாலக் கண் வேடிக்கையிலும், சாது சேஷ்டைகளிலும், மகிழ்ச்சி ததும்பும் பேச்சிலும் ஈடுபடாதவர்கள் யார் ? இஷ்டமிருந்தால் பதில் சொல்லுங்கள்.

# தாசில் அன்னதானமய்யர்

இங்கிலீஷ் ராஜாங்கம் ஹிந்துஸ்தானத்தில் நிலைக்கிற சமயத்தில் தாசில் உத்தியோகத்துக்குத்தான் ரொம்பப் பெருமை. யாருடைய உத்தியோகத்தையேனும் மதிப்புக் கலந்து திட்டவேண்டுமானால், தாசில் வேலை பாழாய்ப் போகிறதோ என்று, பெருமையுடனும் பொறுமையுடனும் திட்டும் சத்தம் எனது சிறு பிள்ளைக் காதில் வெகு காலத்துக்கு முன் 'கணீர்' என்று பட்டது. இப்பொழுதும் 'கிர்' என்று சுற்றிக்கொண்டுதான் இருக்கிறது.

* * *

எனக்குத் தாசில் வேலை கிடைக்கப் போகிறது என்று நவக்கிரகங்களையும் படுக்கப் போட்டுத் தாண்டி ஸத்தியம் செய்த வள்ளுவர் (ஜோஸியம் பார்க்கும் ஒரு வகுப்பார்) என் தாத்தாவிடமிருந்து ஒரு துயிலி வேஷ்டியும் ஒரு முழு ரூபாய் தட்சிணையும் பெற்றுக்கொண்டு போனது எனக்கு மறக்கவே யில்லை. அந்தத் துயிலி வேஷ்டியை நான் மேலே போட்டுக்கொண்டு, அழகாய்த் தெருவில் நடந்து போகவேண்டும் என்று எனக்கு ஆசை. சட்டைப் பையில் ஒரு ரூபாய்ச் சில்லறை மாற்றி, அடி யெடுத்து வைக்கும்

பொழுது, காசுகள் குலுங்கக் குலுங்க நடக்கவேண்டும் என்று ஆசைப்பட்டேன். 'அட அசடே, தாசில் வேலை வந்தால், எத்தனையோ துயிலி வேஷ்டிகளும், எத்தனையோ ஆயிரம் ரூபாய்களும் வரும் என்று புள்ளி விபரத்தில் தவறாமல் கணக்குப் போட்டுக் கொடுத்து, என்னை என் தாத்தா சமாதானப்படுத்தியதும் நான் மறந்து போகவில்லை. ஆனால் விஷயம் வேறாய் முடிந்தது. இடையில் ஒரு சிறு கதை.

* * *

அரண்மனை வேலைக்காரனுக்கு ஒரு குழந்தை பிறந்தது. பிறந்த லக்கினத்தை, இமைப்பொழுது கூடக் கூட்டிக் குறைக்காமல், கவனமாய்க் கண்டுபிடித்து, ஜாதகத்தைப் பூர்த்தி செய்து, அந்த ஊர் ஜோஸியரிடம் கொடுத்தான் வேலைக்காரன். ஜோஸியர் ஜாதகத்தைப் பார்த்தார். 'உன் பையனுக்கு யானை வாகனம் ஏறுகிற யோகம் இருக்கிறது' என்றார். வேலைக்காரனுக்குத் தலை கால் தெரியவில்லை. தன் மகன் ராஜாவாக ஆகப்போகிறான் என்று குதூகலத்துடன் பிள்ளையை வளர்த்தான். முடிவில் பிள்ளை, யானையைப் பழக்கும் மாவுத்தனானான். ஜோஸியர் சொன்னதிலும் தவறு இல்லை. யானை வாகனம் ஏறுகிற யோகம் அவனுக்கு இருந்ததா இல்லையா? அதைப் போலவே என் யோகமும் என்று சொல்லவும் வேண்டுமா? தாசில் வேலை கிடைக்கவில்லை. தாசில்தாரைப் பற்றி எழுதும் வேலை — அடடா, யோகம் என்று சொல்லவேண்டுமே — கிடைத்திருக்கிறது. லக்கினத்தில் மயிரிழை எங்கேயோ ஒதுங்கிப் போயிருக்க வேண்டும்! எங்கே தவறிவிட்டது என்று வள்ளுவரைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்.

* * *

தாசில் வேலை, அரசாங்கத்தின் அஸ்திவார முட்டுபலம். தாசில்தார் சின்ன கஜானுவுக்கு அதிபதி. பணத்தைக் கண்குளிரப் பார்ப்பதில் யாருக்குத்தான் ஆசை பிராது? முற்றும் துறந்த சன்னியாசிகள் கூட, நோட்டாக இல்லாமல், முழு ரூபாய்களாய்ப் பாத காணிக்கை வேண்டுகிற காலம் இதுவல்லவா? எனவே, தாசில் வேலையில் யாருக்கும் மோகம் இருப்பது சகஜம்தானே? பணத்தோடுதான் பணம் சேரும் என்கிறார்களே! அன்னதானமய்யர் இருக்கட்டும். பொறுத்துக் கொள்வார். ஒரு வேடிக்கையைக் கேளுங்கள்.

*　　　*　　　*

ஒரு செம்படவன், பணத்தோடு பணம் சேருகிறதைக் கேள்விப்பட்டான். அவன் அதைப் பரீட்சை செய்யவேண்டும் என்று தீர்மானித்தான். ஒரு யோசனை தோன்றிற்று. நல்ல மீனுக ஒரு நாள் அவன் தூண்டி முள்ளில் அகப்பட்டது. முழு ரூபாயைக் கண்ணுல் கண்டான். அதை நீளமான ஒரு குச்சியில் கட்டினுன். கஜானுவுக்குப் போய்ச் சேர்ந்தான். பாரா இல்லாத சமயம் பார்த்து (இது வெறும் கதை) கஜானு அறையில் பரப்பிக் கிடந்த ரூபாய்களின் பேரில் குச்சியை விட்டு குத்திக் குத்திப் பார்த்தான். பணத்தோடு பணம் சேரவில்லை. தன் குச்சி நுனியில் கட்டியிருந்த ரூபாயில் கஜானு ரூபாய் ஒட்டிக்கொள்ளும், ஒட்டிக்கொள்ள வேண்டும் என்பது அவனது நினைப்பு. ரொம்ப நாழிகை வரையில் சிரமப்பட்டுப் பார்த்தான். (கஜானுவில் ஒருவரும் இல்லையென்ற பெரும் பொய்யை நீங்கள் கற்பனை செய்துகொள்ள வேண்டும்.) அலுத்துப் போய்க் குச்சியைத் தன் முழு பலங்கொண்டு, கஜானு ரூபா

யில் குத்தினன். செம்படவன் ரூபாய் கஜானு ரூபாய்களில் ஒட்டிக்கொண்டது. குச்சி காலி. பணத்தோடு பணம் சேருகிறது உண்மைதான் என்று, வெறுங் கையோடு, செம்படவன் வீட்டுக்குத் திரும்பினன்.

* * *

செம்படவனுடைய பணப் பேராசையே ஜன சமூகத்தின் ஆசையாகும். இந்த ஆசையால் தூண்டப்பட்டு, கஜானுவைக் கண்ணெதிரே நிறுத்திக்கொண்டு, இங்கிலீஷ் படித்த பல்லாயிரக் கணக்கான தமிழர்களில் ஒருவர் அன்னதானமய்யர். 'கொட்டை நூற்று'ச் சம்பாதித்த புரோகிதக் குடும்பத்திலே பிறந்தவர் அன்னதானமய்யர். 'கப்பலேறிப் பட்ட கடன் கொட்டை நூற்றுத் தீருமா?' என்று அன்னதானமய்யரின் தாயார் அடிக்கடி உள்ளம் வாடப் புலம்புவாள். கரைத்தால் கல்லும் கரையும் என்பார்கள். இந்தக் கரைப்பினல் அன்னதானமய்யரது தகப்பனரின் வைதீகப் பித்து வெறும் பாவனையாக மாறிவிட்டது. புரோகிதம் என்றால் என்ன? பணம் என்று அவருடைய அகராதியில் புதிதாகப் பதிப்பித்துக்கொண்டார். நாளடைவிலே, ஒரு தருப்பைப் புல்லுக்கு என்ன விலை என்று கணக்குப் பார்க்கும் வரையில், அவருடைய பணத்தாசை கொண்டு போய் விட்டது. பாவம், அவர் என்ன செய்வார்? வீடும் நாடும் ஆவதும் அழிவதும் பெண்ணுலே என்று அவர் அடிக்கடி சொல்லுவார். அன்னதானமய்யர் இங்கிலீஷ் படித்தார்; தருப்பைப் புல்லையும் புரோகிதத்தையும் மறந்தார்; வைதீகத்தை இகழ்ந்தார். பணச் சுழலில் அகப்பட்டுக் கொண்டார். இவைகளை யெல்லாம் விபரமாகக் கூறத் தேவையு முண்டோ?

அன்னதானமய்யர் காலேஜில் படிக்கவேண்டும். அவருடைய தகப்பனாரின் புரோகித வரும்படி, அன்னதானமய்யரின் காலேஜ் படிப்பு, ஷோக் செலவுக்குப் போதவில்லை. மாதத்துக்குப் பத்து ரூபாய்க்குக் குறையாமல் புதுப் புஸ்தகங்கள் வாங்கவேண்டும் என்று தகப்பனாருக்குப் பொய்யாகக் கடிதம் எழுதுவார். கை நீண்டால்தானே முழம் போட முடியும்? எனவே அன்னதானத்தின் தகப்பனார் கிராமத்துப் புரோகிதத்தை விட்டு, சென்னைக்குப் போய், தமது புரோகிதத்தையும், பையன் படிப்பையும், பொதுவாகக் குடும்ப யோக க்ஷேமத்தையும் சேர்த்து நடத்திவந்தார். நல்ல சிக்கன ஏற்பாடு! பையன் பி. ஏ. தேறி, கண்டவர்களையெல்லாம் மருள மருள விழித்தான். அது பி. ஏ. பார்வை. கிராப்புக்கும் குடுமிக்கும் மத்தியஸ்தமாக, வைதீகத்துக்கும் லௌகிகத்துக்கும் இடையே இசைபோட்டு இசைத்து, கோபுர வஸ்துவைப் போல் உச்சந்தலையிலே, பத்துப் பன்னிரண்டு மயிர்களைப் பத்திரமாய் வைத்துக் கொண்டான். நாட்டுப் புராதனப் பழக்கத்தை விட்டுவிட அவனுக்கு மனமில்லையாம்!

* * *

பி. ஏ. தேறின அன்னதானத்துக்கு, வண்டி வண்டியாய்ப் பெண்கள் வரதட்சிணையுடன் வந்தார்கள். பெண் கொடுக்க வந்தவர்களின் பதவி, பெருமை, பணம் முதலியவைகளைக் கொஞ்சம் அலசிப் பார்த்தார் அன்னதானத்தின் தகப்பனார். கலெக்டர் கச்சேரி சிரஸ்தார் ஒருவர்தான் சோதனையில் தேறியவர். அவருடைய பெண் அன்னதானத்தின் மனைவியானாள். மணத்தின் பயனாக, அன்னதானம் தஞ்சாவூர் கலெக்டர் கச்சேரியில் குமாஸ்தாவானான்; தன்

மனைவிக்கு தாஸன் ஆனான். துரையின் டபேதாருக்கு அந்தரங்கத் தோழனானான். மாமனாருக்கு தஸ்தாவேஜிக் கட்டுகளைப் படிக்கும் பணியாளானான். வீட்டிலே தன் தகப்பன் தாய்மார்களுக்குத் துரோகியானான். அவர்களைப்பற்றி அவனுக்கு நினைப்பே யில்லை. தாயார் உள்ளம் பதறுகிறாள்; தகப்பனார் தமது கிராமத்துக்குச் சென்று, மீண்டும் கொட்டை நூற்கத் துவக்கிவிட்டார்.

ஈசுவர ஆக்கினையை நம்பி, அன்னதானம் உத்தியோக ஏணியில் ஒவ்வொரு படியாக ஏறினார். டபேதார் பார்வையிலும் மாமனாருக்குப் பணிவதிலும் அவருடைய நம்பிக்கை எள்ளளவும் தளரவில்லை. துரை முகம் கோணுவதைப் பொறுக்காதவர் அன்னதானம். மாமனார் வீட்டிலே சாப்பாடு. சொந்தமாகப் பாங்கியில் கணக்கு. காசில்லாமல் காபி; டிக்கட்டில்லாமல் நாடகக் காட்சி ஆனந்தம். துரை முகம் கோணாமல், முக க்ஷவரம். தீபாவளிக்கு மாமனார் மற்றும் பலர் கொடுத்த சரிகை வேஷ்டிகள் சம்பாவனை. நல்ல 'ஆல்பாக்கா' சட்டை, இடுப்பில் சந்திரனையும் பழிக்கும் கிளாஸ்கோ மல். தகப்பனாரின் கந்தை வேஷ்டி அவருக்கு நினைப்பேயில்லை. பெற்ற தாய் வயிறு எரிகிறதை அவர் பொருட்டாக எண்ணவில்லை.

* * *

அன்னதானமய்யர் அவர்கள் சப் மாஜிஸ்திரேட் ஆனார். வட இந்தியாவிலிருந்து க்ஷேத்திர யாத்திரைக்காகப் புறப்பட்ட ராஜாவை வரவேற்று உபசாரங்களும் சௌகரியங்களும் செய்துகொடுக்க, துரை அன்னதானத்தை நியமித்தார். சில மரியாதைகள், காலத்தின் கொடுமையால்,

அன்னதானமய்யரின் ஞாபகத்துக்கு வரவில்லை. இவர் பேரில், துரையிடம் புகார். துரை விசாரித்தார். துரைக்கும் பொறுக்க முடியாத கோபம். 'டாம்' என்று பல தடவை துரை பிரயோகம் செய்தார். அன்னதானம் முதலில் வாய் திறக்கவில்லை. 'ஈசுவரன் கோபம் கொண்டால், பல ஜன்மங்கள் பிறந்து, நல்ல கதி யடையலாம். துரைக்குக் கோபம் வந்தால் எங்களுக்குப் பிழைப்பு ஏது? அழகான துரை முகத்தில் கோபம் வந்து, அழகைக் கெடுக்கலாமா?' என்று தீனக் குரலில் அன்னதானம் சொன்னார். துரை மனம் குளிர்ந்தது.

* * *

அதோ, எல்லா கிராம உத்தியோகஸ்தர்களும் மற்றவர்களும் சித்திரப் பந்தலில் கூடியிருக்கிறார்களே, ஏன்? துரை ஜமாபந்தியா? இல்லை, இல்லை. தாசில் அன்னதானமய்யரின் மூத்த பெண்ணுக்குக் கலியாணம். ரிவினியூ போர்டு சுந்தரலிங்கமய்யரின் குமாரனுக்குப் பெண்ணைக் கொடுக்கிறார். ஒரே வயிரத்தோடு - ஸ்திரீகளாக இருக்கிறார்களே என்று மலைக்கிறீர்களா? எல்லோரும் தாசில் குடும்பத்தையும் ரிவினியூ போர்டு குடும்பத்தையும் சேர்ந்தவர்கள். இன்றைக்கு ஊர்வலம். ஜமீன்தார் தேவரின் மோட்டார் வண்டியை இட்டுக்கொண்டுவர, டபேதார் சுத்தசிவம் குடல் தெறிக்க ஓடுவது உங்கள் கண்ணில் படவில்லையா?

# ‘ கந்திராட்டு ’ குண்டுப் பிள்ளை

குண்டுமல்லிகையைப் பார்த்திருக்கிறீர்களா ? அதைப் போலவே இருப்பார் குண்டுப்பிள்ளையும்; ஆனால் வாசனை வீசமாட்டார். அவர் பனம்பழம், உருளைக்கிழங்கு இவை களைப் போல இருக்கிறார் என்று நான் சொல்லி யிருக்கலாம். இந்த உவமைகளைத் தமிழ்ப் புலவர்கள் கேட்டால், மனம் நொந்து போவார்களே என்று பயந்து, மல்லிகையைப் பிடித்துக்கொண்டேன்.

ஸ்தோத்திரம் என்பது இல்லாத ஒன்றை உயர்வாகச் சொல்லுவது என்பது வழக்கமாகிவிட்டது. எப்பொழுது ஸ்தோத்திரத்துக்குத் துவக்க நேர்ந்ததோ, ஏன் குறைச்சலாகப் புகழவேண்டும்? உள்ளதை மறைத்தும் மறந்தும், புகழுக்கும் புளுகுக்கும் கொடியேற்றி, திருவிழாச் செய்ய ஆரம்பித்த காலம் முதல், நம்மைப் புலவர்கள் கெடுத்துவிட்டார்கள் என்றால் அவர்களுக்குக் கோபம் வரும். நமக்கு அவர்கள் பொல்லாப்பு எதற்காக?

ஒருவன் வாட்ட சாட்டமாய் இருக்கிறான் என்று வர்ணிப்பது அழகு என்பது ஒரு சம்பிரதாயம். அட்டைக் கறுப்பை, நீலமேகசியாமள வர்ணம் என்று நீட்டி முழக்கிப்

பேசினால்தான், நாக்கில் ருசி தட்டுகிறது. வால்மீகியும் வியாசரும், முழுக் கறுப்பை எவ்வளவோ உயர்த்திப் பேசினாலும், இப்பொழுது, ‘குழந்தை துரை மாதிரி பிறந்திருக்கிறது’ என்று ஸ்திரீகள் சொல்லுகிறார்கள். கறுப்புப் பெண் வேண்டாம் என்று ஆண் பிள்ளைகள் துடிதுடிக்கிறார்கள்.

‘வாட்ட சாட்டத்திலே’ அழகு இருப்பது உண்மைதான். ஆனால் ‘கெட்டிக் குட்டை’யில் அழகு இல்லையா? வலிமை இல்லையா? வாட்ட சாட்டமான வெள்ளை ருஷியர்களை, கெட்டிக் குட்டைப் பழுப்பு ஜப்பானியர்கள், போரில் தோற்கடித்த பின்னர், பந்தாடிய பின்னர், குட்டைக் கெட்டியில் எனக்கு, ஒருவித மோகம். எல்லோருக்குமே மோகம் என்றுகூடச் சொல்லலாம்.

குண்டுப்பிள்ளை ஜப்பானியர் அல்லர், அவர் போருக்குச் சென்று காயம்பட்டவரும் அல்லர். நம் எல்லோரையும் போலவே தமிழ் நாட்டில் பிறந்து வளர்ந்தவர். சண்டை என்பது அசடர்கள் வேலை, முரடர்கள் தொழில் என்ற ஞானப்பாலைக் குடித்து, ஜீரணம் செய்து, வளர்ந்தவர். உயரத்திலே வளரவில்லை; குறுக்கே, கனத்தில் வளர்ந்தார். ஏதோ ஒரு பக்கம் வளர்ச்சி இருந்தது. வளர்ச்சியில்லாமல் வீணாய்ப்போன தேகம் அவருடையதல்ல.

கள்ளியில் அகில் பிறப்பது இயற்கை என்கிறார்கள் பெரும் புலவர்கள். அகிலைக் கடையில் வாங்குவதுதான் நம்மவர் பழக்கம். அது எங்கிருந்து உற்பத்தியாகி வருகிறது என்பதைக் கவனிப்பதில்லை. கவனித்தால், ‘பெருங்காயாம்’ என்று நீட்டிச்சொல்லி விற்பனை செய்யும் மலையாளி

களைக்கொண்டு பெருங்காயம் மலையாளத்தில் விளைகிற பொருளாக்கும் என்று தவருக நாம் முடிவுக்கு வர நேரும்.

காசி ராமேசுவரம் என்று அடுக்கிச் சொல்லுகிற பொழுதும், இதே அவஸ்தைதான். காசியும் ராமேசுவரமும் பக்கத்துப் பக்கத்து ஊர்கள் என்று எண்ணும்படியாக, காசி ராமேசுவரத்தைச் சொல்லி விடுகிறோம். ஆனால் இரண்டுக்கும் நடுவே, 1200 மைல்கள் இருக்கின்றன என்பது நமது மதிப்பில் படுவதில்லை.

குண்டுப் பிள்ளையின் சரிதத்திலிருந்து கள்ளி வயிற்றில் அகில் பிறப்பதும், காசி ராமேசுவரம் ஒன்ருய்ச் சேரவும் கூடுமோ என்று தோன்றுகிறது. மலையையும் மடுவையும் சிலவிடங்களில், சில சமயங்களில், ஒன்று சேரக் காணலாம் என்று சொல்லுகிருர்களே, அதுவும் மெய் என்று நினைக்கலாம் போலிருக்கிறது.

குண்டுப் பிள்ளை சாதாரண நாடோடிக் குடும்பத்தில் பிறந்தவர். நாடு ஓடுவதில்லை என்று உங்களுக்குத் தெரியும். நாட்டிலே, குடும்பங்கள் பிழைப்புத் தேடி, ஒரு கோடிக்கு ஒரு கோடி போகும் என்றும் உங்களுக்குத் தெரியும். இங்கிலீஷ் ராஜ்ய காலத்திலே ஒரு கோடிக்கு ஒரு கோடி போனல், ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ஜீவனத்துக்குத் தவிக்க நேரிடுகிறது என்பது மட்டும் உங்களுக்குத் தெரியாமலிருக்கலாம்.

குண்டுப் பிள்ளையின் குடும்பம் கடைசி இனத்தைச் சேர்ந்தது. ஸர்வே பார்ட்டி, ஒரு ஜில்லாவை விட்டு இன்னொரு ஜில்லாவுக்கு நகர்வதைப் போல, குண்டுப் பிள்ளையின் குடும்பம் செங்கற்பட்டு ஜில்லாவில் ஆரம்பித்து, திருச்சினப்

பள்ளி ஜில்லாவுக்கு வந்து சேர்ந்தது. வழி நடுவிலே, இந்தக் குடும்பம் எத்தனை ஊர்களில் எவ்வளவு காலம் வாழ்ந்து வந்தது என்ற கணக்கு குண்டுப் பிள்ளைக்குத் தெரியாது. அதை அவர் என்னிடம் சொன்னதுமில்லை.

சென்றதைக் குறித்து வருந்தும் கோஷ்டியைச் சேர்ந்தவரல்ல குண்டுப் பிள்ளை. அந்த அந்த நிமிஷத்துத் தொல்லை அந்தந்த நிமிஷத்தோடு போகட்டும், போகவேண்டியது என்ற கொள்கையைக் கொண்டவர் அவர். இதற்கு மறதி ஜாஸ்தி என்ற தப்பர்த்தம் செய்துகொள்ள வேண்டாம். மறதி உள்ளவன் லட்சக் கணக்கில் வரவு செலவை நடத்த முடியுமா?

குண்டுப் பிள்ளை ஏழைக் குடும்பத்தில் பிறந்தவரென்று சொல்லவே வேண்டாம். ஏழைக் குடும்பத்தில் பிறப்பது தான் சாதாரணமாய் எல்லோருக்கும் எளிதான காரியம். பணக்காரக் குடும்பத்தில் பிறப்பதற்கு எத்தனை ஜன்மமோ தவம் கிடக்கவேண்டும் என்கிறார்கள். போயும் போயும் தவம் கிடந்து, பணக்காரனாய் மட்டும்தானா பிறக்கவேண்டும்? பணம் தேடினால் தவங்கிடந்தாற் போலாச்சு. அந்த வேலையைச் செய்யத் துணிந்தார் பிள்ளையவர்கள்.

யோசனை என்னமோ பெரிய யோசனைதான். முன்பணம் போட்டால்தான், பின்னே பணம் விளையும். அந்த முன் பணத்துக்குக் குண்டுப் பிள்ளை எங்கே போக? முன்பணத்துக்குப் பதிலாக, முகவெட்டை உபயோகப்படுத்திக்கொண்டார். இது அவர் மனதறிந்து செய்த சங்கதியல்ல. உண்மையைச் சொன்னால், முகவெட்டு அவரை உபயோகப்படுத்திக்கொண்டது என்று சொல்லவேண்டும்.

## ‘கந்திராட்டு’ குண்டுப் பிள்ளை

குண்டுப் பிள்ளை முதல் முதலாக எஞ்சினீரிங் இலாகாவில் லஸ்கர் வேலை பார்த்தார். ஓவர்ஸீயர் காலாலிட்ட வேலையைத் தமது தலையிலே ஏற்றுச் செய்வார். வேலையில் சுறுசுறுப்பும் முகவெட்டும்தான் அவரது வாழ்க்கையின் மூல தனங்கள். ஓவர்ஸீயரின் குடும்பத்தார் அனைவருக்கும் குண்டுப் பிள்ளையின் பேரில் ஆசை. ‘குண்டுப் பிள்ளை என்றால் என்ன தெரியுமா? குண்டு குண்டென்று ஓடுகிற பிள்ளை குண்டுப் பிள்ளை’ என்பான் ஓவர்ஸீயரின் சின்ன மகன்.

பூசாரி மனம்வைத்தால், தெய்வம் தானே வரம் தரும். ‘வரம் அருள்வாய்’ என்று வேண்டிக்கொள்ளும் திண்டாட்டம் தேவையில்லை. ஓர்சுஅய்யா (ஓவர்ஸீயர்) மனம் வைத்தபின், குண்டுப் பிள்ளைகளின் அதிர்ஷ்டம் பொங்குவதற்கு என்ன தடை! எஞ்சினீரிங் இலாகாவே தமக்குச் சொந்தம் என்ற நினைப்பு சிரமமில்லாமல் ஏற்பட்டுவிட்டது.

குண்டுப் பிள்ளையை லஸ்கர் வேலையில் நீண்ட காலம் வைத்திருப்பதில் ஓவர்ஸீயருக்கு இஷ்டமில்லை. ‘ஏ குண்டு! லஸ்கர் வேலையில் மடிவதாக உத்தேசமா?’ என்றார் ஓர்சு. ‘என் தலையெழுத்து எஜமான் கையில் இருக்கிறது. நான் அதிகமாகச் சொல்ல என்ன இருக்கிறது? எஜமான் மனசு எப்படியோ, அப்படித்தான் குண்டுவினுடையதும்’ என்று சமத்காரமாய் குண்டுப் பிள்ளை பதில் சொல்லி விட்டார்.

முதன் முதலாக, ரோட்டு ரிப்பேர் கந்திராட்டு (கண்ட்ராக்ட்); பிறகு ஆற்றின் கரையில், மணலில் நாணல் குத்துகிற ஒப்பந்தம். பிறகு நாற்றுக்குமேல் ஊற்று. பிறகு...

பிறகு...நான் ஏன் இடத்தை அடைத்து எழுத வேண்டும்? உங்களுக்கும் கொஞ்சம் வேலைதான் இருக்கட்டுமே. உங்கள் ஊர் கண்டிராக்டர் ஒருவரை நினைத்துக்கொண்டு, கற்பனையையும் அனுபவத்தையும் பூர்த்தி செய்துகொள்ளக்கூடாதா?

குச்சு வீடு, மச்சு வீடு, மெத்தை வீடு, பங்களா இவைகள் குண்டுப் பிள்ளைக்கு வரிசைக் கிரமமாக நேர்ந்த குடியிருப்பு வசதிகள். மிராசுதார், பண்ணை, பெரிய பண்ணை முதலியன அவருக்கு ஏற்பட்ட 'பூமி அதிர்ஷ்டங்கள்'. பட்டத்திலே திவான் பகதூர் வரையிலும், இதுவரை, முட்டிப் பார்த்துவிட்டார். மேலே நடக்கப்போகிற சம்பவங்கள் எனக்குத் தெரியாது. அவருக்கும் தெரியாது.

'நம்ம ஆட்களைப் பிடித்துக்கொள்ளுவதுதான் கஷ்டம். துரையிங்களைப் பிடிப்பது கஷ்டமேயில்லை. நம்ம ஆட்கள்தான் எதையும் துளைத்துத் துளைத்துப் பார்ப்பார்கள். ஆனால் அவர்கள் வாயையும் கையையும் கட்ட வழியிருந்தால், வழி தெரிந்தால், போதும். பிறகு அவர்கள் எப்பொழுதும் கிஷ்டையிலேதான் இருப்பார்கள். பிறகு நாம் வைத்ததுதான் சட்டம்' என்று குண்டுப் பிள்ளை சொல்லுவதைக் கூட்டிக் குறைக்காமல் உங்களிடம் சொல்லிவிட்டேன். என்னை, ஆளை விட்டுவிடுங்கள்.

'துரைகளுக்கு என்ன தெரியும்? அவர்கள் கொண்டு வந்த முதல் பாழாய்ப் போகுமா? நீட்டின இடத்தில் கையெழுத்துப் போடுவார்கள். அவர்கள் வேலையைப் பார்க்க வருகிறபோது, கொஞ்சம் உஷாராக இருக்கவேண்டும். நல்ல மாதிரியாக சலாம் போடவேண்டும். கிசுமிசுப் பண்டிகையில் தட்டாமல் பார்க்கவேண்டும்' என்பார் குண்டுப் பிள்ளை. அவர் பாடு, உங்கள் பாடு. நான் குறுக்கே வரவில்லை.

## வாத்தியார் நாணுவய்யர்

‘ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி’ என்பது முன்காலத்து நாகரிக தோரணைப் பேச்சு. மதிப்பு படைத்தாமாயிருப்பதற்கு, பிள்ளையார் கோவில் ஆண்டி அத்தாட்சி. மதிப்புக்கு முதுகு கொடுத்துத் தூக்குபவன் அவனே என்பது பண்டைக் காலக் கதை. அவனுக்கும் இளைத்தவர் பள்ளிக்கூட வாத்தி. பண்டாரத்துக்கும் கீழே போன வாத்தியார் அனுதாபத்துக்கு உரியவரே.

விஷ்ணுவின் நாபிக் கமலத்திலே தோன்றியவர் பிரம்மா. பிரம்மாவின் நாவிலே வீற்றிருப்பவள் சரஸ்வதி. சரஸ்வதியின் பிரதிநிதிகள் வாத்திமார்கள். வாத்திமார்களின் பரம்பரை, நல்ல உயர்ந்த பரம்பரைதான். ஆனால் பாரம்பரைப் பெருமை என்பது பழைய காலத்துச் சங்கதி. பரம்பரையைப்பற்றிப் பேசுவது இக்காலத்தில் இகழ்ச்சிக்கு உரித்தானதாகும்.

நாணுவய்யரின் குடும்பம் ஏழைக் குடும்பம். ‘ஏழையைக் கண்டால், மோழையும் பாயும்’ என்பார்கள். மேலும் நாணுவய்யரோ வாத்தியார்! மேலே நடப்பதைப் பற்றிக் கேட்பா

னேன்? ஊருக்கு, பொழுதுபோக்கும் பேச்சுப் போக்கும் நாணுவய்யர் என்று சொன்னால் போதாதா? விஸ்தாரமாக வேண்டுமென்றால் அடுத்து வரும் பாராக்களைப் பாருங்கள். படியுங்கள். என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள்.

வெள்ளைக்கார நாகரிகத்தின் சுவாரஸ்யம் என்னவென்றால், மேலே யிருப்பவர்கள் எல்லோரையும் கீழ் நின்று சுமப்பவன் ஏழையா யிருப்பான். மூளை வேலை, கை வேலை என்ற பாகுபாட்டின் சேஷ்டை இது. கை வேலை செய்பவனது ஊதியத்துக்குக் கூலி என்று பெயர். மூளை வேலையின் சம்மானத்துக்குச் சம்பளம் என்று பெயர். பள்ளிக்கூட வாத்தியாரின் வருமானத்தைக் கூலிச் சம்பளம் என்று சொல்லுவதா, அல்லது சம்பளக் கூலி என்பதா? ஆழ்ந்த யோசனை தேவை!

நாணுவய்யரின் கையின் பெருமையைப்பற்றிச் சொல்லத் தேவையில்லை. அவரது வலது கைவிரல்களை அவருடைய கையிலே காணவேண்டு மென்பதில்லை. பையன்களுடைய கன்னங்களில், ஐந்து விரல்களையும், ரேகைகள் உள்பட, விளக்கமாகக் காணலாம். இவ்வளவு திறமையுடன் கையை உபயோகிக்கும் நாணுவய்யருக்கு, பட்டாளத்துச் சிப்பாயின் சம்பளத்துக்குக் கொஞ்சம் குறைவு. இருபது ரூபாய்க்குள் அடக்கம்.

அவருடைய மூளையோ, சதா கொதித்துக்கொண்டேயிருக்கும். அப்படியே உருகி வழிந்து, வெளியே வந்துவிடுமோ என்று எனக்குப் பயம். இதைப்பற்றி அவருக்குத் துளிகூடப் பயம் கிடையாது. கொதிப்படைந்த மூளையின் உதவியைக்கொண்டு, அவர் பையன்களுக்கு எதை வேண்டு

மானாலும் சொல்லிக் கொடுப்பார். அவரை யார் கேள்வி கேட்க முடியும்?

'பூமி உருண்டையா தட்டையா?' என்று நாணுவய்யர் பையன்களைக் கேட்பார். 'உருண்டை' என்பான் ஒருவன். 'இல்லை, ஸார் தட்டை' என்பான் இன்னொருவன். 'ஒருத் தருக்கும் தெரியாது, ஸார்!' என்பான் மூன்றும் பையன். 'பூமி உருண்டையாயிருந்தால், நாமும் உருண்டுகொண்டே போகவேண்டும், ஸார். நாம் காலாலே நடக்கிறோம். பூமி தட்டை, ஸார்!' என்று இன்னொருவன் காரணத்தோடு பதில் சொல்லுவான். 'ராத்திரிச் சோற்றுக்கு வழியில்லாதவர் களுக்கு, பூமி எப்படியிருந்தால் என்ன?' என்று வீட்டை நினைத்துக்கொண்டு, நாணுவய்யர் முணுமுணுப்பார். 'ஆமாம்' என்று துடுக்காய் ஆமோதித்த பையனுக்குப் பிரப்பம்பழம்.

பார்லிமெண்டு சபையிலே போடுகிற கூச்சலைப் பொறுக்க முடியாது என்பார்கள். சால்வதியைக் கைப்பிடி யாய்ப் பிடித்துக் கொண்டுவர முயலும் பள்ளிக்கூடத்துப் பேரிரைச்சலை, யாரால்தான் பொறுத்துக்கொண்டிருக்க முடி யும்? 'வாத்தியார்களுக்கு, இந்தப் பொறுமையைக் காண் பிப்பதற்காகத்தான் சம்பளம், அவர்களுடைய போதனைக் கல்ல' என்று சொன்னால், நாணுவய்யர் பையன்களை நம் பேரில் ஏவிவிட்டாலும் விடக்கூடும். எதற்கும் நாம் ஜாக்கிரதையாக இருப்பது உத்தமம்.

'எதற்கும் தோதில்லாதவன், பள்ளிக்கூட வாத்தி வேலைக்கு லாயக்கு' என்பது பலபேர்களுடைய சித்தாந்தம். இந்த முடிவுக்கு நாணுவய்யர் விலக்கல்ல. நாணுவய்யர் அவ ரது ஐந்தாவது பிராயத்திலே, பள்ளிக்கூடத்தில் வைக்கப்

பட்டார். வைக்கப்பட்டார் என்பதைக் கேட்டு, பள்ளிக் கூடத்தை ஜெயில் என்று நினைத்துக்கொள்ளலாகாது. பள்ளிக்கூடத்தில், வைத்த இடத்தைவிட்டு மாறுவதற்கு நாணுவய்யருக்கு மனமே யில்லை.

இடமோஹினி அவரைப் பிடித்துக் கொண்டதோ, என்னவோ! பின்காலத்தில், இதை நாணுவய்யர் ரொம்ப விமரிசையுடன் பேசுவார். 'அட்டைக் கிளாஸிலே இரண்டு வருஷம்; குட்டைக் கிளாஸிலே இரண்டு வருஷம்; மொட்டைக் கிளாஸிலே......' என்று அர்த்தமில்லாமல் அடுக்கிக் கொண்டே போவார். பிராஸம் போட்டுப் பேசினால், அது கவிதை என்று பாமர ஜனங்களும் பையன்களும் மயங்கிப் போவார்களாம்!

நாணுவய்யரின் அஸ்திவாரப் படிப்பு ரொம்பக் கெட்டியானது. எந்த வகுப்பிலும் அவர் இரண்டு வருஷத்துக்குக் குறைந்து இருந்ததே இல்லை. எனவே, அஸ்திவாரம் பலப்பட்டிருப்பதைப்பற்றி வர்ணிக்கவா வேண்டும்? பத்து வருஷம் படித்தார். ஐந்து வகுப்புக்கள் தாண்டினார். ஹனுமார் இலங்கைக்குத் தாண்டுவதற்குக்கூட இவ்வளவு கஷ்டப்பட்டிருக்கமாட்டார். அலுப்புத் தாங்கமாட்டாமல், பெற்றோர்கள் நாணுவய்யரை ஜவுளிக் கடை வேலைக்கு அனுப்பினார்கள். பெண்களின் நாகரிகப் புதுச் சேலைகளைத் தொட்டு மடித்ததுதான் நாணுவய்யருக்கு மிச்சம்.

மறுக் கலப்பில்லாத மடமையைக் கண்டு யார்தான் அலுத்துச் சலித்துப் போகமாட்டார்கள்? குழந்தைகளின் மடமை நிறைந்த சொற்களை, பெற்றோர்கள் மழலைச் சொற்களாகக் கருதி மகிழலாம். மற்றவர்கள் அவ்வாறு செய்ய

வேண்டும் என்பதுண்டா? நாணுவய்யருக்கு வீட்டிலே சோறு தண்டம்; வெளியிலே வேலை அதைவிடத் தண்டம்; பைசாவுக்குப் பிரயோசனமில்லை.

ஜவுளிக் கடைக்குப் போதாத சாமர்த்தியத்தைக் கொண்டு, நாணுவய்யர் வக்கீல் குமாஸ்தா வேலைபார்த்துச் சம்பாதிக்கலாம் என்று எண்ணினார். 'என்னமது சாமி நீ அறியாததோ?' என்று தாயுமானவர் புலம்பிய கதிதான் நாணுவய்யருக்கும் ஏற்பட்டது. ஜவுளிக் கடைக்கு அரை குறையான பொய் போதும். வக்கீல் குமாஸ்தா வேலைக்கு நிஜமே கலப்பிருக்கலாகாது என்கிறார்கள். புத்திசாலித்தனம் என்றால் என்னவென்று நினைக்கிறீர்கள்? பொய் சொல்லுவதற்குத்தான் புத்தி என்று பெயர். நிஜம் பேசுவதற்குத் தைரியம் வேண்டும். நாணுவய்யருக்கு இந்த இரண்டு இனங்களும் பூஜ்யம்.

'பட்டி மேச்சல்' மேய்ந்து, கொட்டிலிலே வந்து படுத்துக்கொள்ளுகிற மாட்டை, உலகில் தட்டிக் கொடுப்பார்கள். கட்டுத் தறையில் இருந்துகொண்டு, வைக்கோலைப் போர் போராய் உள்ளே தள்ளும் மாட்டின்பேரில், சொந்தக்காரனுக்குக்கூட அன்பு இருக்காது. நாணுவய்யரிடம் பெற்றோர்களுக்கு எப்படிப் பிரியம் இருக்கும்? நாணுவய்யர் வீட்டுக்கும் பாரம்; பூமிக்கும் பாரம். அவர் என்ன செய்வார், பாவம்!

'சண்டி மாட்டை அடித்தால், மற்ற மாடு தானாக ஓடும்' என்று குடியானவர்கள் சொல்லுவார்கள். அதைப் போல நாணுவய்யர் வேலை செய்தார். ஒவ்வொரு தொழிலுக்கும் ஒன்றிரண்டு மாதம் கௌரவம் கொடுத்துப் பார்த்தார். நாணுவய்யர் ஒவ்வொரு தொழிலையும் முரட்டு அடியாக அடித்து

கிழித்ததுமே, வாத்தியார் தொழில் 'குடுகுடு' வென்று கிட்ட ஓடிவந்தது. நாணுவய்யர் அதைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டார். பிடி குரங்குப் பிடிதான். வாத்தியார் வேலை அவரை விட்டுத் தப்பியோட முடியவில்லை.

எப்போதுமே, 'ஊமைக்கு உளறுவாயன் சண்டப் பிரசண்டன்'. எழுத்து வாசனையில்லாத ஐந்து வயதுக் குழந்தையைக் காட்டிலும் நாணுவய்யர் எவ்வளவோ உயர்ந்தவர்! சந்தேகமென்ன? சந்தேகமிருந்தால் அவர் பத்து வருஷக் காலமாக வாத்தியாராக இருந்திருக்க முடியுமா? நாணுவய்யர் சொல்லுவது பையன்களுக்குத் தெரியாது. பையன்கள் சந்தேகம் கேட்பது வாத்தியாருக்குப் புரியாது.

'வாத்தியாரே! வீட்டிலே பையன் செய்கிற விஷமம் தாங்க முடியவில்லை. அவனை இங்கே மறித்துப் போட்டு வையுங்கள்' என்று பெற்றோர்கள் சொல்லுவது உங்களுக்கு நன்றாக ஞாபகமிருக்கும். பள்ளிக்கூடத்தில் என்ன வேலை நடக்கிறது என்பது பெற்றோர்களுக்கு நன்றாகத் தெரியும். பள்ளிக்கூடத்தில் வேலை இன்னதென்று நாணுவய்யருக்குத் தெளிவாய்த் தெரியும். நாணுவய்யரும் ஊராரும் ஒத்துப் போகிற விஷயத்தில் நாம் ஏன் தலையிடவேண்டும்?

நாணுவய்யரின் இந்த வேலைதான் எளிது என்கிறீர்களோ? அதை ஏன் கேட்கிறீர்கள்? ஜெயிலர் வேலைகூடக் கஷ்டமில்லை. சிறைக் குற்றவாளிகள் வயது வந்தவர்கள். அவர்களைத் தண்டித்துக் கொட்டத்தை அடக்கிவிடலாம். குழந்தைகளை அவ்வாறு அடக்க முடியாது. இந்த நிமிஷத்து அடி, அடுத்த நிமிஷத்தில் மறைந்துபோகும். ஒரு பையனுக்குக் கொடுத்த தண்டனையைப்பற்றி, மற்றப் பையன்

களுக்குக் கவலையே இருக்காது. மறதி மிகுந்து, கவலையில்லாத குழந்தைகளைக் கட்டி மேய்க்கும் வாத்தியாருக்கு எத்தனை லட்சம் வேண்டுமானாலும் சம்பளமாகக் கொடுக்கலாம்.

நாணுவய்யர் இன்ஸ்பெக்டரை ஏய்க்க மட்டும் எப்படியோ கற்றுக்கொண்டிருக்கிறார். எல்லாப் பையன்களும் நேற்றுத் தான் பள்ளியில் வந்து சேர்ந்தார்கள் போலத் தொனிக்கும் படியாக, இன்ஸ்பெக்டரிடம் சமாதானம் சொல்லுவார். ‘குடியானவர்களின் குழந்தைகள்; அவர்கள் தினம் தினம் பள்ளிக்கூடத்துக்கு வரமாட்டார்கள்’ என்று சொல்லிக் கொண்டே, நாணுவய்யர் இன்ஸ்பெக்டருக்கு வெற்றிலை மடித்துக் கொடுப்பார். இன்ஸ்பெக்டர் தமது சிவந்த நாக்கை நீட்டிப் பார்ப்பார். பிறகு நாணுவய்யரை யார் என்ன செய்ய முடியும்?

என்ன சொன்னாலும், நாணுவய்யர் அருமையான மனிதர். அவருக்கு அதிருப்தி என்பதே கிடையாது. கிடைத்ததைக் கொண்டு ஜீவனம் செய்பவர். விதியைக் கூட நோகாதவர். எப்படியாவது காலத்தைப் போக்க வேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிற கோஷ்டியைச் சேர்ந்தவர். உலக விவகாரம் அவருக்குத் தெரியாது. ‘தேவையுமில்லை’ என்பார். அவர் சொல்லுக்கு அப்பீல் ஏது?

ஆனால் அவருக்கு ஒரே ஒரு மனக்குறை. பள்ளியிலே அவர் கியாதி வாய்ந்தவரா யிருந்தாலும், வீட்டிலே அவருக்குச் செல்வாக்குக் கிடையாது. அங்கே ராணி ராஜ்யம்தான். வீட்டிலே வாய் திறக்கமாட்டார்; வாய் திறப்பதற்கு, அவரையும் வீட்டையும் சேர்த்து ஆட்டி நடத்திவரும் உத்தம மனைவி, அவருக்கு இடங் கொடுப்பதில்லை. இந்தக் குறை நீங்குவதற்கு, நாணுவய்யர் அடுத்த ஜன்மத்தை நம்பிக் கொண்டிருக்கிறார்.

# அங்காடிக் கூடை லட்சுமி

அங்காடிக் கூடை என்றால் நகரவாசிகளுக்குத் தெரியாமலிருக்கலாம். அப்படியிருந்தால் எங்களூர் அங்காடிக் கூடை லட்சுமியை அவர்களுக்கு ஒருநாளும் தெரியாது. மார்க்கெட் பிரபலப்படாத காலத்தில், அங்காடிக் கூடை தான் பிரசித்தம். காய்கறிகளைக் கூடையில் சுமந்து, கிராமம் கிராமமாய்ப் போய் விற்பவர்களுக்கு அங்காடிக் கூடைக்காரிகள் என்று கிராமத்திலே பெயர்.

அங்காடிக் கூடை விற்பனையில், ஆண் பிள்ளையைப் பார்க்க முடியாது. அங்காடித் தொழில், ஆண் பிள்ளைகளுக்கு ஈனத் தொழில் என்று அர்த்தமன்று. அவர்களால் செட்டாக விற்கமுடியாது. சில்லறைச் சாமான்களைப் பொறுமையுடன் வியாபாரம் செய்வதற்கு, ஆண்பிள்ளைகளுக்குத் தெரியாது என்ற காரணமோ, என்னவோ? பெண்களுக்குப் பொறுமை உண்டு, செட்டு உண்டு என்று புராணங்கள் கூட முறையிடுகின்றனவே!

கால் ரூபாய்ச் சாமான்களுக்கு முக்கால் ரூபாய் விலையாக விற்கும் அருமையான சாமர்த்தியம் அங்காடிக் கூடைக்காரி

களுக்குத்தான் உண்டு. அந்த வித்தை குருவில்லா வித்தை என்றுதான் சொல்லவேண்டும். அது செயற்கை சாமர்த்தியமாக இருக்க முடியாது. இயற்கை அறிவுக்குப் பொருமைப்பட்டாலும், கைகூடாது; சம்பளம் கொடுத்து விலைக்கு வாங்கவும் முடியாது.

அங்காடிக் கூடையைச் சோதித்துப்பார்த்தால், ரொம்ப விநோதமான சாமான்கள் அகப்படும். ஓர் இடத்திலே கத்தரிக்காய், ஒரு கும்பலிலே வெண்டைக்காய், மற்றொரு பக்கத்தில் அவரைக்காய், சிறிய துண்டில் பச்சைக் கொத்தமல்லி, கருவேப்பிலைக் கொத்தில் ஐந்தாறு, வறுத்த நிலக்கடலை, வெங்காயத்திலே கொஞ்சம், வாழைப் பழத்தில் இரண்டொரு சீப்புகள், அரிநெல்லிக்காயில் அறுபது எழுபது, ஒரு சுண்டு, ஒரு படி, ஒரு கோணிச் சாக்கு — இன்னும் எத்தனை சாமான்களோ அகப்படும்.

லட்சுமி இந்த சாமான்களை விலை கூறிக்கொண்டு வருகையில் வேடிக்கை செய்வாள். மற்றெல்லாச் சாமான்களையும் முதலிலே கூறிவிட்டு, கடைசியாக 'நிலக்கடலை, வாழைப் பழம், அரிநெல்லிக்காய்!' என்று முடிப்பாள். சில சமயங்களில், இல்லாத இலந்தைப் பழத்தையும் சேர்த்துச் சொல்லுவாள். இந்தக் கடைசிச் சாமான்களை, அவள் நிறுத்தி நீட்டிச் சொல்லும் அழகே அழகு! ஏன் நீட்டிச் சொல்லவேண்டும்? குழந்தைகளுக்காக என்று உங்களுக்குத் தெரியாதா?

கடைச் சாமான்கள் விற்பனை போகவேண்டுமானல், கடைக்காரன் குழந்தைகளைப் பிடித்தால்தான் காரியம் சாயும். உலகத்திலே எல்லாக் குழந்தைகளும் ஒன்றுபோலத்தான்.

எல்லாத் தாய்மார்களும் அப்படியே. குழந்தைகள் வேண்டும் பண்டங்களை வாங்கிக் கொடுக்காத தாய்மார்களும் உலகத்தில் இருப்பார்களா? அவ்வளவு கடின சித்தம் படைத்த தாய்மார்களை பிரம்மா இன்னும் சிருஷ்டி செய்ததில்லை என்றுதான் சொல்லவேண்டும்.

தெருக் கோடியில் லட்சுமி கூவுகிற சத்தம் வீட்டுப் பெரியவர்கள் எவருக்கும் காதிலே கேட்காது. படிக்கிற பையன், வீடு பெருக்கிக்கொண்டிருக்கிற பெண் குழந்தை, யானையை இழுத்துக்கொண்டிருக்கிற சின்னப் பயல் — இவர்கள் காதுகளிலேதான் முதலிலே லட்சுமியின் குரல் கேட்கும். கேட்டபின், போட்ட சாமான் போட்ட இடத்திலேயே கிடக்கும். வீட்டுக்கு வெளியே ஓடி வந்துவிடுவார்கள்.

'யச்சுமி!' என்பான் யானை ஓட்டும் சின்னப் பயல். 'வாடாப்பா ராசா, வாடா தங்கமே!' என்று வாய்நிறைய வாழ்த்துவாள் லட்சுமி. வாழ்த்துவது மட்டுமா? உடனே ஒரு கடலையை உடைத்து, பருப்புக்களை வாயில் திணித்து ஊட்டுவாள். சின்னப் பயலுக்குப் பரமானந்தம். பெரிசு இரண்டும் விழித்துக்கொண்டிருக்கும். பெரிய பையன், 'லட்சுமி! எனக்கு ஒரு கடலை!' என்று ஸ்வரம் போட்டுக் கேட்கத் துவக்குவான். 'எனக்கு ஒன்று கொடுக்கமாட்டாயா?' என்பாள் பெண். 'அது ராசா. பச்சைப்பிள்ளை. அது வாயாலே கேக்குது. கொடுக்காட்டி பாவம்!' என்பாள் லட்சுமி.

பெரிசு இரண்டும் கஜகர்ணம் போட்டுப் பார்த்தாலும் லட்சுமியிடம் காரியம் பலிக்காது. லட்சுமி என்றால் எல்லாருக்கும் சலுகை ரொம்ப ஜாஸ்தி. பெரிய பையன் சும்மா

இருப்பானு? உடனே கூடையில் கை போடுவான். 'நல்ல வேளையடாப்பா! அதோ வந்துட்டாரு உங்கப்பா!' என்று அவள் சொல்லி முடிப்பதற்குள், பெரிசு இரண்டும் திரும்பிப் பார்க்காமல், வீட்டைப் பார்க்க, சவாரி வைத்துவிடுவார்கள். மறுபடியும் தன் சாமான்களை விற்பனைக்காக லட்சுமி கூவுவாள்.

பக்கத்திலிருக்கும் யானை ஓட்டிப் பயல் இன்னொரு கடலை வேண்டுவான். 'கை நொம்பத் தாரேன், உங்க அம்மாவைக் கூட்டியா!' என்று உதட்டு வாழைப்பழம் உள்ளே போகும்படியாக லட்சுமி சொல்லும்பொழுது, படம் பிடித்து, ஸினிமா ஆக்டர்களுக்குப் பரிசாக அனுப்பலாம். தீஞ்சுவை நிறைந்த கவிதை எங்கேயோ இருப்பதாகப் புலவர்கள் சொல்லுகிறார்கள். அங்காடி லட்சுமியின் நாவிலிருந்து உதிரும் தீஞ்சுவைக் கவிதையை அவர்கள் கண்டறிந்திருக்க மாட்டார்கள்.

இரண்டோடு மூன்று; சின்னப் பயலும் வீட்டுக்குள் விழுந்தடித்து ஓடுவான். பெரிய குழந்தைகள் போட்டுக் கொண்டிருக்கிற சத்தம் தாயாரின் காதில் விழவே விழாது. ஆனால் சின்னப் பயல் அழுதுகொண்டே வீட்டுக்குள் நுழைந்தவுடனே, தாயார் பதறிக்கொண்டு ஓடி வருவாள். 'கண்ணே! ஏண்டாப்பா! யார் உன்னை அடித்தது?' என்று அபயக் குரலுடன் வாரிச் சுருட்டி, அவனை இடுப்பில் ஏற்றிக் கொண்டு, பின், மார்போடு அணைத்துக்கொள்ளுவாள். போக்கிரிச் சின்னப்பயலோ, அழுகையை நிறுத்தமாட்டான். 'கண்ணே, அழாதே, சொல்லு' என்று சமாதானப்படுத்துவாள் அன்னை. தட்டித் தடவி, 'தடலே' என்பான் சின்னப் பயல்.

'சூன்யக்காரி லட்சுமி வந்துவிட்டாளா?' என்று தாய் சொல்லுகிற அற்புத அழகை, நேரில் கேட்டால்தான் அனுபவிக்க முடியும். ஏதோ 'பிள்ளை பிடிக்கிற மோசக்காரி' வந்துவிட்டாற்போலப் பேசுவாள். ஆனல் சின்னப் பயலோ, தன் அழுகை ஸ்வரத்தை நிறுத்தவே மாட்டான். சின்னப் பயல் அழ அழ, பெரிய குழந்தைகள் இரண்டுக்கும் கொண்டாட்டம். கடவுளின் சீர்வரிசைகளான குழந்தைகள் சகிதமாய், தாய் வீட்டுக்கு வெளியே வருவாள்.

'இந்தக் கூதல் காலத்திலே, நீ கடலையைக் கொண்டு வந்து இப்படிக் குழந்தைகளை இம்சை செய்யலாமா? வயிற்றுப் போக்கு வந்தால், எந்த வைத்தியன் கிட்ட இருக்கிறுன்? லட்சுமி! நீ பண்ணுகிற தொல்லை கொஞ்ச நஞ்சமில்லை' என்று தாய் அழுதுகொண்டே பேசுவாள். 'நல்லாத்தான் சொன்னே! நம்மூரிலே விளைகிற கடலை உடம்புக்கு என்ன பண்ணும்? கடலை வேண்டாம்னுக்கா, அரிநெல்லிக்காய் இருக்கு!' என்பாள் லட்சுமி. 'அரிநெல்லி உடம்புக்குப் பித்தம்' என்பாள் தாய். 'நல்ல பண்டமெல்லாம் உனக்கு உடம்புக்கு ஆகாது' என்று கூடையைத் தூக்குவதாக லட்சுமி பாவனை செய்வாள்.

ஆனல் சின்னப் பயல் லேசிலே விட்டுவிடுவானு? உடனே உச்ச ஸ்தாயியில் பிடித்துவிடுவான் அழுகையை. லட்சுமிக்கும் தனக்கும் இவ்வாறு அவமானம் வருவதை, அவன் பொறுத்துக்கொண்டு இருப்பானு? பொறுத்துக் கொண்டிருக்க முடியுமா? இதன் பிறகும் தாய் படிந்து போகாமலிருக்கமுடியுமா? 'என்ன! அவசரப்படுகிறுயே? கூடையைக் கீழே இறக்கு!' என்பாள் தாய். சின்னப்

பயல் அழுகையும் ஒருவாறு ஓயும். லட்சுமியின் முகமும் சிறிது மலர்ச்சி யடையும்.

கிராமத்திலே காசு கொடுத்து, கறிகாய் சாமான்களை வாங்கும் வழக்கம் கிடையாது. தினப்படி வேண்டியதற்கு, அவர்கள் நெல்லோ, அரிசியோ கொடுத்து வாங்குவார்கள். மேலும், கிராமத்துப் பெண்களின் கையில் ரொக்கப் பணம் அகப்படுவது அருமை. தங்கள் வசம் இருக்கும் சாமானைக் கொண்டுதானே, அவர்கள் இன்னொரு சாமானை வாங்க முடியும்? நெல், அரிசி இதில் ஒன்றைக் கொண்டு பேரம் செய்யத் துவக்குவாள் தாய்.

'கடலை எப்படி விலை சொல்லுகிறாய்?' என்று கேட்டால், 'நெல் இரண்டுக்கு ஒன்று; அரிசி சரிக்குச் சரி' என்பாள் லட்சுமி. 'என்ன, இப்படிக் கருமாயமாய் (கிராக்கி யாக) விலை கூறுகிறாயே! இது நியாயமா?' என்றால், 'இந்தக் கூடையை விற்றுத்தானே, நாங்கள் வயிறு பிழைக்க வேண் டும்? நாங்கள் பணத்தைக் கொண்டுபோய் என்ன செய் கிறது? உன் தங்கக் கையாலே வாங்கினால், என் கூடை முழு தும் அரிசி ரொம்பிப் போகுமே!' என்பாள் லட்சுமி.

தங்கக் கையை வைத்துக்கொண்டிருக்கும் தாயாருக்குச் சந்தோஷம் வராமல் என்ன செய்யும்? 'முதலிலே, உன் ராசிக் கை என் கூடையைத் தொட்டாலே போதுமே! என் கலி தீர்ந்துபோய்விடுமே! சீமாங்க வீட்டிலே இவ்வளவு யோசனை பண்ணினால், நாங்க போகிற கதி என்ன?' என்று லட்சுமி எவ்வளவு பிரிய வசனத்துடன் பேசுவாள், தெரியுமா? சொக்கவைக்கும் அவளுடைய பேச்சுக்கு இரங் காத மனமும் இருக்குமா? இதற்குள் சின்னப் பயலும்

தாமதம் பொறுக்க மாட்டான். அவனுடைய இணையற்ற பாசுபதாஸ்திரம் அழுகைதானே !

லட்சுமி சொல்லுகிற கடலையும் அரிநெல்லிக் காயும் இரண்டு பைசாக்கூடப் பெறமாட்டா. ஆனால் அவள் கேட்கிற அரிசி, நெல் விலையோ, ஆறு தம்படிக்கு அதிகமாக இருக்கும். இதை நயமாய்ச் சொல்லுகிற ஸ்வாரஸ்ய சாமர்த்தியம் லட்சுமிக்குத் தனிச் சொந்தம். சின்னப்பயல் அழுகை ஒரு பக்கம், தட்டமுடியாத லட்சுமி ஒருபக்கம் — இவர்கள் இருபுறமும் வளைத்துக்கொண்டால், தாயார் என்ன செய்வாள் ? குழந்தைகள் கேட்பதை, லட்சுமி சொல்லுகிற விலையைக் கொடுத்து வாங்கித்தான் தீரவேண்டும்.

இந்த வீட்டிலேதான் லட்சுமி இம்மாதிரி செய்கிறாள் என்று நினைக்க வேண்டாம். வீட்டுக்கு வீடு தங்கக் கைதான் ; வீட்டுக்கு வீடு கைராசிதான். வீட்டுக்கு வீடு ராசாதான். என்ன செய்தாலும், அவள் கூடை நிறைய நெல்லையாவது அரிசியையாவது கண்டதில்லை. முழுச் சேலை கட்டியதில்லை. புதுச் சேலை எத்தனை வருஷங்களுக்கு ஒரு தரமோ ! என்னமோ, வயிறு வளர்த்துக்கொண்டு வருகிறாள்.

# மந்திரி பதி

பதியின் முழுப் பெயர் பசுபதி. அழகுக்காகவும் உச்சரிப்புச் சிக்கனத்துக்காகவும் பசுபதி அவர்கள் தமது பெயரைப் பதி என்று சுருக்கிக்கொண்டார். ஆனால் தான் ஒன்று நினைக்க, தெய்வம் ஒன்று நினைக்கும் என்ற பழமொழி யிருக்கிறதே! வேலையில்லாமல் அது மைல் கல்லைப் போல நிற்க முடியுமா? பசுபதி தாம் ஒன்று நினைக்க, ஏனைய மனிதர்கள் வேறொன்று நினைக்கும்படியாக அந்தப் பழமொழி செய்துவிட்டது.

'காந்தி' என்ற ஒளியும் அழகும் நிறைந்த பெயரை இங்கிலீஷ்காரர்கள் 'காண்டி' என்று அவலட்சணமாக எவ்விதம் உச்சரிக்கிறார்களோ, 'காளி கட்டம்' என்ற காரணப் பெயர் அழகும் பொருளும் மாறி, எப்படி 'கல்கத்தா' ஆயிற்றோ, அதே கதி 'பதி' என்ற சிக்கனப் பெயருக்கும் நேர்ந்தது. 'பதி' என்றதைப் 'பாதி' என்றும் 'பாடி' என்றும் அவருடைய இங்கிலீஷ் நண்பர்கள் உருப் பிரியாமல் மாற்றி உச்சரிக்கத் தலைப்பட்டார்கள். அன்பு மிகுந்த அந்நிய நாட்டுக் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் பசுபதியின் பூரணப்

பெயரை உச்சரிக்க ஆவல்கொண்டு, 'பாசுபாடி' என்று தங்கள் பற்களுக்கிணங்க, மாற்றிக்கொண்டார்கள்.

'வெள்ளிக் கரண்டிமுட்டையை வாயில் வைத்துக் கொண்டு பிறந்தவன்' என்று இங்கிலீஷில் ஒரு தொடர் உண்டு. அதற்கு, தனவந்தன் வீட்டில் செழுமையுடன் பிறந்தவன் என்று அர்த்தம். சீமையிலே சீமான் வீட்டுக் குழந்தைகள் வெள்ளி 'ஸ்பூ'னை வாயில் வைத்துக்கொண்டு பிறக்கின்றன என்று நாம் தவருக எண்ணிவிட வேண்டாம். அங்கும் பத்து மாதம் கர்ப்பம்தான். எல்லாம் நம்மைப் போலவே என்று சொல்லிவிட்டால் போதுமல்லவா? நம்முடைய பதி, தனவந்தர் வீட்டில் திரு அவதாரம் செய்த வர். பிற்காலத்தில் பதி மந்திரி ஆகப் போகின்றமையால், ஜனன காலம் முதல், அவருக்கு வார்த்தைகளில்கூட முதல் தர மரியாதை நாம் செய்யவேண்டும். அதுதான் ஒழுங்கு.

தமிழ் நாட்டிலே, திருஅவதாரம் செய்த பதி அவர்கள், தொட்டிலில் வளர்ந்தார் என்று சொல்லுவதற் கில்லை. எனவே, 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்ற பழமொழி, அவரிடம் செல்ல வகையில்லை. அவதார காலம் முதல் நாளது வரையில், பதி அவர்களுக்கு மோட் டார்ப் பழக்கந்தான். எனவே, மோட்டார்ப் பழக்கம் முடியு மட்டும் என்று புது மொழியும் படைக்கலாம்.

'சிறு வயதிலேயே மோட்டார் ஓட்டும் கைபிடிச் சக்கரத்தில், கையோடு கையாய் ஒட்டிக்கொண்டிருந்த பசுபதிக்கு, பிற்காலத்தில் சர்க்காரின் ஆக்கினைச் சக்கரம் கையில் வந்ததைப்பற்றி வியப்பு ஒன்றுமில்லை' என்று பெரும்புளுகூர், அஷ்டாவதான, ஆரூட, ஜோதிடச் சிங்கம்

பொன்னம்பலனர் சொல்வதை, நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். நீங்களும் ஏற்கும்படி மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஏற்காவிடின் நான் ஒண்டியாய் நின்று, உலக ஏளனத்துக்கு ஆளாகும்படி யிருக்கும். என்னவோ யோசித்துச் செய்யுங்கள்.

பிறப்பிலே லட்சுமியும், பள்ளியிலே சரஸ்வதியும், பசுபதிக்குக் கடைக்கண் பாக்கியம் அளித்தார்கள் என்று புலவர் கோமான் எலிக்காட்டூரார் சொல்லுவது உண்மையாகத் தான் இருக்கவேண்டும். ஏனெனில் அவர் பொய்யா மொழிப் புலவர் சந்ததியில் தோன்றிய புலவர் ஒருவரின் மாணுக்கருக்கு, மாணுக்கருக்கு, மாணுக்கருக்கு...மாணுக்கர். பசுபதிக்குச் சிறுபிராயம் முதல், நயமான வெள்ளைக்கார நாகரிக உடுப்பு. 'இங்கிலீஷ் சொற்களைக் கடித்து மென்று பேசினுல்தான், அவைகளின் உச்சரிப்பு நேராக வரும்' என்று நிபுணர்கள் சொல்லுகிறார்கள். எனவே, பசுபதி இங்கிலீஷ் வார்த்தைகளைக் கடித்து, மென்று, ஆனல் தின்னுமல் பேசுவார். அதுமட்டுமா? தமிழ் வார்த்தைகளையும், பட்சபாதமின்றி அவ்வாறே செய்வார்

முக்திக்கு வழிதேடும் ஹிந்துக்கள் க்ஷேத்திர யாத்திரை செய்வார்கள். காசி, ராமேசுவரம், கன்னியாகுமரி முதலிய க்ஷேத்திரங்களைப் பக்தர்கள் நாடுவதைப் போல, வாழ்வில் பெரும் பதவியை நாடும் இந்தியர்கள், 'சீமை மண்ணை மிதித்து, அங்குள்ள பெரியார்களின் பாததூளியைச் சிரத்தின்மேல் கொண்டு வித்தை கற்கவேண்டும்' என்கிறார்கள். இந்தக் கட்டுப்பாடான சுருதிக்கு இணங்க, பசுபதி சீமைக்குச் சென்றார். தமிழ்நாட்டிலே கடைக்கண்ணுல்

பார்த்த சரஸ்வதி, சீமையிலே அந்த வேலையைச் செய்ய மறுத்துவிட்டாள். இரண்டு மூன்று தரம் பசுபதி பரீட்சையில் பிளாங்கி. அவர் அலுத்துப் போவதற்கு முன், பரீட்சை அதிகாரிகள் அலுத்துப் போய், பசுபதிக்கு ஒரு பட்டமும் வழங்கினார்கள்.

செய்நன்றி கொல்லுதல் மகத்தான பாபமல்லவா? எனவே, பசுபதி சீமையிலிருந்து பழுத்த ராஜபக்தராகத் திரும்பி வந்தார். வீட்டிலே பணம்; சீமையிலே பட்டம். பாக்கி என்ன? பதவிதான். பசுபதி பெரும் பதவியை நாடினார் என்றால் அதிலே என்ன ஆச்சரியமிருக்கிறது? பரீட்சை உத்தியோக மூலமாய்ப் பெரும் பதவியை அடைய நீண்ட காலம் பிடிக்கும் என்று தெளிவாகத் தெரிந்து கொண்ட நுட்ப புத்திசாலியான பசுபதி, எலெக்ஷன் (தேர்தல்) உதவியை நாடினார். 'ஆட்டைக் கடித்து, மாட்டைக் கடித்து, தோலைக் கடித்து, துருத்தியைக் கடித்து, வேட்டை நாய் ஆவதுதான் வழக்கம்' என்று பெரியவர்கள் சொல்லுகிறார்கள். இந்த உண்மையை எப்படியோ தெரிந்து கொண்டார் பசுபதி.

சிறிய தாலூகா போர்டில் ஆரம்பித்தார். ஒரு பள்ளிக் கூடக் கமிட்டியில் ஸ்தானம் பெற்றார். பின்னர் அதன் தலைவரானார். பிறகு நகர பரிபாலன சபைக்குத் தலைமை வகித்தார். ஜில்லா போர்டையும் தாண்டி, சட்டசபையில் பொத்தென்று குதித்தார். 'பணம் பாதாளம் வரையில் பாயும்' என்பது பொய்யா யிருக்கலாம். பணம் சட்ட சபை வரையிலும், அதற்குக் கொஞ்சம் மேலும் பாய்ந்து அலங்கார நர்த்தனம் செய்யும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. பசி

வாதை யில்லாமல், 'அள்ளிப் புசித்து, கண்மூடி, மௌனி யாய், தனியே' சட்டசபை அணியாசனத்தை அலங்கரித்த பசுபதியினிடம் யாருக்குத்தான் இரக்கம் வராது?

எனக்கும் உங்களுக்குமே இரக்கம் வரும்பொழுது, 'பெரும் பாரம் தாங்கும்' சர்க்காருக்கா இரக்கம் ஊறாது? ஜாதிச் சண்டை, சமயச் சண்டை, பதவிச் சண்டை, உத்தி யோகப் போட்டி, ஆண் பெண் மனோவிகாரம், பணச் சண்டை, அடிமை நிலைக்குப் போட்டி, — இவைகள் நிறைந்திருக்கும் சமயத்தில் பசுபதிக்கு நற்கதி ஏற்படா விட்டால், வேறு யாருக்கு ஏற்படும்? ஆளுக்கு ஆள் சண்டை பிடித்தால், சண்டை பிடிக்காத ஆளுக்குத்தானே பெருமையும் பதவியும்? ஆகையால் பசுபதி ஒரு கட்சிக்குத் தலைவரானார். ஜனநாயக ஆட்சி அரசியலின் நுட்பத்தின்படி, கட்சித் தலைவன் மந்திரியாவது அருமையல்ல. அது எல்லோருக்கும் தெரியும், — பசுபதிக்குக் கூட.

அதிகமான பிரயாசையின்றி, பெரிய மந்திரி பத வியைப் பெற்ற பசுபதி, தமது வேலையைப் பற்றியும் அதிக மான சிரமம் எடுத்துக்கொள்ளவில்லை. எடுத்துக்கொள் ளத் தேவையில்லை என்பதும் அவருக்குத் தெரியும். தம் மைத் தாக்குகிற ஜனங்களைப் பயமுறுத்தவும், தம்மைத் தாங்குகிற சர்க்காரைத் துதிக்கவும் அவருக்கு நன்றாகத் தெரியும். இது பிறவி தனவந்தர்களும் எளிதிலே கற்றுக் கொள்ளக்கூடிய வித்தை. இந்த வித்தைக்கு குரு கூடத் தேவையில்லை. கொஞ்சம் தலை குனிந்து, தலை நிமிர்ந்து பார்க்கும் தன்மை இருந்தால் போதும்.

சட்டசபையில் பதில் சொல்லுவதற்குத் தேவையான சில வார்த்தைகளை, பசுபதி பொட்டணம் கட்டி வைத்துக்

கொண்டார். 'ஆமாம்', 'இல்லை', 'முன் பகுதி சரி', 'பின் பகுதிக்குப் பதில் சொல்லத் தேவையில்லை', 'நோட்டீஸ் வேண்டும்' 'அரசியல் நிர்வாக முறை ரகசியம்', 'கவனிக்கப்படும்', 'சர்க்கார் ஆதரவுடனும் பரிவுடனும் கவனித்து வருகிறார்கள்' — இவைகளும் மற்றும் சில சொற்களும் பசுபதிக்கு மிகவும் ஒத்தாசையாக இருந்தன.

வாரத்துக்கு ஓர் உத்தியோக விருந்து, வாரத்துக்கு மூன்று தடவைகளுக்குக் குறையாமல் பத்திரிகை நிருபர்களுக்குப் பேட்டி, வெளியூர்ப் பிரயாணம், வரவேற்புப் பத்திரங்கள், அழகு ஜரிகை மதுரை மாலை, ஒழிந்த வேளையில் கோவிலுக்குச் செல்லுதல் — இவைகள் பசுபதியின் மந்திரி ஸ்தானத்தின் திட்டம். எங்கே சென்றாலும் அவரது கண்கள் செழிப்பைத்தான் காணும். நாக்கு செழிப்பைப் பற்றித் தான் பேசும். அவர் உடம்பு செழிப்பான பஞ்சணையைத் தான் ஏற்கும்.

மிராசுதார்களின் துயரம், நிரந்தரம்; ஏழ்மை என்பது கர்மபலன்; நோய்கள் ஆண்டவன் சோதனை; தற்கொலை பைத்தியத்தின் விளைவு; தொழிலில்லாமல் திண்டாடுவது அறிவில்லாமையின் தோற்றம்; மானமும் அவமானமும் கீதையின் பிரகாரம் சமம் அல்லது ஒன்று — இப்படிப்பட்ட சில தீர்மானமான முடிவுகளைக் கொண்ட பசுபதிக்கு, பட்டமும் பதவியும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தால், பசுபதி உங்களையும் என்னையும் ஏன் ஏளனம் செய்யமாட்டார்? அடுத்த எலெக்ஷன் வரட்டும் என்கிறீர்கள். அதற்கும் பதிக்கு வழி தெரியும்.

## வண்டிக்கார செல்லமுத்து

இது மோட்டார் யுகம்; ஏரோப்ளேன் காலம். காலத்துக்குத் தக்கபடி பேசவேண்டும் என்கிறார் எங்கள் ஊர் கூனல் தாத்தா. காலத்துக்குத் தக்க மனிதர்களோடு காலத்துக்குத் தக்க பேச்சுப் பேசுவதா யிருந்தால், கூனல் தாத்தாவோடு யார் பேசுவார்கள்? என்ன பேச முடியும்?

கூனல் தாத்தா சொல்லுகிறபடி கேட்டால், எங்கள் அருமைச் செல்லமுத்துவை நாம் எல்லோரும் மறந்துவிட நேரிடும். நாம் செல்லமுத்துவை மறந்தால், கோடி வீட்டுப் பாட்டி சொல்லுவது போல, நமக்கு ஏழேழ் ஜன்மத்துக்கும், சோறு கிடைக்காது.

பாட்டி சொல்லுவதற்குத் தப்பர்த்தம் செய்துகொண்டு செல்லமுத்துவைச் சமையற்காரனாகச் செய்துவிட வேண்டாம். செல்லமுத்து வண்டிக்கார - ன் - ர். எந்த எழுத்துப் போடுவது என்று தெரியவில்லை. தங்கமான செல்லமுத்துவுக்குப் பாவனை - மரியாதை கொடுத்து அன்பைத் தொலைத்துக்கொள்ள வேண்டுமா? செல்லமுத்து வண்டிக்காரன்தான். அப்புறம் உங்களால் என்ன செய்ய முடியும்?

(உங்களால் முடிந்ததை, மான நஷ்ட தாவா நோட்டீஸ் மூல மாய் மட்டும் அனுப்பிவிட வேண்டாம்.)

உங்களால் முடிந்ததை, கடைசியில் சொன்னமாதிரி செய்துவிட்டீர்களானால், செல்லமுத்து தனக்காகவும் எனக் காகவும் சேர்த்துச் சிரிப்பான். அதுவும் அவன் விகடப் பத் திரிகையின் ஆசிரியரைக் காட்டிலும் விழுந்து விழுந்து சிரிப் பான். செல்லமுத்துவுக்குப் பேச்சின் உயிர்நாடி தெரியும். பேச்சின் வடிவத்தை, பேச்சின் உருவத்தைக் கண்டு, அவன் ஏமாந்து போகிறவனில்லை.

'கொம்பால் குருணிப் பால் கறந்தாலும் கூரை பிடுங்கு கிற மாடு உதவாது' என்று செல்லமுத்து அடிக்கடி சொல் லுவான். உயிரின் இலட்சணமான சித்திரம் அவன் கண்ணி லும் உள்ளத்திலும் எவ்வளவு அழகாகப் பதிந்திருக்கிறது என்று தெரியவில்லையா? இந்த உண்மையைத் தெளிவாகக் கண்ட செல்லமுத்து, ஸ்லேட்டு புஸ்தகங்களைத் தூக்கிக் கொண்டு, பள்ளிக்கூடத்துக்குப் போய், வாத்தியார் கையால் பிரப்பம்பழம் வாங்கி, கல்வி கற்றுக்கொள்ள வேண்டு மென்பதுண்டா?

செல்லமுத்து வண்டிக்காரன் என்ற முழுப் பட்டம் பெறுவதற்கு முன், எத்தனையோ தடவைகள் எங்கள் வீட்டுக் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் விட்டிருக்கிறான். 'பள்ளிக்கூடத்துக்கு நம்ம வீட்டுப் பிள்ளைகளை அனுப்பப்படாதுங்க. அந்த வாத்தியார் கொன்னு தீர்த்துவிடுறாரு பிள்ளிங்களை' என்று அலுத்துக்கொண்டு சொல்வான்.

'நம்ம வீட்டுப் பிள்ளைகளும் உன்னைப் போல, வளர வேண்டுமென்பது உன் கருத்தா?' என்று கேட்டால், 'நான்

என்ன கெட்டுப்போயிட்டேன்? என்றால் என்ன செய்ய முடியாது? படிச்சுப் படிச்சுக் கண்ணைக் கெடுத்துக் கொண்டுவிட்டேனு? கண் பார்த்தது கை செய்யும்' என்பான். 'கண் பார்த்தது கை செய்யும்' என்ற பழமொழிக்கு, கண் கெடாமலிருந்தால் அது பார்த்ததைக் கை செய்யும் என்று தனி அர்த்தம் கற்பித்த செல்லமுத்துவைப்பற்றி இப்பொழுது என்ன நினைக்கிறீர்கள்? கண்ணால் பார்ப்பது வித்தை; கை செய்வது கல்விப் பயிற்சி. செல்லமுத்து மேதாவி என்பதில் சந்தேகமில்லை.

செல்லமுத்து நல்ல வாட்டசாட்டமான பேர்வழி. ஐந்தே முக்கால் அடி உயரம். அதிகக் கனமுமில்லை, மெலிந்தவனுமில்லை. இடை நெருக்கமாயும், மார்பு விரிந்தும் இருக்கும். அதிகப்படியான சதையை உடலின் எந்தப் பாகத்திலும் காணமுடியாது. சொரசொரப்பான கைகளை, சூம்பிப்போன விரல்களை அவனிடம் காணமுடியாது. கைகளை விரித்தால், பலகையைப் போல இருக்கும். அவனுடைய மார்பிலே வண்டியை விட்டுக்கூட ஓட்டலாம். ஆனால் மூட்டை தூக்கி மூட்டை தூக்கி முதுகுபட்டை வாங்கிப் போயிருக்கும். தலையுச்சியில் மயிர் நீண்டிராது. அடிக்கடி எண்ணெய் காணாத தலையல்லவா? மேலும், தினந்தோறும் நூற்றுக் கணக்கில் மூட்டைகள் கண்டது அந்தத் தலை

இப்பேர்ப்பட்ட உடம்பை வைத்துக்கொண்டு, மீசையை முறுக்கி, தெம்மாங்கு பாடினால், 'செல்லமுத்து, இன்னொரு தரம் பாடு!' என்று பையன்களெல்லோரும் அவனை வளைத்துக்கொள்ளுவார்கள்.

'ஆல மரத்துக் கிளி
ஆசாரம் பேசுங் கிளி



4

நான் வளத்த பச்சைக் கிளி
நாளை வரும் கச்சேரிக்கு'

என்று அவன் பாடினல், பையன்கள் எல்லோரும் சொக்கி விடுவார்கள். 'கச்சேரிக்கு வருமா?' என்று ஒரு பையன் கேட்பான். 'கட்டாயம் வரும்' என்று அந்தக் குழந்தை யிடம் கொஞ்சுவான்.

'ஏ! செல்லமுத்து! "சாலையிலே இரண்டு மரம்" பாடு!' என்று சிறு பெண்கள் கேட்பார்கள். செல்லமுத்துவினிடம் அவர்களுக்கு அவ்வளவு சொந்தம். அவன் பாடுகிறதைக் கேளுங்கள்.

'சாலையிலே ரண்டு மரம்
சர்க்காரு வச்ச மரம்
ஓங்கி வளந்த மரம்
உனக்கேத்த தூக்கு மரம்'

கடைசி அடியைப் பாடும்பொழுது அவனுக்கு வரும் உற்சாகமும் குழந்தைகளுக்கு இருக்கிற உற்சாகமும் ரொம்ப ஜாஸ்தியா யிருக்கும். தூக்கு மரத்தைக் கண்டு, குழந்தை கள் ஏன் இவ்வளவு ஆசைப்படவேண்டும் என்பது செல்ல முத்துவுக்கே சந்தேகம்.

'தன்னைப் போல் மன்னுயிரையும் காத்தல்' என்பது மன்னர்களின் கடமை என்கிறார்கள். செல்லமுத்து தன் வசம் இருக்கும் மாடுகளை எப்படிப் பாவித்துப் போஷிக் கிறான் என்பதை நேரில் பார்த்தால்தான் தெரியும். மாடு களின் பேரில் ஒரு தூசியும் தரித்திருக்க அவன் பார்க்க மாட்டான். அந்தி சந்தி இரண்டு வேளைகளிலும் அவன் மாடுகளைத் தேய்க்கும் விதரணையைப் பார்க்கவேண்டுமே!

கண்டபடி முரட்டுத்தனமாய்த் தேய்ப்பானு? எந்த இடத்தில் எப்படித் தேய்க்கிறது என்பது அவனுக்குத் தெரியும். எந்த இடத்தில் தேய்க்கவேண்டும் என்று மாடு இடத்தைக் காட்டுவது போல, அடையாளமாக நிற்கும்.

அவன் வண்டி ஓட்டுகிற சாமர்த்தியமே சாமர்த்தியம். கைவிரலால் கூட மாட்டைத் தொடமாட்டான். தார்க்குச்சி மரியாதைக்காகக் கூண்டில் சொருகிக் கிடக்கும். 'வண்டிக்காரன் நொண்டி, வண்டி மாடு சண்டி, போ ராஜா போ! ஓடு அம்மா ஓடு!' என்று ஏதோ தூரவில் சொல்லுவான். மாடுகள் தாமாக ஓட்டம் பிடிக்கும். தானும் தார் குத்தமாட்டான், பிறரையும் குத்த விடமாட்டான்.

ஒரு நாள் மாடு தீனி எடுக்கவில்லை யென்றால், செல்லமுத்துவுக்குச் சோற்று வாயிலே மண்தான். அவன் சாப்பிடச் சம்மதிப்பதே இல்லை. மாட்டைத் தொட்டுத் தொட்டுப் பார்ப்பான். தடவிக் கொடுப்பான். கெட்ட வியர்வை வருகிறதோ என்று உடம்பை மோந்து பார்ப்பான். நாக்கைச் சோதித்துப் பார்ப்பான். மாட்டைக் கொஞ்ச தூரம் வரையில் நடத்திப் பார்ப்பான். இவ்வளவும் போதாது என்று வழியிலே போகிறவர்களைக் கூப்பிட்டு, 'அண்ணே, இந்த மாட்டைப் பாருங்க!' என்பான். செல்லமுத்துவினிடம் வேலைசெய்யும் மாடுகள் அவனிடம் செல்லம் கொஞ்சும்.

அழுகிற குழந்தைகளின் அழுகையைத் தணிய வைப்பதில் செல்லமுத்துவுக்குச் சமானமாய், பெற்ற தாய்கூட இருக்கமாட்டாள். கையை ஆட்டுவான்; கும்மி யடிப்பான்; குதிப்பான்; கோணலாய்ப் பார்ப்பான்; உடம்பை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் கோணிக்கொண்டு 'கொாளி'

வித்தை செய்வான்; ஒன்றுக்கும் மசியாமல் போனால், வாய் விட்டுப் பாடுவான். அதற்கும் பலிக்காமல் போனால், தோளிலே சுமந்து தட்டிக் கொடுத்துக்கொண்டு நெடுந் தூரம் செல்லுவான். இதிலும் காரியம் சாத்தியப்படாமற் போனால், அவன் என்ன செய்வானோ அது தெரியாது; — குழந்தை அழுவதில்லை.

வண்டியில் தூரப் பிரயாணம் செய்ய நேர்ந்தால் அவன் இரவில்தான் போவான். 'இப்படி இருட்டில் போகலாமா?' என்றால், 'கையும் கட்டாரித் தடியும் எதற்கு இருக்கின்றன?' என்று சற்று மீசையை முறுக்குவான். 'பேய் பிசாசுகள் வழியில் இருந்தால்.......?' என்று வயது சென்ற கிழவிகள் கேட்டால், 'நான்தான் பெரிய பேய். வழியில் அகப்படுகிற பேயைப் பிடித்துப் பலகாரம் செய்துவிட மாட்டேனா?' என்று ஜோராய்ப் பேசுவான்.

இவ்வளவு உற்சாகமுள்ள செல்லமுத்துவுக்கு ஒரே ஒரு மனக்குறை. அதை அவன் எல்லாரிடமும் சொல்லிக் கொள்ளுகிறான். 'நானும் ஒரு வண்டி ஓட்டுகிறேன். ரயிலை யும் ஒருத்தன் ஓட்டுகிறான். மோட்டார் காரையும் ஒருத்தன் ஓட்டுகிறான். நான் மட்டும் வண்டிக்காரன். அவர்கள் எல் லோரும் "ட்ரைவர் அய்யா"க்களோ? இது என்ன நியாயத் தில் சேர்ந்தது? என்னை "ட்ரைவர் அய்யா" என்று கூப்பிடு கிறது; அல்லது அவர்களையும் "வண்டிக்காரன்" என்று கூப்பிடுகிறதுதானே!' என்று அடிக்கடி சொல்லுவான். என்னமோ அவன் நியாயம் கேட்கிறான். பட்சபாத மில்லா மல் தீர்ப்புச் செய்யுங்கள். ரொம்ப மானி. ரொம்ப ரோஷக்காரன்.

## பெரிய கலேட்டர் சாமி

**பா**ட்டிகளுக்கே கொஞ்சம் படிப்பும் பல்லும் குறைவு. ஆகவே, சொல் உச்சரிப்பு சரியாக இருக்குமா? அவர்கள் வாயில் 'டெபுடி கலெக்டர்' என்பது 'துப்பட்டி கலேட்டர்' ஆகிவிடும்; 'ஜில்லா கலெக்டர்', 'பெரிய கலேட்டர்' ஆகிவிடுவார். இந்த முறையை, தாமிரத்தைத் தங்கமாக்குதல், அல்லது தங்கத்தைத் தாமிரமாக்குதல் என்ற இரண்டு முறைகளில் ஒன்றாக நீங்கள் வைத்துக்கொள்வதில் எனக்கு ஆட்சேபமில்லை. 'பெரிய கலேட்டர்' சாமியும் இதைப் பற்றிக் கவலையே படமாட்டார்.

பார்த்திபனூரில் சுகவாசியாக எழுந்தருளியிருக்கும் தேசிகாச்சாரியார் ஸ்வாமியை எல்லோருக்கும் தெரிந்திருக்கும். எத்தனையோ, பன்னிரண்டு நாமக்காரர்களில், — தப்பிதம், சாஸ்திரப்படி வைஷ்ணவர்களுக்குப் பதின்மூன்று நாமங்கள் — அவர் ஒருவர்; ஆகவே, பார்த்திபனூர் தேசிகாச்சாரியார் ஸ்வாமியைச் சிரமப்பட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய தேவையில்லை. வைஷ்ணவ கிராமங்களில் பல திருநாமங்களுடனும் பல உருவங்களுடனும் பிரஸ்தாப தேசிகாச்சாரியார் விளங்கி வருகிறார்.

தேசிகாச்சாரியார் உத்தமப் பரம்பரையில் உதித்தவர் என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். உத்தமப் பரம்பரை என்பதற்கு அர்த்தம் விளங்குமாகில், மேற்கூறின வாக்கியத்துக்கு ஏதேனும் உருவான அர்த்தம் செய்துகொள்ளலாம். உத்தமப் பரம்பரை என்பதற்கு நான் கேள்விப்பட்ட அர்த்தத்தைச்சொன்னால்,சிலருக்கு ஒருவிதமாகவும், மற்றவர்களுக்கு வேறுவிதமாகவும் புரியலாம். காஞ்சீவரம் பக்கத்திலிருந்து தேசிகாச்சாரியாரின் பெரியவர்கள் பல தலைமுறைகளுக்கு முன்னர் பார்த்திபனூரில் வந்து குடியேறினார்களாம். அவர்களுடைய வமிச வரலாறு — ஓலை செல்லரித்துவிட்டதாம்! பெரிய முறை திருமண்ணும் காஞ்சீவரம் பத்தாறும் அவர்கள் உடம்பு முழுதும் ஜொலித்துப் பிரகாசிக்குமாம். ஆற்றங்கரைக்கு நீராட்டத்துக்கு — ஸ்நானம் என்பது நாகரிகமில்லாத ஸ்மார்த்த வார்த்தை என்று வைஷ்ணவர்கள் திருவாய் மலரக்கூடும் — தேசிகாச்சாரியாரின் மூதாதைகள் சென்றால், வழியிலே பார்க்கும் தீண்டாதவர்கள் அறுபது அடி தூரத்தில், மைல் கற்களைப் போல், அரை நாழிகையேனும் நிற்க வேண்டுமாம்!

ஆற்றுக்குப் போன தேசிகாச்சாரியாரின் முன்னோர்கள் துணி துவைப்பதில் நிபுணர்களாம்! பக்கத்தில் காத்திருக்கும் பெண்களின் பேரில் கோடை மழையைப் போலத் தண்ணீரைப் புரோட்சணை செய்து (தெளித்துக்கொண்டு) கல்லை ஒரு நாழிகை நேரம் வரையிலும் 'ஸ்திரீ ஜனங்க'ளுக்கு விடமாட்டார்களாம். வேறு வழியில்லாமல், துவைக்கவும் முடியாமல், பெண்மணிகள் ஆட்சேபித்துப் பேச நா இழந்தவர்களாய், துணியைப் பிழிந்து கட்டிக்கொண்டு வீடு போய்ச் சேர்வார்களாம். பெரியார்கள் நாராயணனைச் சாட்சி வைத்து,

நூற்றுக்குக் குறையாமல் முழுக்குப்போட்டு, நீராட்டத்தை முடித்து, சந்தியாவந்தன ஜபாதிகளுக்குத் துவக்கிவிட்டால், 'கீழ்ச்சாதி' மக்கள், சினிமாப் படங்களைப் போல, சந்தடி செய்யாமல் வந்து போவார்களாம்.

பெரிய கருப்பன் வஞ்சனையில்லாமல் உழைத்து, வாயைக் கட்டி, வயிற்றை ஒடுக்கி, தேசிகாச்சாரியாரின் குடும்ப நிலங்களைச் சாகுபடி செய்து, குத்தகை நெல்லைப் பாக்கி விழாமல் அளப்பானும்! ஓலைச் சுவடிகள் பல சூழ, தேசிகாச்சாரியாரின் முன்னோர்கள், திண்ணையில், பூணூல் கயிற்றினால் அலங்காரம் செய்யப்பட்ட மூக்குக் கண்ணாடியை மூக்கு நுனியில் பட்டதும் படாததுமாக வைத்துக்கொண்டு, சாஸ்திரப் பரிசிலனை செய்வார்களாம். கோவிலிலே முதல் தீர்த்த மரியாதை; கலியாண வீடுகளில் முதல் பாக்கு வெற்றிலை, வித்வான் சம்பாவனை. ஆண் குழந்தை களுக்கு ஏழு வயதிலே பூணூல்; பெண் குழந்தைகளுக்கு ஐந்து முதல் பத்து வயதுக்குள் கலியாணம். ஒவ்வொரு தலைமுறையிலும் இரண்டொரு பால்ய விதவைகள்; இரண் டொரு அரைகுறை வித்வான்கள். வேளை தவறாமல் நல்ல ஆகாரம்; சனியும் புதனும் எண்ணெய்; ஸ்ரீராம நவமி உத் ஸவ காலத்தில் ராமாயண பாராயணம்; கோகுலாஷ்டமி தினத்தில் பாகவத பாராயணம். தினமும் ஸகஸ்ர (ஆயிர) நாம பிரார்த்தனை; மார்கழி சொர்க்க வாசல் ஏகாதசிக்கு ஸ்ரீரங்கநாதன் சேவை — இவை யாவற்றையும் ஒன்று சேர்த் துத்தான் தேசிகாச்சாரியார் உத்தம பரம்பரையில் பிறந்தவர் என்று பார்த்திபனூரில் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

இந்தப் பரம்பரையிலே பிறந்த தேசிகாச்சாரியாரோடு அந்த 'உத்தமப் பரம்பரை' — பரம்பரை அல்ல, அந்த

'உத்தமம்' மட்டும் — அழிந்து போய்விட்டது. தேசிகாச்சாரியார் எப்படியோ சர்க்காரில் ஒட்டிக்கொண்டு சர்வே இலாகாவில், நான்கு இலக்கச் சம்பளப் பதவிக்கு ஏறிவிட்டார். 'துரும்போ, இரும்போ பிடித்தவன் கை சும்மாயிராது' என்பார்கள். அதிகாரத்தையும் பணத்தையும் பல வகைகளிலும் கண்டு களித்த தேசிகாச்சாரியாரின் மனத்துக்கு ஓய்வில்லை. அவர் வேறுவிதப் பரம்பரையை நிலைநாட்ட முயற்சி செய்தார். உச்சிக் குடுமி, தலைப்பாகை, பட்டை நாமம், பத்தாறு வேஷ்டி முதலியவைதான் அவரை ஹிந்து வைஷ்ணவர் என்று பகிரங்கப்படுத்தினவே யொழிய, அவருடைய மனம் வெள்ளைக்கார நாகரிக சுகபோகங்களை வேண்டிற்று. இத்தகைய மனோபாவத்தையுடைய தேசிகாச்சாரியாருக்கு ஆறு ஏழு குழந்தைகள். அவர்களில் ஒருவன் நம் துரைசாமி.

பால்ய முதல் துரைசாமி ரொம்ப புத்திசாலி. வருஷம் தவறினாலும் அவன் பரீட்சையில் தவறினதே இல்லை. 'சிறு பிராயம் முதற்கொண்டே, அவன் இங்கிலீஷை மலையாகவும் மழையாகவும் பொழிந்து வந்தான்' என்று சொல்லுகிறார்கள். மலையாக எப்படிப் பொழிந்தான் என்பது எனக்குத் தெரியாது. பெரிய வகுப்புக்குச் சென்றதும், நீளமான பெயரை அவன் தூக்கிச் சுமக்க இஷ்டப்படவில்லை. பார்த்திபனூர் தேசிகாச்சாரியார் குமாரன் துரைசாமி என்று பள்ளிக்கூட ஏட்டில் எழுத மனங் கொள்ளவில்லை. பி. டி. டி. சாமி என்று சுருக்கிக்கொண்டான். தலைக் குடுமி போய்விட்டது. கிராப் வந்து உட்கார்ந்துகொண்டது. அதற்குப் பிறகு அவன் 'அம்பட்டன்' தயவை எதிர்பார்க்கவே யில்லை. க்ஷவரம் முதல் எல்லாம் சொந்தம். வைதிகப் பிச்சு குடும்பப் பரம்

பரை வாசனையை அடியோடு மறந்தான். தமிழையும் இங்கி லீஷ் மாதிரிப் பேச, தனது சாமர்த்தியத்தைக் கொண்டு, பழக்கிக்கொண்டான். ஒருவரையும் பெயர் சொல்லிக் கூப் பிட மாட்டான். வீட்டு நாய் முதல் எல்லாரும் அவனுக்கு ‘ஹல்லோ’தான். துணியுடுத்துவது நாகரிகக் குறைவு என்பது அவன் தீர்மானமான அபிப்பிராயம். பள்ளிக்கூட நேரம், படிக்காத நேரத்தில் அவனை டென்னிஸ் விளையாட் டுக் கிட்டியும் கையுமாகப் பார்க்கலாம். ஒன்று விளையாடு வான்; அல்லது அதைச் சொந்தத்தில் செப்பனிட்டுக்கொண் டிருப்பான்.

காலேஜ் படிப்பு வாழ்விலே அவனுக்கு ரொம்பக் குஷி· அவன் பார்க்காத சினிமா, டாக்கி கிடையாது. தமிழ் நாட கத்துக்கு மட்டும் அவன் போவதே கிடையாது. பெயர் பெற்ற தமிழ் ஆக்டர்களின் பெயர்களைச் சொன்னால், வெள் ளைக்கார ஆக்டர்களை, ஷேக்ஸ்பியர் காலம் முதல் சார்லி சாப்ளின் காலம் வரையில், எல்லோருடைய குணாதிசயங்களை யும் சேர்த்து வர்ணிக்கத் துவக்கிவிடுவான். காலேஜ் தலைமை உபாத்தியாயரான பெயின் பங்களாவில், அவருடைய குடும் பத்தார்களுக்கு மத்தியில், வாரத்துக்கு இரண்டு தடவைக ளேனும் தேத் தண்ணீர் பானம் செய்யாவிடில், சாமி மனம் சோர்ந்து போவான். ஆனால், படிப்பிலே மட்டும் ‘முண்டன்’. சாமியின் இங்கிலீஷ் உச்சரிப்பில் பெயின் துரை மகளுக்கு ரொம்ப மோகம். இப்படி வாழ்ந்துவந்த சாமிக்குப் பணக் காரக் குடும்பத்தில் கலியாண மாகிவிட்டது. ‘பொம்மைக் கலியாணம்’ என்று பெயின் துரை மகள் கேலி செய்வாள். சாமி தலை குனிந்த வண்ணமாய்ப் பெருமூச்சு விடுவான்.

## நடைச் சித்திரம்

ஜில்லா கலெக்டர் பரீட்சைக்காக சாமி சீமைக்குப் போனன். சுதந்திர நாடான இங்கிலாந்துக்குப் போனதும் சாமிக்குத் தலை கிர்ர்ரென்று சுற்ற ஆரம்பித்துவிட்டது. 'சொர்க்க பூமி'யைப் போல சுகபோகங்கள் கூவியழைக்கும் இங்கிலாந்திலே, 'அட கர்மமே!' என்று பலர் அலுத்துக் கொள்ளும் கர்ம - பூமியான இந்தியாவை, அவனது தாய் நாடான இந்தியாவை, சாமி அடியோடு மறந்தான். இளம் ஆங்கிலக் கன்னிகளை நாடகத்துக்கு அழைத்துச் செல்லுவதைப் பெருமையாகக் கொண்டான். தன் குழந்தை - மனைவியின் மழலைச்சொல் - தமிழ்க் கடிதங்களைப் பிரித்துப் பாராமலே கிழித்து எறிவான். காதல் காதல் என்று சதா பிதற்றுவான். காமமோ — அது எனக்குத் தெரியாது — சாமியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டது. அதிகப் பணத்துக்காகத் தகப்பனருக்குச் சீமையிலிருந்து கடிதம் எழுதத் துவக்கினன். சாமியின் மாமனருக்கு அவனிடம் ரொம்ப வாஞ்சை. தெரிந்தும் தெரியாமலும் அவரும் சீமைக்கு சாமிக்குப் பணம் அனுப்பிவந்தார். மாமனரின் பணத்தை, குழந்தை - மனைவியின் தகப்பனரின் பணத்தை, தனது ஆங்கிலக் காதல் - இளங் கன்னியின்மேரில் அபிஷேகம் செய்தான்.

கருத்தாய்ப் படித்தானே இல்லையோ, பரீட்சையில் மட்டும் தவறவில்லை. இந்தியாவுக்குத் திரும்புகிற சமயம். தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டான். தனது காதல் கன்னியை விட்டுவிடுவதா, கூட்டிக்கொண்டு போவதா என்று அவனுக்குப் புரியவில்லை. சாமி விடத் தயாரா யிருந்தாலும், அவள் அவனை விடத் தயாரா யில்லை. சென்ற யுத்தத்துக்குப் பிறகு ஐரோப்பாவிலே ஆண்மகனுக்குக் கிராக்கி; பணத்துக்கும் கிராக்கி. மேலும், சாமி அவளைக் கலியாணம்

செய்துகொள்ளுவதாயும், தனக்கு இன்னும் கலியாணம் ஆக வில்லை யென்றும் அழுத்தமாகச் சொன்னதை, அவள் எப்படி மறக்க முடியும்?

எப்படியோ தப்பித்துக்கொண்டு சாமி இந்தியாவுக்கு வந்து விட்டான். தனியாக வந்ததும் குழந்தை - மனைவி யுள்பட எல்லோரும் அவனைச் சென்னையில் கண்டார்கள். குழந்தை - மனைவி, தூரத்தில் நின்றுகொண்டிருந்தாள். சாமிக்கு அவளைப் பார்க்க மனமே யில்லை. பின்னர் உதவி - கலெக்டர் வேலையை ஒப்புக்கொண்டான். எல்லாம் மேல் நாட்டு நடையுடை பாவனைதான். குழந்தை - மனைவியைத் தன் இருப்பிடத்துக்கு அழைத்துக்கொள்ள அவன் தீர்மான மாய் மறுத்துவிட்டான். சீமைச் சுருட்டுத்தான் அவன் உடம்புக்கு ஒத்துக்கொள்ளுமாம்! சைவச் சாப்பாட்டினால் சத்தழிந்த நாடு என்று சதா இந்தியாவைச் சபித்துக் கொண்டிருந்தான்.

இதற்குள் சாமியின் ஆங்கில மாது துப்புப் பிடித்துக் கொண்டு, இந்தியாவுக்கு வந்து சேர்ந்தாள். சாமியின் இருப் பிடம் போய்ச் சேர்ந்தாள். சாமிக்கு ஏக காலத்தில் ஆனந்த மும் துக்கமும். அவளைத் தள்ளவும் முடியவில்லை, கொள்ள வும் சக்தியில்லை. கோர்ட்டில் வழக்குத் தொடருவதாக அவள் பயமுறுத்தினாள். சட்டம் தெரிந்த — சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரும் பொறுப்பை ஏற்ற — சாமிக்குச் சித்தப்பிரமை பிடித்தது போலாயிற்று. கடைசியாக, அவ னும் அவளும், புருஷனும் மனைவியுமாக வசிக்கத் தீர்மானித் தார்கள். படிப்படியாக, அவன் ஜில்லா கலெக்டர் ஆனான். குழந்தை - மனைவி தனது பிறந்த அகத்தில் குமுறிக் குமு

றிக்கொண்டு வாழ்ந்து, தேய்ந்து மாய்ந்து இறந்து போனுள். தேசிகாச்சாரியார், சாமி இருப்பிடத்துக்குச் செல்லுவதில்லை. எட்டுக் கண்விட்டு அடிக்கிற மாதிரி, சாமி அதிகார அட்டஹாஸம் செய்துவருகிறுர் !

## காவல் - காத்தான்

**கா**வல்காத்தான் என்று மூச்சு விடாமல் படித்தால், அனர்த்தம் வந்துவிடும். 'காவல் காத்தான், ஆனால் திருட்டுப் போய்விட்டதோ?' என்று கேலி செய்யும்படியாகக் கூட நேரிடும். இன்னும் எத்தனையோ வியாக்கியானங்கள் கூடக் குறுக்கே வந்து குதிக்கும். நமக்கு விகடமும் விஷம புத்தியும் வேண்டாம். கொஞ்சம் நிறுத்திப் படித்தால், நம்முடைய ஆயுள் காலம் குறுகியும் போகாது.

இலக்கணப்படி எழுதுவோமானால் காவற்காரக் காத்தான் என்று எழுதியிருக்க வேண்டும். ஆனால் இலக்கணத்தை நம்பி, அவ்வளவு பொழுதையும் எழுத்தையும் செலவிட மனமில்லை. பயமுறுத்துகிற பொருளைக் கண்டு நடுங்கிக் கும்பிடு போட்டு, கற்பூரம் காட்டுவது பழைய வழக்கம். ஆனால் இந்தச் சில்லறைத் தந்திரங்களால் தொல்லை தீருவதுமில்லை. பயம் ஒழிவதுமில்லை. கற்பூரம் போய், ஆட்டுக்கடா, நரபலி முதலியவற்றில் வந்து நிற்கும்.

காவல் - காத்தானுக்கு இலக்கணம் தெரியாது; இலக்கணமும் பிடிக்காது. அவனைப் பற்றிப் பேசுகிற பொழுது,

அவனுக்குப் பிடிக்காத பொருளை நாம் ஏன் கையாள வேண்டும்? ஒருவேளை அவன் இதைப் படித்துக் கேட்க நேர்ந்தால், 'ஐயா நல்லா இலக்கோணம் எழுதி யிருக்காவளே!' என்று தன் அருமைப் பெண்சாதியிடம் சொல்லவும் கூடும். என்னுடைய உலகம், அவர்களும் அவர்களைப் போல் இருப்பவர்களும்தான். எனவே, அவர்கள் கேலி செய்யப்படாது.

'மாதம் முக்கல நெல்லுக்கு இராப் பகலாய் உழைத்துச் சேவிக்கிறவனைக் கண்டு பயப்படுகிறவரா பெரிய காரியம் செய்யப் போகிறூர்?' என்று துடுக்காக என்னைக் கேள்வி கேட்கப்படாது. பெரிய இடத்துப் பொல்லாப்பைக் கவனிக்க வேண்டியதில்லை. சின்ன இடத்துக் கேலியைப் பொறுக்கவே முடியாது. சின்ன இடம் என்றால் யோக்கியர்கள் என்று அர்த்தம். இந்த அர்த்தத்தை அகராதியில் காண முடியாது; அனுபவத்தில் காணலாம்.

'முழுப் பட்டினத்துப் பழக்க முள்ளவர்கள் "நெல்லுக் காச்சி மரம்" என்பார்கள்' என்று கேலி செய்வதுண்டு. நெல் வயலில் விளைந்து, களத்தில் அடிக்கப்பட்டு, வண்டியிலேறி, வீடு போய்ச் சேருகிற விவரம் தெரியாதவர்களுக்கு, காவல் - காத்தானைப் பற்றி ஒன்றுமே தெரியாது. காவல் - காத்தானென்றால் போலீஸ்காரனோ என்று சந்தேகித்துக் கேட்கவும் செய்வார்கள். போலீஸ்காரனைப் போலக் காத்தானுக்கு அடிக்கத் தெரியாது; அடிபடத் தெரியும். அது பழக்கம்.

காத்தானுடைய வீட்டுக்குப் போக, சர்க்கார் பாதை கிடையாது. வாய்க்கால் ஜலத்தில் நடந்து போகவேண்டும்.

அல்லது வரப்பில் வழுக்கி விழுந்து எழுந்திருந்து, அடிமேல் அடி வைத்து ஊர்ந்து செல்ல வேண்டும். காத்தான் வீட்டுக்கு வாய்க்காலும் வரப்பும் போன வழிதான், இது அவன் வந்த வழி என்று சமாதானம் சொல்லும் பெரியோர்களும் இருக்கிறார்கள். அவர்கள் போகிற வழியைத்தான் காணோம்.

தலையிலே முண்டாசும், கையில் தடியும் காத்தானுடைய உத்தியோகச் சின்னங்கள். 'என்னடா, கையிலே தடி, தலையிலே முண்டாசு!' என்று தெரியாதவர்கள் கேட்டால், அவனுக்கு மூக்குக்கு மேலும் அதற்கு அப்பாலும் கோபம் வந்துவிடும். மீசையும் துடிக்கும். குஞ்சு தாடியும் இந்தக் கூட்டத்தில் சேர்ந்துகொள்ளும். அவன் வாரம் ஒருமுறை சலூன் க்ஷவரத்தைக் கண்டவனா? கிராமத்துப் பரிகாரி, தயையால் கொடுக்கும் பாதி பிடிபோன துருப்பிடித்த கத்தியைக் கொண்டு, அவன் 'மச்சான்', காத்தானுக்கு க்ஷவரம்பண்ணி விட்டாலுண்டு.

'மகளுக்கு வெள்ளியோடு வெள்ளி' என்று நீட்டியும், 'மருமகளுக்குத் தீவிளிக்குத் தீவிளி (தீபாவளி) எண்ணெய்' என்று சட்டு சட்டென்றும் காருண்யம் நிறைந்த ஓர் அம்மாள் சொன்னதாக நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். காத்தானுக்குத் தீவிளிக்குத் தீவிளிதான் புதுத் துணி. எண்ணெய் முழுக்கும் ஒருவாறு அவ்விதமே நேர்ந்தாலும் நேரலாம். நாம்தான் அவன் இருக்கிற இடத்துக்குப் போகக் கூடாதே? இதைப் பற்றிச் சட்டசபையில் கேள்வி கேட்டால்தான் உண்மை தெரியுமோ, என்னவோ?

'கல்லாத பேர்களே நல்லவர்கள், நல்லவர்கள்' என்று ஒரு பெரியார் கதறியிருக்கிறாரே, அந்தக் கல்லாத இனத்

தைச் சேர்ந்தவன் காத்தான். 'என் சாமி! நீங்க எப்படிப் படிக்கிறீங்க? அது ஸல்லிசா வராதே! புஸ்தகம் பேசுமா?' என்று அவன் ஆச்சரியத்துடன் கேட்கும்போது, உங்கள் கண்களில் நீர் பெருகாமலிருக்கும் என்று நினைக்கிறீர்களா? காத்தான் உருக்கத்தின் உயிர்; உழைப்பின் உரு.

'காத்தான்! வண்டியிலேறேண்டா' என்றால், 'சாமி! எனக்கு என்னத்துக்கு வண்டி? கை கால் முடமா? எங்க நடையைத் தாங்கத்தான் பூமிதேவி யிருக்கிறளே! எங்களைப் போல மாடும் வாயில்லாச் சீவன். அது இழுக்க, எங்களுக்கு வண்டி சவாரி எதற்கு?' என்று அவன் நியாய முறையில் பேசினல், உங்களுக்கு எப்படி யிருக்கும்? அது உங்கள் உடம்பில் ஒரு பக்கத்தில் குத்தி, இன்னொரு பக்கத்தில் வெளிவரும்.

காதல் மணம், கத்தரிக்காய்க் கலியாணம் என்று பேசிக்கொள்ளுகிறுர்களே, அவர்கள் காத்தான் தம்பதிகளைப் பார்த்திருக்க மாட்டார்கள். காத்தான் பெண்சாதி அவனுக்குச் சோறு போடும் வகை உங்களுக்குத் தெரியாதே! காத்தான் இரண்டு கைகளையும் ஏந்திக்கொண்டிருப்பான். மனைவி சோறு வார்ப்பாள். காத்தான் கைகள் கீழே இருக்கும் சமயத்தில், அவன் மனைவி சிரித்துக்கொண்டு சொல்லுவதைக் கேளுங்கள் :

'ஏ, மாமியா மகனே! குடிச்சுப்புட்டு கன்னுப் பின்னுன்னு உளறறையே! ஆம்பிளை ஒசத்தி இன்னு சொல்றயே! இப்போ யார் கை மேலே, யார் கை கீழே? சொல்லு, திருக்குத் திருக்குன்னு ஆந்தை மாலி (ஆந்தை மாதிரி) முழிக்காதே!' என்பாள். 'அடி, பய மகளே! உன் கைதான் மேலு.

இன்னம் கொஞ்சம் சோறு போடு!' என்று சொல்லிக் கால் கட்டை விரலால் அவள் தொடையை 'நிண்டுவான்'. இதிலே கவிதையும் காவியமும் இல்லையானால், வேறே எங்கே யிருக்கும்?

காத்தான் சத்தியம் தவறமாட்டான். 'பொய் சொன்னு கண் அவிஞ்சு போயிடுங்க' என்று அவன் சொல்லும்போது அவனைப் பார்க்கவேண்டும். தர்ம சாஸ்திரம் அவன் உள்ளத்தில் குடிகொண்டு வாழ்கிறதோ என்று ஆச்சரியப்படும்படி யிருக்கும். 'கண் தெரிஞ்சு வழி நடக்கணுங்க' என்று அவன் சொல்லும் பொழுது, அவன் தர்ம தேவதையே போலத் தோன்றுவான் என்று நிச்சயமாய்ச் சொல்லலாம். கண்மூடித் தனமாய் எதையும் செய்யலாகாது என்று நமக்கு உபதேசம் செய்வது போலிருக்கும்.

காத்தானைப் போலத் திருப்தியுள்ளவர்களை யாருமே பார்க்க முடியாது. 'அதோ எரிந்துகொண்டு போகிறானே அவனுக்குத் தெரியும்!' என்று அவன் சூரியனைச் சாட்சி வைப்பது நமக்கு விநோதமாய்த் தோன்றலாம். சூரிய நமஸ்காரமும் சூரிய ஸ்தோத்திரமும் அவன் செய்கிறானே யொழிய, மற்றவர்கள் பாவனைதான் செய்கிறார்கள். ஏன், நாள் முழுதும் அவனுக்குச் சூரியன் கீழேதானே வேலை?

பகலிலே உழைப்பு; இரவில் தூக்கம் வரப்படாது! தூக்கம் வந்து நெல் திருட்டுப் போனால், 'அந்தப் பாட்டனுக்கு' (பண்ணை முதலாளிக்கு) யார் வழி சொல்லுகிறது? முதலாளிக்கு இரண்டு கலம் நெல் நஷ்டம் போகும். காத்தானுக்கு வருஷச் சோற்றுக்குக் கேடு. 'கண்ணன் என் சேவகன்' என்று பாரதியார் அழகாய்ப் பாடியிருக்கிறாரே,

அவர் எங்களூர்க் காவல் - காத்தானைப் பார்த்துத்தான் எழுதியிருக்கவேண்டும். 'என்ன நேர்ந்தாலும், மாதாகோவிலுக்கு மட்டும் போகமாட்டேன், சாமி! விபூதியை விடமாட்டேன், சாமி!' என்று காத்தான் சொல்லுகிறது உங்கள் காதில் கேட்கிறதா?

சித்திரம் — 11

## ஸ்டேஷன்மாஸ்டர் சாமி நாயுடு

**சா**மி நாயுடு சாதாரண ஆசாமியல்ல. அவர் ரொம்ப சாகஸக்காரர். சாகஸம் என்ற வார்த்தையைப் பற்றிக் கிராமங்களிலே சண்டை. அதற்கு என்ன அர்த்தம் என்று கிராமத்தார்கள் காலை இளவெயிலில் நின்றுகொண்டு, வாய்ச் சண்டை போடுவதைக் கண்டவர்களுக்கு ஆனந்தம். காணுதவர்களுக்கு நஷ்டம்.

மலையிலே விளைந்தாலும் அது உரலிலேதான் மசிய வேண்டும். நகரத்திலே நாகரிகம் எவ்வளவு வலுத்து நின்றுலும், கிராமத்தார்கள் அதை ஏற்று, அதற்கு முத்திரை வைக்காத வரையிலும் நகர நாகரிகத்துக்கு மதிப்புக் கிடையாது. நகரத்திலே பேசுகிற பாஷையையும் நாட்டுப்புறம் ஏற்காவிட்டால் அதற்கு உயிரில்லை; ஓட்டமும் கிடையாது.

சாமி நாயுடு சாகஸக்காரர் என்று நகரம் சொன்னதனுல் என்ன லாபம்? நாட்டுப்புறம் அதை ஏற்க வேண்டாமா? ஒரு மனிதனை எடை போட்டு நிறுப்பதற்கு, கிராமத்தார்களுக்குத்தான் நன்ருய்த் தெரியும் என்கிருர்கள். சர்க்கார் முதல் காந்தி வரையில் எல்லோரும் கிராமத்தார்களுக்குக் கொடுக்கும் மதிப்பைப்பற்றி என்ன சொல்லுவது?

இப்பேர்ப்பட்ட மதிப்பு வாய்ந்த கிராமத்தார்களே, சாமி நாயுடுவை ஒப்புக்கொண்டுவிட்டார்களானால், நமக்குள் வாக்குவாதமும் அபிப்பிராய பேதமும் எதற்காக வென்று கேட்கலாமோ இல்லையோ? சாமி நாயுடு என்று கிராமத்தில் கேட்டால், 'அந்த வீடு!' என்று கையைக்காண்பித்து, கேட்கிறவனைப் பார்த்துப் பரக்கப் பரக்க விழிப்பான் கிராமத்தான்.

உங்களுக்குக் கோபம் வரலாம். 'சாமி நாயுடு அந்த வீடா? என்ன அநியாயம்! கிராமத்தாருக்கே மூளை கம்மி' என்று ஏதேதோ பதட்டமாய்ச் சொல்ல உங்களுக்குத் தோன்றலாம். என்ன பதட்டமாய்ப் பேசினாலும் கிராமத்தானிடம் உங்கள் ஜம்பம் பலிக்காது. சாமி நாயுடு கட்டியிருக்கிற புது வீட்டைக் கொண்டுதானே, அவர் சாகஸக்காரர் என்று கிராமத்தான் தீர்மானித்திருக்கிறான்? அப்படியிருக்க, 'சாமி நாயுடு அந்த வீடு' என்று சொல்லக் கிராமத்தானுக்கு ஏன் அதிகாரமில்லை?

எப்படியாவது பணம் சேர்க்கிறவன் சாகஸக்காரன் (சமயோசித புத்திசாலி) என்பது கிராமத்தார்களின் சந்தேகமில்லாத முடிவு. இப்பொழுதேனும் சாகஸக்காரன் என்பதற்கு உங்களுக்கு, புலவர்கள் சொல்லுவது போல, பொருள் விளக்கம் ஏற்பட்டதா? நல்ல வேளை! நான் தப்பித்தேன். உங்களுக்குப் புரியாவிட்டால், விரோதமான ஜூரி கையில் மாட்டிக்கொண்டு தவிக்கும் வக்கீலைப் போல, நான் திண்டாட வேண்டியிருக்கும்.

சாமி நாயுடுவுக்குப் 'புது வீடு சாகஸம்', 'நில சாகஸம்' முதலியன எங்கிருந்து குதித்தன? நாயுடுகாரர்கள் முன்னொரு

காலத்தில் இந்த நாட்டு அரசர்களாயிருந்த பழங் கதை, உங்களுக்குத் தெரியாதா என்ன? அப்பொழுது அவர்கள் கோட்டையை விட்டுவிட்டாலும், இப்பொழுதேனும் கண் விழித்துக்கொள்ளாமல் இருப்பார்களா? அப்படியானால் சாமி நாயுடுவுக்குச் சாகஸம் தோன்றிய காரணத்தைக் கிண்டிக் கிளறி ஏன் விசாரிக்க வேண்டும்?

சாமி நாயுடு சிறந்த வைஷ்ணவக் குடும்பத்தைச் சேர்ந்தவர். லட்சுமி நாராயணன் கடாட்சத்துக்குப் பாத்திரமான வைஷ்ணவக் குடும்பங்களுக்கு ஒரு நாளும் அதிருஷ்டக் குறை இருக்காது என்று சொல்லுவதுண்டு. அது மெய்யோ பொய்யோ, அது எப்படிப் போனாலும் போகட்டும். சாமி நாயுடு குடும்பத்தில் பட்டை நாமத்துக்குக் குறைவில்லை. இரவில் பவனி வருகிற லட்சுமி நாராயணனுக்கு, பக்தர்களின் முக விலாஸம் நன்றாய்த் தெரியவேண்டு மல்லவா?

சாமி நாயுடு பிறந்த வீட்டில் கஞ்சிக்குக் கஷ்டம்; ஆனால் பரம்பரைப் பெருந்தன்மை குறையவே யில்லை. ஆச்சாரியாரின் காணிக்கையை எப்படியாவது செலுத்திவிடுவார்கள். வைகுண்ட ஏகாதசித் திருவிழாவை உள்ளூர்க் கோவிலில் நடத்தி வைப்பதில் தவறுவதில்லை. இவ்வளவு பணச் செலவு செய்த பின்னர், ஒரு மூடி தேங்காய், ஒரு கைந்த வாழைப் பழம், ஒரு சாண் பூ, காதிலே ஒரு துளஸீ தளம் - இந்த வைபவங்களுடன் அவர்கள் வீட்டுக்குத் திரும்பி வரும் பெருமை நடையைக் கண்டால், நீங்கள்கூடச் சிரிக்க மாட்டீர்கள் என்று நிச்சயமாய் என்னால் சொல்ல முடியும்.

பெருமைப் பெருங்காயச் சொப்பு வீட்டிலே வளர்ந்த சாமி நாயுடுவுக்கும் வயது ஒவ்வொரு வருஷமாய்க் கழிந்து

கொண்டே வந்தது. இங்கிலீஷ் பாஷை மோப்பம் கொஞ்சம் அவருக்கு ஏற்பட்டது. பதினெட்டு வருஷமானவுடனே, வயது ஞாபகம் அவருக்கும் வீட்டாருக்கும் ஏக காலத்தில் உதயமாயிற்று. ஏழைக் குடும்பமாயினும், பிள்ளை ஏதேனும் வேலையைத் தேடவேண்டும் என்று சொல்லத் தகப்பனுருக்கு வாய் எழவில்லை.

அதிருஷ்டம் எதிர்பாராமல் வருமாம். சாமி நாயுடுவுக்கு நேர்ந்ததிலிருந்து இது மெய் என்று தோன்றுகிறது. உள்ளூர் நண்பர் ஒருவர், 'ஏண்டா, சாமி! நீ "கட்டுக் கட கட" படிக்கிறதுதானே! சும்மா ஏன் பொழுதைப் போக்கிக்கொண்டிருக்கிருய்?' என்றூர். 'நீ என்ன சொல்லுகிருய்?' என்று சாமி நாயுடு கேட்க 'தந்தி கற்றுக்கொண்டால், ஸ்டேஷன்மாஸ்டர் வேலை வரையிலும், அதற்கு மேலும் உயரலாமே!' என்றூர் நண்பர்.

சாமி நாயுடு 'கட்டுக் கடகட' கற்றுக்கொண்டார். ரயில்வே உத்தியோகத்தில் நுழைந்தார். தந்தி கற்றுக்கொண்டாலும், முதலில் டிக்கட் கலெக்டர் வேலை. டிக்கட் வாங்கும்போது, அவர் அடைகிற ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. சொர்க்க லோகத்துக்கு வழி விடுகிற ஸ்ரீமந் நாராயணன் சேவகனே தாம் என்பது அவரது திருவுள்ளம். ஏழை எளியவர்கள் டிக்கட்டில்லாமல் வந்தால், சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டு, 'ஓடிப் போ! இங்கே நிற்காதே!' என்பார். இரண்டொரு கண்ணீர்த் துளிகளும் கீழே விழும். பரம்பரை பொய்யாய்ப் போகவில்லை என்று காண்பிக்கவோ என்னவோ?

கொஞ்சம் கொஞ்சமாகப் பஞ்சம் தெளிந்தது. சின்ன வேலைக்குப் பிறகு பெரிய வேலை. அதற்கப்புறம் அடுத்த வேலை. வேலை வராமலிருந்தால் ஒன்றுமே யில்லை ; வந்தால் மேலே மேலே வந்துகொண்டே யிருக்கும். வேலைக்குத் தக்க வருமானமும் அதற்கு மீறிய வருமானமும் உண்டு என்று சொல்லவும் வேண்டுமா? வேலைக்கு மீறிய வருமானத்தைக் கொண்டு, சொந்த வீடு ஒன்று நாயுடுகாருக்கு வந்து சேர்ந்தது.

சாமி நாயுடு டெலிபோன் மூலமாய்ப் பக்கத்து ஸ்டேஷன் மாஸ்டரைக் கூப்பிடுவது உங்களுக்குத் தெரியாதே! 'அய்யம்பேட்டை!' என்பார். 'பண்டாரவாடையா?' என்று மற்றவர் கேட்பார். மனிதர்கள் இப்படி விநோதமாக மாறுவது ரயில் உத்தியோகத்தில்தான் சாத்தியமான சங்கதி. இந்த மாதிரி சுமார் முப்பது வருஷங்கள் வளர்ந்த சாமி நாயுடு, மற்றவர்களை மரியாதைக் குறைவாக அழைப்பதாக எண்ணலாகாது. பழக்கம் காரணம்.

ரயில் வருகிற நேரத்தில், பச்சை சிவப்புக் கொடிகள் சகிதமாய், சாமி நாயுடு பிளாட்பாரத்தில் உலவும் காட்சி அற்புதம். இங்கே ஒரு வார்த்தை; அங்கே ஒரு போர்ட்டரின் பேரில் அதிகாரம் ; இன்னொரு இடத்தில் அன்பு விசாரிப்பு ; கார்டுக்குப் பேட்டி ; டிரைவரோடு வாக்குவாதம் ; பெரிய உத்தியோகஸ்தர் ரயிலில் போனால், நல்ல நேர்த்தியான கும்பிடு ; சந்தடிசெய்து இறங்குகிற பிரயாணிகளிடம் கோபம் — இது ஒரு தர்பார். இந்தத் தர்பாரைப் பார்க்காத ஜன்மம் பாழ். இவ்வளவுதான் சொல்லமுடியும்.

## மார்க்கட்டு மாணிக்கம்

மார்க்கட்டு மாணிக்கம் கடைத் தெருவில் காசுக் கடையில் விற்கும் நவரத்ன கற்களில் ஒன்றல்ல. மாணிக்கம் உயிருள்ளவன். அவன் மார்க்கட்டில் அலுக்காமல், சலிக்காமல் வியாபாரம் செய்கிறான். 'கடனுக்கு விற்றேன்' என்று தலைமயிரைப் பிடித்து இழுத்து, தொடையில் கை வைத்து, எலிகள் ஓடுவதையும் கவனிக்காமல், ஏக்கக் கவலையில் ஆழ்ந்து கிடக்கும் மனிதனை, சித்திரத்தில் பார்த்திருப்பீர்கள். அந்தப் பேர்வழியல்ல மாணிக்கம்.

மாணிக்கம் எதிலும் சுட்டி. எந்தச் சமயத்திலும் சுட்டி. அவன் சுறுசுறுப்பின் திரு அவதாரம். கடைக்கண் பார்வையிலேயே அவன் உங்கள் ஜோலியை, சீக்கிரமாக உணர்ந்து கொள்வான். அவன் குரலின் கவர்ச்சியை, பிளேட்டில் எடுத்துத்தான் ஆனந்தப்பட வேண்டும். அல்லது நேரிலே கேட்டு அனுபவிக்கலாம். மனிதனுடைய குரலும் முகமும் ஈசனுடைய வரப்பிரசாதங்களோ என்னவோ?

மாணிக்கம் பள்ளிக்கூடத்துக்குப் போய், பணத்தைப் பாழாக்கும் கூட்டத்தைச் சேர்ந்தவனல்ல. பணத்தைத்

தண்ணீர் பட்ட பாடாக, எல்லாத் திசைகளிலும் வாரி இறைக்கும் மைனர் இனத்தைச் சேர்ந்தவனுமல்ல. பணத்தையே தெய்வமாகக் கும்பிட்டு, மனம் குழைந்து போகும் பலவீனர்களின் கோஷ்டியைச் சேர்ந்தவனுமல்ல. பணத்துக்காக விழுந்து விழுந்து பாடுபடுகிற வழக்கமும் அவனிடம் கிடையாது.

கிரிக்கட் விளையாட்டை மண்டை உடைந்துபோகிற மாதிரி விளையாடுகிறார்கள் இங்கிலீஷ்காரர்கள். வாழ்வை ருசியில்லாத கேலியாகக் கருதுகிறார்கள் இந்தியர்கள். இந்த மாதிரியான வக்கிர புத்தி, மாணிக்கத்தினிடம் கிடையாது. மோசம் செய்யாத வியாபாரம் இல்லை என்பது அவனுடைய சூத்திரமல்ல. வியாபாரத்தைப் பண்ட மாற்றுதலாக அவன் கருதுவான். பந்தய மோசடியாக நினைப்பதில்லை.

மார்க்கட்டில் கலகலவென்று சிரிப்புக் கேட்டால், அந்த இடத்தில் மாணிக்கம் இருக்கிறான் என்று நிச்சயம் செய்து கொள்ளலாம். யானை வரும் பின்னே, மணி யோசை வரும் முன்னே. பழுத்த பலாப்பழத்தை, மலர்ந்த தாழம்பூவை, பூத்த ரோஜாவை, வாசனை வீசப்படாது என்று யாராவது தடுக்க முடியுமா? மாணிக்கத்துக்குச் சிரிப்பு சுபாவமாகும்.

'தந்தை தாய்ப் பேண்' என்று ஒரு பெரியார் உபதேசித்திருக்கிறார். இந்த உபதேசம் மாணிக்கத்துக்குத் தேவையில்லை. மாணிக்கத்துக்குத் தந்தை தாய் கிடையாது. அபூர்வப் பிறவியோ, ஆகாயத்திலிருந்து குதித்தானோ என்று கேலி செய்யலாகாது. மாணிக்கம் குழந்தையாக இருக்கும்பொழுதே பெற்றோர்கள் இறந்து போய்விட்டார்கள். அவனை எடுத்து வளர்ப்பதற்கு உற்றார், ஊரார்தான்

பாக்கி. உற்றூரும் கைவிட்டு விடவே, ஊரில் ஒரு கிழவி அவனை எடுத்து வளர்த்தாள். அவளும் காலகதியானுள்.

பிறகு அவன் தானே வளர்ந்தான். 'எல்லோரும் தாமாகத்தான் வளர்கிறார்கள். பிறர் வளர்ப்பது என்பது மரியாதை. வளர்வது இயற்கை, வளர்ப்பது இயற்கை' என்று சொல்லுகிறீர்களோ? கெட்டியாக, அடித்துப் பேசினுல் அதன் உண்மையை ஒருவாறு ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். மாணிக்கத்தை வளர்த்த கைகள் மறைந்து போனதும், அவனும் மறைந்துபோகத்தானே வேண்டும், உங்கள் வாதத்தை ஒப்புக்கொள்ளாவிட்டால்?

நீங்கள் சொல்லுவதை ஒப்புக்கொள்ளாவிட்டால் இன்னெரு சங்கடம் நேருகிறது. என்னைச் சீமையிலிருந்து சூட்சுமமாக வளர்ப்பதாக, இந்தியா மந்திரி ஹோர் ஜாடையாகக் குறிப்பிடுகிறார். அது சுத்தத் தவறு என்று எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. நான் அனுபவத்தில் கண்ட உண்மை, உங்களிடமிருந்து வரும்பொழுது, அதை மறுத்துப் பேச நான் ஏன் முயலவேண்டும்? மாணிக்கம்தான் ஏன் முயலவேண்டும்?

வீடே தெரியாமல், ஆகாயக் கூரையின் கீழ், பெற்றோர்களின் ஆதரிப்பின்றி வளரும் குழந்தைகள் ரொம்பப் புத்திசாலிகள் என விக்டர் ஹூகோ என்ற பிரெஞ்சு மேதாவி சொல்லுகிறார். மேதாவிகள் இயற்கையின் மர்மத்தை அறிந்தவர்களாய்த்தான் இருக்கவேண்டும். மாணிக்கத்தை மனத்தில் எதிர்பார்த்து நினைத்துத்தான் ஹூகோ எழுதினரோ என்னவோ?

இயற்கைக்கு, விபரீதமான ஒரு கோணல் புத்தி இருக்கிறப்போலத் தோன்றுகிறது. மனிதர்களுடைய முயற்சி

யையும், அல்ப புத்தியையும், கட்டுப்பாட்டு மனப்பான்மை யையும் படீர் படீர் என்று தகர்த்து எறிந்து, அவர்களை இழிவுபடுத்த வேண்டுமென்பது அதன் நோக்கம் போலத் தோன்றுகிறது. இல்லாவிட்டால் அது இரணியனையும் படைத்து, நரசிம்மனையும் ஏன் படைக்கவேண்டும்? தன வந்த மூடனையும் படைத்து, தெருவில் வளரும் புத்திசாலி யையும் ஏன் படைக்க வேண்டும்?

வேதாந்த விசாரத்தில் — உண்மையிலேயே வேதாந் தம் துன்பம்தான்; அதற்கும் நடைமுதல் வாழ்வுக்கும் வெகுதூரம் — ஆழ்ந்து, 'ஆற்றில் துறையறியாமல்' அலை யும் சாஸ்திர ஆராய்ச்சியாளருக்கு எதிர்ப்படைப்பாக இயற் கைத் தாய் மாணிக்கத்தைச் சிருஷ்டித்தாள் போலும்! அவன் முகத்திலே துக்கக் குறியே இருப்பதில்லையே! அவன் முகத்தில் இவ்வளவு அமைதி ஏன் குடிகொண்டிருக்க வேண்டும்? இதை ஆராயப் புகுந்தால், ஆராய்ச்சியாளர் களுக்குக் கோபம் வந்தாலும் வரலாம். நமக்கு ஏன் வீண் தொல்லை?

மார்க்கட்டு மாணிக்கம் எல்லோருக்கும் வேண்டியவன். அவன் வியாபாரிக்கும் தோழன்; வாங்குகிறவனுக்கும் மந்திரி. மூட்டை தூக்கி சிதம்பரம் காதிலும் ரகசியம் ஓதுவான். எல்லோருக்கும் இங்கிதமாய் நடந்துகொள்ளு வதில் அவன் இணையற்ற சாமர்த்தியசாலி. உலக சகோதர தத்துவத்தை, அவனிடமிருந்து ராஜதந்திரிகள் கற்றுப் பழகிக்கொள்ளவேண்டும். மித்திர பேதம் செய்பவர்கள் அவனுடைய இங்கிதத்தின் பெருமையையும் தேவையையும் உணரவேண்டும்.

'மாணிக்கம்' என்பார் ஒரு வியாபாரி. 'ஏன் அண்ணே,' என்று கண் குளிர, மனங் குளிரச் சிரித்துக்கொண்டு சொல்லு வான் மாணிக்கம். 'இன்றைக்கு வியாபாரம் மந்தமாய் இருக்கிறதே!' என்பார் வியாபாரி. 'நாளைக்கு இதையும் சேர்த்துச் செய்துவிடுகிறது. இன்னும் பொழுது போக வில்லையே! பொழுது போவதற்குள் பார்த்துக் கொள்ளு வோம்' என்பான் மாணிக்கம். வீட்டில் வளர்ந்தவர்களுக்கு ஏக்கம் இருக்கலாம். தெருவில் வளர்ந்த மாணிக்கத்துக்கு ஏக்கம் எங்கிருந்து வரும்?

'நல்ல சரக்கா யில்லையே!' என்று குறை கூறுவதைப் போல யாரேனும் சொன்னால், 'கிடைத்ததை வைத்துக் கொண்டு திருப்தியடைய வேண்டும்' என்று மண்டையி லடித்தாற்போல, சாதுர்த்தனத்துடன் பதில் சொல்லுவான். அதாவது, மாணிக்கம் அனுபவ வேதாந்தி. குறை கூறி அலுத்துக்கொள்ளும் அபத்த மனிதர்களைக் கண்டால், அவனுக்குத் துளிகூடப் பிடிக்காது. சுகம் வேண்டியது தான். சுகம் கிடைக்காவிட்டால், துக்கத்தைப் பொறுத்துக் கொள்ளும் சக்தி வேண்டும் என்பது அவன் கட்சி. அதனாலே தான் அவன் அனுபவ வேதாந்தி என்றேன்.

'என்ன, மாணிக்கம்! கையில் பணமில்லையே! ரொம்ப முடை. என்ன செய்கிறது?' என்று எவரேனும் கேட்டால், கேட்பவனுடைய உண்மையான நிலைமையை உணர்ந்து உடனே பரிகாரம் செய்வான். பாசாங்கு முடை என்று தோன்றினால், சிரித்துச் சிரித்துக் கேட்டவனுக்கு நல்ல 'மண்டகப்படி' செய்து அனுப்பிவிடுவான். பேச்சின் சூட்சு மத்தையும் நிலைமையின் உண்மையையும் சொல்லி வைத்தது போல உணரும் தன்மை அவனிடம் உண்டு.

'மாணிக்கம்! உனக்கு ஏன் இன்னும் கலியாணம் ஆக வில்லை?' என்று யாரேனும் இடக்காகக் கேட்டால், 'நீங்கள் பெண் கொடுக்கிற வரையிலும் காத்திருப்பதாக உத்தேசம்' என்பான். அதே கேள்வியைப் பரிவுடன் யாரேனும் கேட்டால், 'மார்க்கட்டு வியாபாரக் கலியாணம் பண்ணிக்கொள்ளு வது கஷ்டமா? மாணிக்கத்தின் அருமை அறிந்து, சுயம்வர மாக (இது அவன் வார்த்தைகள்) ஒரு பெண் வருகிறாளா என்று பார்க்கிறேன்' என்பான்.

மாணிக்கம் இயற்கையின் புதல்வன். அனுபவ வேதாந்தி. அன்பு குமுறி வீரிட்டு அடிக்கும் ஊற்றுக் கண். மாணிக் கத்துக்குச் சிரிப்பு தாரகம். வேலை ஆகாரம். அவனுக்கு முகச் சுளிப்பு சகிக்க முடியாத நோய். எவரும் அவனுக்குப் பெரியவரல்ல. யாரும் அவனுக்குத் தாழ்ந்தவரும் அல்ல. எதையும் பொறுப்பான். யாரையும் வெறுக்க மாட்டான். 'மாணிக்கத்தைப் போல உண்டா?' என்று யாரும் சொல் லும்படியாக அவன் நடந்துகொண்டு வருகிறான். கடவுளும் நீங்களும் சேர்ந்து அவனை ஆசீர்வதிக்க வேண்டும்.

# குப்பிப் பாட்டி

குப்பிப் பாட்டி என்று எனக்குத் தெரியாமலே கொஞ்சம் உரக்கச் சொல்லிவிட்டேன் போலிருக்கிறது. வீதியிலே போய்க்கொண்டிருந்த பையன் சும்மா போகக் கூடாதோ? 'ஸீஸா பாட்டி, புட்டிப் பாட்டி, பாட்டில் பாட்டி' என்று கத்திக்கொண்டே ஓடுகிருன். அவனுக்கு ஏன் இந்தக் குறும்பு? அவன் சொன்னதற்கும் எனக்கு அர்த்தம் புரியவில்லை.

பக்கத்திலிருந்தவர் பையனுடைய பிரால மொழிகளை விளக்கிக் காண்பித்தார். தமிழ் ஜில்லாக்களில் சிலவற்றில் 'பாட்டில்' என்ற இங்கிலீஷ் வார்த்தைக்கு 'குப்பி' என்றும் 'ஸீஸா' என்றும் சொல்லுவார்களாம். 'குப்பிப் பாட்டி பாட்டில் பாட்டியானது பொருத்தமுள்ளதுதான்' என்ருர் அவர். பையனுடைய குறும்பு சாமர்த்தியத்தைப் புகழ்ந்து கொண்டே போனல், குப்பிப் பாட்டியின் பாக்கிக் கதையை யார் சொல்லுகிறது?

'நூற்றிலொரு பேச்சு', 'ஆயிரத்தி லொருவன்', 'லட்சத்தில் ஒரு சீமான்', 'கோடியில் ஒரு சாது' என்று

சலிக்காமல் உலகத்தில் சொல்லிக் கொள்கிறார்களே, அந்த ரகங்களில் சேர்ந்தவள் குப்பிப் பாட்டி. குப்பிப் பாட்டியைத் தனிப் பேர்வழியாகக் கருதுவது கூடாது. அவளை ஒரு பெரிய ஸ்தாபனமாக மதித்து மரியாதை செய்யவேண்டும். ஊரிலே குப்பிப் பாட்டிக்குத் தெரியாமல் நடக்கிற சங்கதி ஒன்றுமே இருக்காது.

குப்பிப் பாட்டி என்று சொல்லும்பொழுதே, அவள் சுமங்கலி யல்லவென்று எல்லோருக்கும் நிச்சயமாய்த் தெரிந்திருக்கும். அவள் சுமங்கலியாக இருந்து தாலி கட்டிக் கொண்டிருந்த காலத்தை, நாட்கள் கணக்கில் முடித்து விடலாம். கலியாணமாகி, மூன்றாம் மாதத்தில் குப்பிப் பாட்டி — கலியாணமான பொழுது அவள் பாட்டியல்ல — விதவையானாள். அவளுக்கு வயது அப்பொழுது பதின் மூன்று.

பதின்மூன்று என்ற எண், கிறிஸ்தவர்களுக்கு அபசகுனமாகப் படுமாம். அதைக் காட்டிலும் கொடுமையாகி விட்டது குப்பிப் பாட்டிக்கு இந்தப் பதின்மூன்று. 'அறுக்கத்தானோ என்னவோ, துப்பு கல்யாண மணையில் உட்கார்ந்திருந்தபொழுது அவ்வளவு அழகாயிருந்தாள்!' என்று புகழுரை பாடிவிட்டு, ஊர்க் கிழங்கள் துக்கம் கேட்டுவிட்டுப் போய்விட்டார்கள்.

குப்பிப் பாட்டியின் சிறு பிராய காலத்திலே, இரண்டு பேச்சுக்கள்தாம் தாராளமாய் உலாவி வந்தன. எதற்கெடுத்தாலும் 'தலை விதி' அல்லது 'போறாத காலம்' என்று பரிதாபக் குரலில் பெண்கள் சொல்லுவார்கள். வைதிகக் குடும்பத்துப் பெண்கள் விதவை நிலைமை யடைந்து, மேற்

கூறியவாறு சொன்னால், உடனே கைமேல் பலன்களாக இரண்டைக் காணலாம். தலை மொட்டையும் வெள்ளைப் புடவையும்தான் அவர்களுக்குக் கிடைக்கும் சம்மானங்கள்.

பதின்மூன்று வயதிலேயே, குப்பிப் பாட்டியின் தலை மயிர் அவிழ்த்துவிட்டால் பூமியைத் தொடும். இப்பேர்ப் பட்ட அழகு வாய்ந்த தலை முடியை எடுக்க மறுத்துவிட் டான் நமது பழைய நண்பன் சங்கரலிங்கப் பண்டிதன். 'அந்தப் பயலுக்கு வந்த திமிரைப் பார்' என்று ஊரில் வைதி கர்கள் சத்தம் போட்டுப் பேசிக்கொண்டார்கள். ஆனால் தங்கள் தெய்வத் தன்மை பொருந்திய ஆசாரத்தை எப்படி யேனும் காப்பாற்றவேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு வரவில்லை. இயற்கை உணர்ச்சியை அசட்டு ஆசாரம் வெல்ல முடியுமா?

ராஜா இறந்தால் பிள்ளை பட்டம் பெறுகிறான். தகப் பன் இறந்தால் மகன் சொத்தை அடைகிறான். மேலே யிருப்பவன் இறந்தால் கீழே யிருப்பவன் பதவியில் உயர் கிறான். மனைவி இறந்தால் புருஷன் மறுமுறை விவாகம் செய்துகொள்கிறான். இவ்வளவும் இயற்கையாக நடக்கின் றன. புருஷன் இறந்தால், பெண் மூளியாக வேண்டுமென்று தண்டனை விதித்தவன் மனிதனுக்குப் பிறந்தவனல்லன். அவன் தேவ குழாத்திலோ, அசுர கணத்திலோ சேர்ந்தவ னாக இருக்கவேண்டும்.

அசுர உலகத்தில் வாழும் குப்பிப் பாட்டி யாரிடம் முறையிட்டுக்கொள்ள முடியும்? தேச பக்தன் ராஜத் துரோகி யாகும் விந்தையைப் போல், அழகுக் குப்பு அவலட்சணக் குப்பிப் பாட்டியானாள். வயதாகாவிட்டாலும் வெள்ளைப்

புடவை மட்டும் இருந்தால் போதும், குழந்தைகள் பாட்டி என்று கூப்பிடுவதற்கு. சிறு வயதிலேயே 'திவான் பகதூர்' என்பது போல, 'பாட்டி' என்ற மரியாதைப் பட்டம் பெற்ருள் குப்பிப் பாட்டி.

பாட்டிப் பட்டம் பெற்ற குப்பு, அந்தப் பதவிக்கு ஏற்ற வாறு பேசவும் காரியம் செய்யவும் ஆரம்பித்துவிட்டாள். குப்பிப் பாட்டிதான் ஊருக்கு சாஸ்திரக் களஞ்சியமாய் விட்டாள். அவள் சொல்லுவதுதான் ஆசாரம். அவள் செய்வதுதான் அரசியல் பிரசங்கம். அவளுடைய உபதேசம்தான் தர்ம சாஸ்திரம். அவளுடைய பழங் கதைகள் யாவும் புராணங்கள், இதிஹாஸங்கள்.

'ஏண்டாப்பா! உனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதோ! என்ன கிறிஸ்தவன் மாதிரி கிராப்பு உனக்கு?' என்று ஒரு பையனைத் திட்டுவாள். அவன் ஏதாவது அலட்சியமாகப் பதில் சொன்னுல், 'அவன் கிறிஸ்தவனுகி விட்டான்' என்று ஊரிலே ஒரு வீடு பாக்கி யில்லாமல் சொல்லி விட்டு வந்துவிடுவாள். குப்பிப் பாட்டி காசில்லாமல் நடக்கிற பத்திரிகை. கற்பனைச் செய்திகள் தான் அந்தப் பத்திரிகையில் இடம் பெறும்.

'ஏ அப்பா! வாயாலே சொன்னுல் சகிக்காது. என்ன ராங்கியாய், அவாத்துக் கமலம் பள்ளிக்கூடத்துக்குப் போகிறது! ஜோடாம், கொடையாம்! முழ நீளப் பை! ஒரு அடுக்குப் புஸ்தகமாம்! தலையிலே நீளப் பின்னல்! கோணல் வகிடு! என்ன அமர்க்களம்! பாஸ் பண்ணி, ஜில்லா கலெக்டர் உத்தியோகம் பண்ணப் போருளோ!' என்று குப்பிப் பாட்டி பிரசங்கம் செய்தால், அதை மற்றவர்கள் கேட்டுக்கொண்

டிருக்க வேண்டியதுதான். பதில் என்னமாய்ச் சொல்ல முடியும்?

'ராமு! உனக்கென்னடா வந்தே மாதரம்! உங்க அப்பன் சோற்றுக்குத் தாளம் போடுகிறுன். கைக் குயர்ந்த பெண்கள் மூன்று வீட்டிலே கலியாண மில்லாமல் தவித்துக்கொண்டிருக்கு. உனக்கு என்ன காந்தி ஜம்பம் வேண்டியிருக்கு? நாலு அட்சரத்தைப் படித்து, ஏதாவது ஒரு ஆபீசிலே ஒட்டிக்கொண்டால், உனக்குக் கோடிப் புண்ணியம்' என்று குப்பிப் பாட்டி நயந்தும் பயமுறுத்தியும் சொல்லுவதை நீங்கள் கட்டாயம் பார்க்கவேண்டும்.

'நன்னுயிருக்கு' என்று சொல்லிக்கொண்டே பாட்டி ஒரு வீட்டுக்குள் நுழைந்தால், அந்த வீட்டாருக்குத் திகில்தான். பிராஸிகூஷன் கேஸ் துவக்கியாகி விட்டது என்று அந்த வீட்டார் ஜாக்கிரதையுடன் இருக்கவேண்டியதைத் தவிர அவர்களுக்கு வேறு வழி கிடையாது. 'என்ன பாட்டி நன்னுயிருக்கு?' என்று யாரேனும் கேட்டுவிட முடியுமா?

'நன்னுயிருக்கு! பெண் குதிர்போல வளர்ந்துவிட்டாள். நாலு கழுதை வயதாகிவிட்டது. கலியாண நினைவே உங்களுக்குக் கிடையாதோ? என் வாயை அடக்கிவிடலாம். ஊர் வாயை அடக்க முடியுமா? நான் என்றால் எல்லாருக்கும் எளிசு. என்னை லட்சியம் செய்யவேண்டியதில்லை. ஊரிலே கன்னு பின்னுன்னு பேசிக்கொள்ளுகிறுர்கள். யாருக்கு என்றுதான் என்னுல் சமாதானம் சொல்ல முடியும்?' என்று பாட்டி பிரசங்கம் செய்யத் துவக்கிவிடுவாள். தன் வாய்தான் ஊர் வாய் என்று பாட்டிக்கு நன்ருய்த் தெரியும்.

## குப்பிப் பாட்டி

'ஏண்டாப்பா! ஒங்களைச் சொல்லி என்ன பண்ண? இது ஒங்க காலம். கலி முற்றிக்கொண்டு வருகிறான். ஒங்க பாடு கொண்டாட்டம்தானே! நீங்கள் ஏன் விலகிப் போகப் போகிறீர்கள்? இதையெல்லாம் கண்ணால் பார்க்காமல் தொலைந்து போகணும் என்றால், காலம் வரவில்லை' என்று குப்பிப் பாட்டி ஹரிஜன சகோதரனைப் பார்த்து வசை மாரி பொழிந்தால், அவள் வாயை யாரால் அடக்க முடியும்?

குப்பிப் பாட்டி இல்லாமற் போனால் ஊராருக்குப் பொழுது போகாது. ஒரு நாரதர் இல்லாமற் போனால், நாடகக் கதையில் எப்படி கோவையும் ரஸமும் இருக்காதோ, அதுபோலவே குப்பிப் பாட்டி இல்லாமற் போனால் கிராம வாழ்க்கை ரஸமா யிருக்காது. ஊருக்குப் புதிதாய் வருபவர்கள் போகிறவர்கள் எல்லோரையும் தன் மனத்தில் பதிந்து கொள்ளாமல் குப்பிப் பாட்டியால் இருக்க முடியாது.

குப்பிப் பாட்டிதான் உண்மையான ராஜபக்தி கொண்டவள். சர்க்காரிலும் சர்க்கார் உத்தியோகத்திலும் அவளுக் கிருக்கிற பக்தியைப் போல் வேறு எவருக்கும் இருக்க முடியாது. 'வாய்ச் சக்கர வட்டமாய் உங்களுக்குப் பேசத் தான் தெரியும். இங்கிலீஷ்காரர்களைப் போல உங்களுக்கு ராஜ்யமாளத் தெரியுமா? செத்துப் போன தேகத்துக்கு உயிர் கொண்டு வருவதைத் தவிர மற்ற எல்லாம் இங்கிலீஷ் காரனுக்குத் தெரியும்' என்று குப்பிப் பாட்டி வீட்டிலும் ஊரிலும் சொல்லுவதைச் சர்க்கார் கவனித்து அவளுக்கு ஒரு பட்டம் கொடுக்கலாகாதா?

குப்பிப் பாட்டி பண்டைக் காலத்துப் பேர்வழியான தால், அவளுடைய நடத்தையைப் பற்றி யாரும் அவதூறு

பேச முடியாது. அவளுக்கு எழுத்து வாசனை பூஜ்யம். ஊரைவிட்டு வெளியே அவள்செல்லுவது அருமை. கலியாண சந்தர்ப்பங்களிலே இந்தப் பாக்கியம் கிட்டும். அப்பொழுது தான் விதவை என்ற எண்ணமே அவளுக்கு இருக்காது. சர்வாதிகாரி என்ற எண்ணத்துடனே தான் எல்லா உத்தரவு களையும் போடுவாள். அவள் வைத்ததுதான் சட்டம்.

இளம் பிராயத்திலே அறுத்துப்போய், கர்ப்ப அனுப வம் இல்லாத குப்பிப் பாட்டி, பிறர் பிரசவ காலத்தில் சேவை செய்யும் ஆச்சரியமே ஆச்சரியம். அந்தத் தொழிலில் அவள் நிபுணத்வம் வாய்ந்தவள். நடுச் சாமத்தில் வந்து கூப்பிட்டாலும், முகத்தைச் சுளித்துக் கொள்ளாமல், பிரசவ மருத்துவம் செய்வதில் அவளுக்கு இருக்கிற ஊக்கத்தை அளவிட்டுச் சொல்ல முடியாது. வாய்த் துடுக்கு, குப்பிப் பாட் டிக்கு அதிகமே யொழிய, உள்ளம் கள்ளம் கபடமற்றது. உழைத்து மடிவதுதான் அவள் ஜன்மமெடுத்ததற்குப் பயன்.

## சமையல் சாமா

'படைக்குப் பிந்திக்கொள்; பந்திக்கு முந்திக்கொள்' என்று ஆவலுடன் சொல்லுகிறார்கள். சோற்றுக்கு முந்திக் கொள்பவர்கள் சண்டை சமயத்தில் தூங்காமல் என்ன செய் வார்கள்? படை - பந்தி பழமொழி எப்பொழுது பிறந்தது என்று சொல்ல முடியாது. ஆனால் அது பிறந்த பின் சமை யலுக்கு அதிகமான பெருமை ஏற்பட்டுவிட்டது என்பது உறுதி.

தேசியம் வலுக்க வலுக்க, சர்க்காரின் பட்டங்கள் எப் படி மலிவாகப் போய்விட்டனவோ, அதுபோலவே, மேற் சொன்ன பழமொழிக்கு அகண்டமான பிரசாரம் ஏற்பட ஏற்பட, சமையல் சாமாக்கள் மலிந்து போனார்களே யொழிய, அவர்கள் கைக்கொண்ட தொழிலின் பெருமை பெருகிக் கொண்டே வருகிறது.

சமையல் சாமா அந்த 'லய'னில் பக்காப் பேர்வழி. சம தர்மக் கொள்கையும் பொதுவுடைமை வழியும் உயிர் நாடிக ளாகப் பாவிக்கப்படும் இந் நாளிலே சாமா பெரிய கனவான் என்றுதான் நான் சொல்லியிருக்க வேண்டும். அன்பு

ஊற்று வற்ற வற்ற, கட்சிகளும் கொள்கைகளும் புதிது புதிதாய்த் தோன்றுகின்றன. அன்பை அடிப்படையாகக் கொள்ளாத எந்தத் திட்டமும் நீடித்திருக்காது என்ருல், வேதாந்தம் என்பார்கள் விரைவிலே.

எனக்குச் சாமாவினிடம் அன்பு இருக்கிற அளவு, மதிப்பு இருக்கிற அளவு, எனையோருக்கும் இருந்தால் போதும் என்றுகூடச் சொல்லப் பயமாயிருக்கிறது. பேச்சு சுதந்திரம் வேண்டும் என்று வாய் சலிக்காமல் கூச்சல் போடும் மனிதர்கள், பிறருக்கு அந்தச் சுதந்திரத்தை மனம் ஒப்பிக் கொடுப்பதில்லை. அற்புதத்தைப் பார்க்க எண்ணிப் புராணத்தைப் படிக்கிருர்களே, வாழ்க்கையில் தற்போது நேர்ந்திருக்கும் பேச்சுச் சுதந்திரப் பறிமுதல் அற்புதத்தை நேரே கண்ணுல் பார்க்கக்கூடாதா?

சாமாவுக்கு இப்பொழுது ஐம்பது வயதிருக்கும் எனக்கு வயதில் பெரியவர் சாமா. என்ருலும் 'அண்ணு' என்று என்னை அழைப்பதில் அவர் வாய் நேர்த்தி ஒருபொழுதும் குலைந்ததே யில்லை. சாமாவுக்கு இப்பொழுது எங்கே பார்த்தாலும் கீர்த்தி. கற்ருேர்க்குச் சென்ற விடமெல்லாம் கருப்பு (பஞ்சம்). சாமாவுக்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு. அவன் ஜன்மம் எடுத்த லக்னம் என்கிருள் குப்பிப் பாட்டி. அது எனக்குத் தெரியாது.

சாமா தமது அடிநாள் கதையை என்னிடம் சொல்லுவதுண்டு. அதிலே, எனக்கு நினைவிருக்கிறதைச் சொல்லுகிறேன். சாமா சொல்லுகிருர்: 'அண்ணு, நான் அடிநாளில் கஷ்டப்பட்டதைச் சொன்ஞல் நீங்கள்கூடச் சிரிப்பீர்கள். "நாலு எழுத்துத் தெரிந்துகொள்ளாமல், காண்டி

யைக் கையில் எடுத்துவிட்டான் பார்" என்று எல்லோரும் ஏசினார்கள். எனக்கு அவமானம்.

'எனக்குச் சாப்பாட்டிலே கொஞ்சம் நாக்கு ஜாஸ்தி. அதற்காக என் நாக்கை அறுத்து விடுகிறதா? அதிகப் பிரசங்கிகளின் நாக்குகள்கூட அறுபடுகிறதில்லையே! நான் நன்றாகச் சாப்பிடுவது என் பாட்டி கண்ணில் குற்றமாகப் பட்டது. "பெரு வயிறு படைத்தவன்" என்று இந்த தேசத்திலேதான் ஏச்சும் பேச்சும். ஏன், அண்ணா, நன்றாய்ச் சாப்பிடாவிட்டால், ஒருவன் எந்த வேலையைத் திடமாய்ச் செய்ய முடியும்?

'என்னோடு ஒருத்தன் படித்தான். அவனுக்குத் தாசில் வேலை ஆகிவிட்டது. அவனுக்குத் தாசில் வேலையானால் எனக்கு என்ன? அப்பா! ஊரிலே என்னைத் தொளைத்து விட்டார்கள். ஒருவர் மாட்டிலே ஒன்று சொத்தை யென்று என்னைப் பார்த்துக் கேலி செய்தார்கள். ஆனால் வேடிக்கை யைப் பாருங்கள். அவன் ஏதோ ஆபீசிலே தப்புச் செய்து விட்டான். ஜெயிலுக்குத்தான் போகிறது பாக்கி. வீட்டிலே வந்து பேன் பார்த்துக்கொண்டிருக்கிறான். அவனுக்கு வேலை போன பிறகுதான், நான் ஊரிலே தலை நிமிர்ந்து நடக்க முடிந்தது.

'நான் சமையல் வெங்கிட்டு கையில் தயாரானவன். வெங்கிட்டு என்றால் லேசுப் பேர்வழியா? சமையல் பாத்திரங்களெல்லாம் அவன் சொல்லுகிறபடி அலறும். அவன் கைராசியோ என்னவோ, ஈரக் கட்டையை அடுப்பிலே வைத்தாலும் அது "கணகண" வென்று கொழுந்துவிட்டு எரியும். பத்து மணிக்குப் பந்தி பரிமாறணும் என்று சொன்னால்

"டாண்" என்று குண்டுபோட்டால் போலத் தயார் பண்ணி விடுவான். யாருக்கும் சமையல் தெரிந்ததாகவே வெங்கிட்டு ஒப்புக்கொள்ள மாட்டான். என் ஓண்டி கிட்டத்தான் அவனுக்குப் பயம்.

'என்ன அண்ணா! மிளகு குழம்பு என்றால் மூன்று மைல் தூரத்துக்கு வாசனை வீசவேண்டும். "யாரு, சாமா சமையலா?" என்று எல்லோரும் கேட்கவேண்டும். வயிற்று வலிக்காரன்கூட, ஒரு சிப்பல் சாதம் கூடச் சாப்பிடவேண்டும். சமையல் என்றால் ஏன் என்று கேட்க வேண்டாமா? கரண்டி எடுத்தவனெல்லாம் சமையற்காரனாகிவிட முடியுமா? அண்ணா, எல்லாருந்தான் பேசறா! காந்தி மகாத்மாவும்தான் பிரசங்கம் செய்கிறார்!'

சமையலில் சாமா மகாத்மாவைப் போல என்று சொல்லும்பொழுது எனக்குச் சிரிப்பு வந்தது. சாமா சொல்லுகிறார்: 'நன்னாச் சிரியுங்க அண்ணா! ஒவ்வொரு வேலையிலும் எக்ஸ்பர்ட்டுக்குத்தானே மகாத்மா என்று பெயர்? இந்தத் தந்தியைப் பாருங்கோ! இது எங்கிருந்து வந்திருக்கிறது? சென்னைப் பட்டணத்திலிருந்து வந்திருக்கிறது. பட்டணத்திலிருந்து என்னைக் கூப்பிடறதுன்னா லேசா? நான் டம்பமாய்ச் சொல்லுகிறேன் என்று நினைக்கக்கூடாது. ஒன்றும் அதிகமாய் வேண்டாம். ஒரு நாளைக்கு என் கையாலே ரஸம் சாதம், சட்டினி பண்ணிப் போடுகிறேன். சாப்பிட்டுப் பாருங்கள்.'

சாமா அழுத்தமாகச் சொல்லச் சொல்ல எனக்கு ஆனந்தம். எக்ஸ்பர்ட் (நிபுணன்) பேச்சு அழுத்தமாகத்தான் வரும், விழும். 'அதிருக்கட்டும், சாமா! நீர் கலியாண

வீட்டில் பெண்களுக்கு நடுவே எப்படி நிர்வாகம் செய்கிறீர்? அவர்கள் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லு வார்களே!' என்றேன்.

சாமா சிரித்துக்கொண்டு சொல்லுகிறார்: 'அண்ணா! ரொம்பவும் இனிப்பான கேள்விதான். கலியாண காலத்தில் பெண்கள் ரொம்பத்தான் கொட்டம் அடிக்கிறார்கள். வாஸ் தவந்தான். ஆனால் ஒரு சூட்சுமம் இருக்கிறது. அவர்கள் சொல்லுகிறதைக் கேட்கவும் படாது, கேட்காமல் இருக்க வும் படாது. அவர்கள் சமையல் கட்டுக்கு வாராமல் ஜெளி வாய்ப் பார்த்துக்கொள்ளவேண்டும். "பாவமே! நல்ல புட வையில் எண்ணெய் பட்டுப் போய்விட்டதே" என்றால், ஒரு குஞ்சு கூட அங்கே வராது. இல்லாவிட்டால், "அம்மா, அதற்கு உப்புப் போறுமா பாருங்கள்" என்றால், ஓட்டம் எடுத்துவிடுவார்கள். "புருஷாள் வரமாட்டா, பாருங்கோ" என்றால் போதும்.

'கிழவிகள் தொண தொண வென்று பேசிக்கொண் டிருப்பதைத்தான் தடுப்பது கஷ்டம். ஆனால், அவர்களுக் கெல்லாம் ருசியாய் ஏதாவது செய்து கொடுத்துவிட்டால், வாயடைத்துப் போய்விடும். நாம் கையிலே கொண்டுபோகிற பண்டம் நஷ்டப்பட்டுப் போய்விடுகிறதா? எல்லாம் அவர் களுடைய சாமான்கள்தானே?

'சமையல்காரனுக்குப் பெண்ணைக் கொடுக்கவாவது என்று என் மாமனார் கொழித்துக் கொழித்துப் பேசினார். இப்போ என்ன செய்கிறது? என் பிள்ளை சுந்தரத்துக்கு ஹைகோர்ட்டு வக்கீல்...அவர் பெண்ணைத்தானே கொடுத் திருக்கிறது. இப்போ, மாமனாருக்குத் தலை கால் தெரிய

வில்லை. எங்கள் வீட்டுக்கு வந்தால், ஆறு மாதத்துக்குக் குறைந்து போவதில்லை. எல்லாம் காலதேச வர்த்தமானம், அண்ணு !'

சாமா தம்மைப் பற்றிச் சொன்னது ஒருபுறம் இருக்கட்டும். எந்தப் பெரிய டீ பார்ட்டியிலும் அவர் இல்லாமலிருப்பதில்லை. செட்டாகப் பரிமாறுவதில் 'கொம்பன்'. 'அய்யர்வாளுக்கு அதிகமாக வைத்தால் கோபம் வரும்', 'டில்லியிலே முதலியார் சாப்பிடாத பட்சண வகைகளா? நம்ம ஊர்ப் பண்டமா அவருக்குப் பிடிக்கும்?' என்று சொல்லி, பிளேட்டில் கொஞ்சம்தான் வைப்பார். சாமா ஏய்க்கிறார் என்று தெரியும். ஆனல் அவர் சொல்லும் இங்கித வகையிலே எல்லோரும் ஈடுபட்டு, சிரித்துவிடுவார்கள்.

சாமா வேறு முறையில் பெருமை பேசிக்கொள்ளுவார். 'இந்த நாளிலே சர்க்கார் உத்தியோகம் சாசுவதமுமல்ல, உயர்ந்ததுமல்ல, அதிலே லீவும் கிடைக்காது. சம்பளமும் உயராது. மேலேயிருப்பவன் சாவதற்குக் கீழேயிருப்பவன் ஜபம் பண்ணிக்கொண்டிருக்கணும். சமையல் உத்தியோகமா, ராஜாங்கம்! வேணுமென்றால் வேண்டும்; இல்லையென்றால் வேண்டாம். யார் கேட்கிறது? சமையல்காரனை அலட்சியம் செய்ய யாருக்கு இப்பொழுது நெஞ்சிலே தைரியம் இருக்கிறது, கையிலே வலு இருக்கிறது?' என்பார் சாமா.

'நள பாகம் என்கிறார்களே, நளன் பீமசேனன் எல்லோரும் எங்கள் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். நாங்கள் எல்லாருக்கும் அமுது படைக்கும் சின்ன ஆண்டவன்கள்.

கை நிறையப் பரிமாறவேண்டும்; கள்ளமில்லாமல் வேலை செய்யவேண்டும். பெண்களை நிமிர்ந்து பார்க்கப்படாது. இப்படி யிருந்தால் பெரிய பணக்காரன் வீட்டுக் கலியாணச் சீட்டுக் கச்சேரியிலும் சமமாக உட்கார்ந்துகொள்ளலாம்' என்பார் சாமா.

# 'ஐகோர்ட்டு பாலிஷ்டர் மணி'

'எல்லா மேக்கரிலும் இங்கிலீஷ் மேக்கர்தான் ரொம்ப ஒஸ்தி' என்று கிராமங்களில் வீரசங்கிலி சவடால் மைனர்கள் நாகரிக முழக்கத்துடன் சொல்லுவதை நீங்கள் கேட்டிருப்பீர்கள். கிராமங்களிலே பழகாதவர்களுக்கு, மேற்கூறிய வாக்கியத்துக்கு அர்த்தம் செய்துகொள்ளுவது கொஞ்சம் சள்ளை. எல்லா தேசங்களிலும் தயாராகும் சாமான்களைக் காட்டிலும் இங்கிலாந்து தேசத்திலே தயாராகும் சாமான்தான் உயர்ந்தது என்று மைனரின் உபநிஷத சூத்திரத்துக்கு அர்த்தம்.

இங்கிலீஷ் என்ற முத்திரை ஏறின சாமான்கள் எல்லாவற்றிற்கும் இந்தியாவிலே ஒரு காலத்தில் ரொம்ப மதிப்பு இருந்தது என்பது உண்மை. இந்தச் சாமான்களில் ரொம்ப விளம்பரம் கிடைத்தது ஸன்லைட் சோப்புக்கும் பெஸண்டு அம்மையாருக்கும் என்று ஒரு விகடகவி கேலி செய்தார். இந்த ஜாப்தாவில் பாரிஸ்டரையும் சேர்த்துக்கொள்ளலாம் என்பது எனது தாழ்மையான மனு. ஒரு வார்த்தையின் அருமையும் பெருமையும் அது சிதைந்து போவதனால் தெரி

யும். ஜனங்கள் அந்த வார்த்தையை உபயோகப்படுத்தி நசுக்கி விடுகிறார்களல்லவா? மகாத்மா காந்தி என்றைக்கு எளியவர்களின் பேச்சிலே மகா காந்தியானாரோ, அன்றைக்கே அவருடைய மகத்துவமும் நிலைத்துவிட்டது. இதைப் போலவே பாரிஸ்டர் கதையும். கிராமத்தார்கள் பாரிஸ்டர் என்று சொல்லுவதில்லை. 'ஐக்கோர்ட்டு பாலிஷ்டர்' என்பார்கள்.

செப்டம்பர், அக்டம்பர் என்று அழுத்தமாய்ச் சொல்லத் தெரிந்த கிராமப் பெரியார்களுக்கு, பாலிஷ்டர் என்றால், அவருக்குத் தெரியாத சங்கதியும் சட்டமும் கிடையாது என்பது நினைப்பு. படி தாண்டாப் பத்தினியைப் போல் பாலிஷ்டர்களும் ஐகோர்ட்டுப் படியை விட்டு, கீழே இறங்கமாட்டார்கள் என்ற நம்பிக்கையின் பேரில், கிராமத்தார்கள் இவர்களுக்கு ஐகோர்ட்டு பாலிஷ்டர் என்று பெருமைப் பட்டத்தைக் கொடுத்தவர்கள். பாலிஷ்டர்கள் எல்லாக் கோர்ட்டுகளுக்கும் போய், தங்கள் நம்பிக்கைக்கு மோசம் செய்வார்கள் என்று கிராமத்தார்கள் கனவிலும் எண்ணியதில்லை.

'பாரிஸ்டர் ஒரு கைபார்க்கிற பேர்வழியல்ல; அவர் நாலு கையால் பார்க்கிற பேர்வழி' என்று சிறு பிள்ளைகள் இப்பொழுது பேசிச் சிரிக்கிறார்கள். 'நன்றாய்ச் சாப்பிடத் தெரிந்தால் பாரிஸ்டர் பரீட்சை தேறிவிடும்' என்று குறும்பாகவும் சிலர் சொல்லுகிறார்கள். 'சீமைப் பரீட்சைக்கு இரண்டு கையாலும் பணம் வாங்கினால் போதாது; நாலு கை வேண்டும்' என்று பாரிஸ்டரின் உடையைப் பரிகாசம் செய்த காலம் உண்டு. ஆனால் பாரிஸ்டர் மணிக்கு, தமது

தொழிலைப் பற்றி ரொம்ப மதிப்பு. தான் மேற்கொண்ட தொழிலிலே யாருக்குத்தான் மதிப்பு இருக்காது?

பாரிஸ்டர் மணியின் முழுப் பெயர் சுந்தர கனபாடிகளின் புதல்வன் சுப்ரமணிய கனபாடிகள். (கனபாடிகள் என்ற பட்டத்துக்கு எல்லா வகைகளிலும் வேதம் தேர்ந்தவர் என்று அர்த்தம்). வேதம் தெரியாத சுந்தர கனபாடிகள் பட்டத்தை மட்டும் பரம்பரைப் பெருமையாக வைத்துக்கொண்டிருந்தார். பரம்பரை என்ற பொய் கௌரவம் இருக்கும் வரையில், பட்டச் சுமையை எல்லோரும் தூக்கிப் பெருமூச்சு விடவேண்டியதுதான். அதேமாதிரிதான் சுந்தர கனபாடிகளும் செய்தார்.

கனம், ஜடை, சந்தை முதலிய அம்சங்களில் யாதொன்றையும் அறியாத சுந்தர கனபாடிகளுக்குப் பணத்திலே மட்டும் குறி. தகப்பனார் விட்டுப் போன ரொக்கம் கொஞ்சம் சுந்தர கனபாடிகளுக்கு வந்து சேர்ந்தது. பொய் ஒன்றுக்கு நூறாகக் குட்டி போடுகிற காலத்தில் பணம் ஏன் குட்டி போட முடியாது என்று தமக்குள்ளாகவே விவாதம் செய்து பார்த்தார். முடியும் என்ற தீர்மானத்துக்கு வந்தார். வந்ததுதான் தாமதம், அஷ்ட லட்சுமிகளும் நர்த்தனம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். அவர்கள் எப்படி நர்த்தனம் செய்தார்கள் என்ற விவரம் மட்டும் எனக்குத் தெரியாது.

கண்டிராக்டு, லேவாதேவி முதலிய பல துறைகளின் மூலமாய் கனபாடிகள் லட்சப் பிரபுவானார். 'பணம் இருந்தால் வா என்றது வரும், போ என்றது போகும்' என்பார்கள். தாலூகா போர்டு, ஜில்லா போர்டு இவைகள் அவரு

டைய வீட்டு வாசலுக்கு, சர்க்கார் நியமனம் மூலமாக வந்து சேர்ந்தன. இவைகளின் பேரில் கிரீடம் வைப்பதுபோல 'ராவ் சாகேப்' பட்டமும் வந்துவிட்டது. 'கனபாடிப் பிராமணன் சாயபு ஆகிவிட்டாராமே!' என்று அந்த ஊர்ப் பெண்டுகள் சொல்லிக்கொண்டார்கள். கனபாடிகளின் நீண்ட தாடியையும் தாம் நேரே பார்த்துவிட்டு வந்ததாகவும் இரண்டொரு கிழவிகள் கூத்தும் அடித்தார்கள்.

கனபாடிகளின் செல்வம் ஏறிக்கொண்டே வந்தது. அவரது செல்வம் லட்சத்துக்கு மேல் ஏறு முகம் கண்ட காலத்தில் சுப்ரமணியன் பிறந்தான். பிறந்த லக்னத்தைப் பல கூறு செய்து பார்த்தார்கள் ஜோஸியர்கள். 'ரொம்ப ஆசார சீலனாக இருப்பான். ஆயுசு தீர்க்க ஆயுசு' என்று சொல்லிவிட்டு, அன்றையத் தகாத கூலியைத் தட்டிக் கொண்டு போனார்கள் விரல் மடக்கி ஜோஸியர்கள்.

நாளாக நாளாக அவைகள் மாதங்களாகி, வருஷமாயின. வருஷங்கள் சேர்ந்து மணிக்கு வயதுப் பெருமையைக் கொடுத்தன. பெருமை இருக்கிற இடத்தில், எல்லாப் பொருள்களும் வந்து சேர்வது இயல்பு. வயதுப் பெருமை வந்த மணிக்கு நடை, உடை, பாவனை, பள்ளிக்கூடம் முதலியன வந்து சேர்ந்தன என்று சொல்லவும் வேண்டுமா? முதலிலே நடை, பிறகு உடை, பிறகு பள்ளிக்கூடம், பிறகு பாவனை — இப்படியெல்லாம் வரிசையாக வந்ததாக வைத்துக்கொள்ளுங்கள். இதிலே நாம் ஏன் காலம் போக்கவேண்டும்? அபிப்பிராய பேதம் இருப்பின் இப்பொழுதே தெரிவித்துவிடலாம்.

கண்டிராக்டிலே, ஏராளமாகப் புதுப் பணம் படைத்த கனபாடிகள் வீட்டிலே, எடுபிடி ஆட்களுக்குக் குறைச்சல்

எது? மணியைத் தூக்க ஒரு ஆள், இறக்க ஒரு ஆள், தூங்கப் பண்ண ஒருவன், தட்டி எழுப்ப ஒருவன், பள்ளிக்கூடத்துக்கு அழைத்துக்கொண்டு போக ஒருவன், திரும்பவும் இட்டுக்கொண்டு வர ஒருவன். அவனைத் திருப்தி செய்ய, அவனுடன் விளையாட எத்தனை பேர்களோ! மூச்சு விடு முன்னே முந்நூறும் நானூறும் ஆச்சென்றால் ஐந்நூறும் ஆகாதா என்று கம்பீரம் பேசிய கவி காளமேகத்தின் கவிதைகளைப் போல, மணியைச் சூழ்ந்து நின்றார்கள் பணியாட்கள். குடிசைக் குழந்தைக்குக் கஞ்சி கிடைக்காது. பங்களாக் குழந்தைக்குப் பணியாட்களுக்கு என்ன குறை?

கீழ்ப்படிய ஆசாமிகள் இருப்பின், அதிகாரம் செய்ய ஆள் அகப்படுவது அருமையா? எனவே, மணி அதிகாரத்திலேயே வளர்ந்தான். அதிகாரம் செய்து,செல்வத்தையும் அதிகாரத்தையும் கவர முடியும். ஆனால் அதட்டி சரஸ்வதியைப் பயமுறுத்த முடியுமா? மணிக்குக் கல்வி விஷயம் சிறிது மந்தம். அவனுக்கு அதிலே கவலை இருந்தால்தானே? கல்விக்குத் தூண்டுதல் தரித்திரம். தரித்திரம் இல்லையானால் கல்வி ஒருவனுக்கு ஜாடை மாடையாகத்தான் வரும். தனக்குக் கல்வி கடகடவென்று வரவில்லையே என்று மணி ஏங்கவுமில்லை. தன்னைச் சுற்றிச் சட்டமாய் நிற்கும் பரிவாரங்களைக் கண்டு, அவன் மனப் பூரிப்பு அடைந்தான்.

கல்விக்கு இத்தனை விரோதிகள் இருந்தும் மணி படிப்பைமட்டும் நிறுத்தவில்லை; மனத்தையும் சுளித்துக் கொள்ளவில்லை. ஒரு முழுக்கில் மண் எடுக்கும் கூட்டத்தை அவன் சேர்ந்தவனில்லை. ஒவ்வொரு பரீட்சைக்கும் இரண்டு மூன்று தடவையேனும் போகாமல் அவன் நிற்பதில்லை.

எது கடைசித் தடவை என்று எண்ணுகிருஞே, அந்தத் தடவை, அவன் எப்படியோ பரீட்சையில் தேறிவிடுவான். எனவே, மேல் பரீட்சைக்கு ஊக்கம்.

வீட்டிலே அட்டஹாஸம். எதற்கும் 'டாம்' என்ற இங்கிலீஷ் வார்த்தைதான். கலியாணப் பேச்சு, டாம். கிராப்பு வேண்டாம் என்ற பேச்சு, அதற்கும் டாம்தான். படிப்பு எதற்காக என்ற பேச்சு. வீடு முழுவதும் யாரைக் கண்டாலும் டாம்தான், அன்று முழுவதும். உடம்பு வாட்ட சாட்டமாய் வளர்ந்துவிட்டபடியால், அவனை எதிர்த்துப் பேச எல்லோருக்கும் பயம். வீட்டிலே பண்டிகை என்ருல் 'டாம், நான்ஸென்ஸ்' என்று ஆர்ப்பாடம் செய்வான். பரம்பரை வழக்கம் — 'டாம், பேசாதே!' என்பான். '.கன பாடியாத்துப் பிள்ளை இப்படியும் கெட்டுப் போக வேண் டுமா?' என்று ஊர்க் கிழவிகள், கண்களில் நீர் பெருகாமலே, அழுவார்கள்.

மணி போகிற வழியில் விட்டுவிட்டார் அவன் தகப் பனர். பி. ஏ. பட்டம் பெற்ருன். பாரிஸ்டர் பரீட்சைக்காக, சீமைக்குப் போகவேண்டும் என்ருன். 'நீ சம்பாதிக்க வேண்டுமா? என்னத்திற்கு பாரிஸ்டர் பரீட்சை? கலியா ணம் பண்ணிக்கொள்' என்று தாயார் மெதுவாகச் சொல்லிப் பார்த்தாள். 'சம்பாத்தியம் வேண்டாததற்குத்தான் பாரிஸ் டர் பரீட்சை. சம்பாத்தியத்தை நினைக்காதவனுக்குக் கலியா ணம் எதற்காக?' என்று சிலேடை செய்து மணி அம்மாவின் வாயை அடக்கிவிட்டான். கலியாணமானுலே இன்னெரு விவாகத்தைத் தூண்டும் இங்கிலாந்துக்கு, மணி பிரம்மசாரி யாகப் போய்ச் சேர்ந்தான்.

'பண மிருக்கிறவன் பாக்கியவான்' என்று பலர் தீனக் குரலில் உளறுகிறார்களே, அந்தப் பாக்கியவான் இனத்தைச் சேர்ந்த மணியின் சீமைச் செலவைக் கணக்குப் போட்டுப் பார்க்க முடியுமா? நோட்டு நோட்டாய்ச் செலவு; செக்காய் ஊரிலிருந்து, தகப்பனாரிடமிருந்து பண வருமானம். நினைத்ததை அனுபவிக்கக்கூடிய 'சொர்க்க பூமி' சீமை. எல்லாம் சேர்ந்துகொண்டால் மணியைக் கட்டிப் பிடிக்க முடியுமா? 'ஆனந்த மயம் இங்கிலாந்து' என்று மணி நண்பர்களுக்குக் கடிதம் எழுதத் தடை என்ன இருக்கிறது? அவன் குடியானவனோ, அரை வயிற்றுக்குக் கஞ்சி குடித்துவிட்டு, 'அய்யா ஊட்டுப் பிள்ளை பெரிய பாஸ் பண்ண சீமைக்குப் போயிருக்கு' என்று பக்கத்து வீட்டுக்காரனோடு பெருமையாகப் பேசிக்கொண்டான்.

மணியின் தகப்பனாருக்குத் திடீரென்று ஒரு நாள் சீமைத் தந்தி வந்தது. 'மனத்துக்கு உவந்த மாதை நான் மணந்துகொண்டேன்' என்று இலக்கண வழுவில்லாமல் மணி தந்தி அடித்துவிட்டான். சுந்தர கனபாடிகள் ரஸிகர். 'நான் கனபாடிகளின் தொழிலான வேதம் ஓதுவதை விட்டு, கண்டிராக்டு பண்ணினேன். நீ அத்துடன் நிற்காமல், சம்பிரதாயக் கலியாண வரம்பையும் தாண்டிவிட்டாய். ரொம்ப சந்தோஷம்' என்று பதில் தந்தி கொடுத்தது மல்லாமல், மோட்டார் கார், குடித்தனம் — இவைகளுக்காகப் பத்தாயிரம் ரூபாய் அனுப்பிவைத்தார்.

மணி பூரண பாரிஸ்டராயும், அவரது ஆங்கில மனைவி பூரண கர்ப்பிணியாயும், இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார்கள். 'தங்கள் காதல் மணத்தின் கனியான முதல் குழந்தை

இந்தியாவிலேதான் பிறக்கவேண்டும்' என்று ஸ்ரீமதி ஆனு-மணி சொல்லிவிட்டால், பாரிஸ்டர் மணிகூட அப்பீல் செய்துகொள்ள முடியாது. கலியாணத்துக்குப் பின் மணி தகப்பனருக்குக் கடிதம் எழுதிக் காலத்தைப் போக்குவதில்லை. எல்லாம் தந்திதான். ஸெண்ட்ரல் ஸ்டேஷனில் மணி தம்பதிகளைக் கனபாடிகள் வரவேற்றார். மணியின் மனைவி தனது இரு கைகளையும் கூப்பி, மாமனருக்குத் தண்டனிட்டாள். வெள்ளைக்காரி கும்பிட்டாளே என்று கனபாடிகள் மகிழ்ந்து போனர். அந்தக் கும்பிடுக்கு ஐம்பதினுயிரம் ரூபாய் செலவாயிற்று என்று அவருக்கு அப்பொழுது நினைவு வரவில்லை.

சென்னையில் மணி பாரிஸ்டராகப் பதிவு செய்து கொண்டார். பங்களாவையும் அமர்த்திக்கொண்டார். ஆனல் கோர்ட்டுக்குப் போகிறது ரொம்பத் தொந்திரை என்பது அவரது தீர்மான எண்ணம். ஏதாவது ஒரு கட்சிக்காரன், பாரிஸ்டர் என்று மோகம் கொண்டு கேஸோடு வந்தால், யானை விலை குதிரை விலையைப் போல் பீஸ், பணம் கேட்பார் மணி. 'வழக்கு ஜயிக்கவேண்டுமே! பணத்தைப் பற்றிப் பார்க்கவில்லை' என்று கட்சிக்காரன் சொன்னல், 'ஜயித்தால் என் சாமர்த்தியம்; தோற்ருல் உங்கள் துரதிருஷ்டம்; தோற்ருல் அப்பீல் செய்து, இன்னெருவரை வைத்து, உங்களுடைய அதிருஷ்டத்தைச் சோதித்துப் பாருங்கள்' என்பார் மணி. அணைத்துப் பேசாத பாரிஸ்டரிடம், யார் கேஸ் கொண்டு போவார்கள்?

தகப்பனர் பணம் அனுப்பவேண்டியது; அதை மணி தம்பதிகள் செலவழிக்கவேண்டியது. பங்களா வாயிலில்

நடைச் சித்திரம்

பாரிஸ்டர் மணி என்று மட்டும் எப்பொழுதும் போர்டு தொங்கப் போட்டு வைத்துக் கிழக் கனபாடிகளை மனங் குளிரச் செய்யவேண்டியது; டென்னிஸ் முதலிய விளை யாட்டுகளில் கலந்துகொள்ளவேண்டியது; ஸ்டேஷன் பிளாட்பாரங்களில், தம்பதி சமேதராய் உல்லாசமாய் உலாவ வேண்டியது; போகிற வருகிற நண்பர்களைக் கை குலுக்க வேண்டியது. நண்பர்கள் அழைக்கிற டின்னர் களுக்கு (விருந்துச் சாப்பாடுகளுக்கு)ப் போக வேண்டியது; இவைகளை யெல்லாம் கேட்டுக் கேட்டு, மணியின் தகப்பனார் உடல் தேய்ந்து, மாய்ந்து, மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கவேண்டியது — இதுதான் மணியின் தற்போ தைய வாழ்க்கைத் திட்டம்.

# இன்ஸ்பெக்டர் எம். எஸ். எம். பிள்ளை

'ஏன் அம்மா! எஜமான் தூங்கிக்கொண்டிருக்கிறார்களா, விழித்துக்கொண்டிருக்கிறார்களா?' 'தூங்கத்தான் போனாங்க; ஆனால் சத்தம் கேட்கிறது' என்று ஒரு குழந்தைப் பெண் இனிமையுடன் சொல்லுகிறாள். சரி; இந்த வீடுதான் இன்ஸ்பெக்டர் பிள்ளையவர்கள் வீடு. குழந்தை அவரது அருமைப் பெண். தூங்குகிற அறையிலிருந்து சத்தம் கேட்கிறது. அதைக் காது கொடுத்துக் கேட்போமே?

'ரைட், லெப்ட்; எஸ், ஸார்; ஆட்லி (ஆர்டர்லி)'. இவைகள் என்ன சத்தங்கள்? தூங்குகிற இன்ஸ்பெக்டர் அவர்கள் சொர்ப்பனத்திலே, போலீஸ் பட்டாளத்தை டிரில் வாங்குகிறார்; பெரிய துரையோடு பேசுகிறார்; ஆர்டர்லி சேவகனைக் கூப்பிடுகிறார். சத்தங்கள் இவைகள்தாம்; சத்தங்களுக்குக் காரணங்களும் இவைகளே.

இன்ஸ்பெக்டர் அவர்களைக் கிட்ட நெருங்கிப் பேசலாமோ? தாராளமாய்ப் பேசலாம். அவருக்கும் குடியும் குடித்தனமும் உண்டு; பிள்ளை குட்டிகளும் உண்டு. உற்றார் உறவினர் வீடுகளில், சாவு வாழ்வு விசாரிப்பதை, அவர்

நிறுத்திவிடவில்லை. அவருக்கும் இந்த தேசத்தின் பொது லாப நஷ்டத்தில் பங்குண்டு. பங்குண்டு என்பதை அவர் அறிந்துமிருக்கிறார், உணர்ந்துமிருக்கிறார். மற்றவர்கள் இன்ஸ்பெக்டர் அவர்களைப் பற்றித் தவறாக எண்ணிக்கொண்டால், அதற்காகப் பிள்ளையவர்கள் பாத்தியப்பட முடியுமா?

நல்ல பாரம்பரை யில்லாத குடும்பம் எந்த நாட்டிலும் கிடையாது. ஒவ்வொரு காலங்களில் ஒவ்வொரு குடும்பம் தலை நிமிர்ந்து வாழ்ந்து, செல்வாக்குடன் இருந்திருக்கும். ஆற்றிலே, எப்பொழுது, எந்த இடத்தில் மேடு இடும் அல்லது மடு விழும் என்று சொல்ல முடியுமா? அது போலவே, குடும்பங்களுக்கு வாழ்வும் தாழ்வும் கலந்துதான் வந்துகொண்டிருக்கும். முப்பது வருஷம் வாழ்ந்தவனுமில்லை, முப்பது வருஷம் கெட்டவனுமில்லை என்று சொல்லுவதை நீங்கள் கேட்டதில்லையா?

இன்ஸ்பெக்டர் அவர்களின் தகப்பனாருக்கு சந்திரசேகரம் பிள்ளை என்று பெயர். இன்ஸ்பெக்டரின் முழுப் பெயர் முருகேசம் பிள்ளை. தண்ணீரின் தன்மை, அது தங்கி நிற்கும் அல்லது பாய்ந்து ஓடும் நிலத்தின் நயத்தைப் பொறுத்தது என்பார்கள் பெரியோர்கள். இப்பொழுதோ ஒருவருடைய பெயரின் நயமும், நீளமும், சுருக்கமும் அவர் செய்யும் தொழில் அல்லது அவர் பார்க்கும் உத்தியோகத்தைத் தழுவி நிற்கும். அடி வலுவைப் பொறுத்தது கட்டிடத்தின் கெட்டி என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். உத்தியோகத்தின் பொருட்டு, முருகேசம் பிள்ளை அவர்கள் தமது பெயரைச் சுருக்கி, பட்டத்தை மட்டும் விஸ்தாரமாக வைத்துக்கொண்டார். தமிழ்ப் பெயரை முழுவதும் உச்ச

ரிப்பதில், பெரிய துரைக்குச் சிரமம் ஏற்படக்கூடா தல்லவா ?

முருகேசம் பிள்ளை நல்ல தருமப் பிரபுக்களின் பரம் பரையில் பிறந்தவர். அவருடைய மூதாதைகள் கொடை யில் சடையப்ப வள்ளலுக்குச் சிறிதும் சளைக்காதவர்கள். அன்னமிட்டுக் கெட்டவர்கள் கிடையாது என்பது பிள்ளை யவர்களின் மூதாதைகளின் சித்தாந்தம். அலுக்காமல் அன்னம் போட்டுவந்த இந்தக் குடும்பத்தை, சளைக்காமல் கன்னம் போட்டுத் துளைக்கத் துவக்கினுர்கள், கடன் கொடுத்த புண்ணிய மூர்த்திகள். அன்னம் போடுவதி லேயே ஈடுபட்டு வாழ்ந்த பெரியார்கள், தங்கள் குடும்பம் கன்னக்கோலால் துளைக்கப்பட்டு வரும் அதிசயத்தைப் பார்க்க மனம் ஒருப்படவில்லை. காணி காணியாகப் போச்சு. மிஞ்சினவை மானமும் அன்னமிடும் பித்தும்.

உலகத்தார் இந்தக் குடும்பத்தின் கௌரவத்தைப் பற்றி, ஆகாயம் முட்டும்படியாக, கற்பனை வர்ணனை கலந்து புகழ்ந்தும் வியந்தும் பேசலாம். ஆனுல் சளைத்த குடும்பம் நடக்க வேண்டுமே ? அதற்கு வழி என்ன ? யானை படுத்துக் கொண்டால், குதிரை மட்டம் என்கிருர்கள். ஆனுல் யானை சளைத்து, ஓய்ந்து, வலிமையை இழந்து, படுக்கையில் விழு மாகில், அது பிணமே. உபயோகமில்லாத பொருளைச் சவ மாக உலகத்திலே எண்ணுவதுதான் சகஜம். பிள்ளையவர் களின் தகப்பனுர் என்ன செய்வார் ? குடும்பத்துக்கு ஆதரவு எங்கிருந்து வரும் ?

பிள்ளையவர்களின் மூதாதைகள் புகழுடன் வாழ்ந்த காலத்தில், இங்கிலீஷ் ராஜ்யம் என்று ஒரு சங்கதி இருப்பதா

கவே அவர்களின் நினைவுக்கு வந்ததில்லை. நினைவு வர சந்தர்ப்பமும் ஏற்படட்டதில்லை. தாலூகா போர்டு, ஜில்லா போர்டு தேர்தல், ராவ்பகதூர் பட்டம், கலெக்டருக்கு விருந்து, தேக் கச்சேரி, கவர்னர் விஜயம், சுயராஜ்யப் பேச்சு, காந்திக்கு ஜே' கள்ளுக்கு பே, உங்களுக்கும் எனக்கும் பெப்பே — இந்த அற்புதங்கள் அந்தக் காலத்தில் இல்லவே யில்லை. நிச்சயமாய்ச் சொல்லுகிறேன், நம்பலாம். அந்தக் காலத்துப் பிரபுக்களின் கவனம் முழுவதும், பண்ணையாளின் சுகத்திலே, புலவர் வறுமையிலே, கோயில் திருவிழாவிலே, வாய்க்கால் வெட்டிலே, ஊர்ப் பஞ்சாயத்திலே, சத் கதா காலட்சேபத்திலே, தெருக் கூத்திலே, கம்பசேவையிலே,நிலாச் சாப்பாட்டிலே— இவைகளிலும், இவைகளை யொத்த இனங்களிலும் சென்று வந்தது.

கிராமப் பொது வாழ்வு கெடாத வகையில், எந்த ராஜா வந்தாலும், அவன் நியாயமான கிஸ்தி வசூல் செய்வதைப் பற்றி, பிள்ளையவாகளின் மூதாதைகளுக்கு ஆட்சேபம் இருந்ததில்லை. எனவே, அவர்களுக்கு இங்கிலீஷ் ராஜ்யத்தைப் பற்றிக் கவலையே யில்லை. ஆனால் பணப்பை சுருங்கி, பசி அதிகரித்தால் அவர்கள் என்ன செய்வார்கள்? விதியை நொந்தார்கள்; காலத்தைச் சபித்தார்கள் ; கடவுளிடம் முறையிட்டுக்கொண்டார்கள். இந்த மூன்று தகுந்த புள்ளிகளிடமிருந்து, யாதொரு பதிலும் வரவில்லை. பிறகுதான் யோசிக்கிற வேலையில் வீழ்ந்தார்கள். இங்கிலீஷ் ராஜ்ய நினைப்பு வந்தது. குடித்தனம் நடைபெறுவதற்கும் இங்கிலீஷ் ராஜாங்கம் நடைபெறுவதற்கும் சம்பந்தம் இருப்பதாக முருகேசம் பிள்ளையின் தகப்பனருக்குத் திடீரென்று யோசனை தோன்றிற்று. இதுதான் முருகேசம் பிள்ளை இங்கிலீஷ் பள்ளிக்

கூடத்துக்குப் போய்ப் படித்ததற்குக் காரணம். இதை நீங்கள் நம்பாவிட்டால், பிள்ளையவர்களையே நேரில் கேட்டுத் தெளிந்துகொள்ளலாம்.

பழைய காலத்தில் போர் வீரர்கள் யானை ஏற்றம், குதிரை ஏற்றம், வாள் வித்தை, வேல் வித்தை முதலியன பழகிக்கொள்ளுவார்களாம். பிள்ளையவர்கள் பள்ளியில், தாண்டுவது, ஓடுவது, குதிப்பது, கனத்த பொருளை வீசி யெறிவது, பந்தடிப்பது, பந்தடிக்கையில் ஆளைக் கீழே தள்ளு வது, விழுந்தவன் கோணலாய்ப் பார்த்தால் இவர் வெறித்து விறைத்துப் பார்ப்பது, தோழர்களின் தோளின்மேல கைபோட் டுக் கலகலப்பாய்ப் பேசிச் சிரிப்பது, பெரிய குடும்பத்தைச சேர்ந்தவர் என்பதற்கு ஜாடையாக வாத்திமார்களிடம் இங்கித வினயத்துடன் நடந்துகொள்ளுவது, பள்ளிக்கூடப் பொதுக் காரியங்கள் யாவற்றிலும், எவருடைய அழைப்பையும் எதிர் பாராமல், முன்னின்று உழைப்பது, சிறிது நேரம் படிப்பது— இவைகள் எல்லாவற்றையும் பிள்ளையவர்கள் சாங்கோபாங்க மாகப் பழக்கிக்கொண்டார். எனவே, உடம்பும் கெட்டிப் பட்டுப் போய்விட்டது. பார்வைக்கு ரம்யமான தோற்றம்.

பிள்ளையவர்களின் தகப்பனார் வறுமையை, மெல்லவும் முடியாமல், சொல்லவும் முடியாமல் தவிக்கிறார். தமது குமார னுடைய கல்வி அபிவிருத்தியைப் பற்றி அவருக்குக் கவலை. அவர் கவலைப்பட்டால் மட்டும் போதுமா? பையனுக்குக் குடும்பக் கவலை யில்லையே என்ற கவலையைப் பற்றி அவர் பெரிதும் கவலைப்பட்டார். முருகேசம் பிள்ளை, இந்தக் கவலை யினால் பாதிக்கப்படாமல், நல்ல ஆஜானுபாகுவாக வளர்ந்து விட்டார். போலீஸ் உயரத்துக்கு அதிகமாக, ஆறு அங்குலம்

வளர்ந்துவிட்டார். விளையாட்டுப் பந்தயங்களிலே தமக்குக் கிடைத்த பரிசுகளையும் பதக்கங்களையும் பார்த்துப் பார்த்து அவர் மகிழ்ந்தார். உடல் வலிமை கொண்ட இளைஞனுக்கு உள்ளப் பூரிப்பு இருப்பது இயற்கைதானே?

பிள்ளையவர்களின் தகப்பனார் நீடித்த மனோ வியாதியினால் மாண்டு போனார். குடும்ப வாழ்க்கை, தமது தகப்பனாரை விட்ட இடமும், அது தம்மைத் தொட்ட இடமும் தெரியாமல், பிள்ளையவர்கள் தவித்தார். 'பொல்லாத போலீசு' என்று கிராமத்தார்கள் புத்தியில்லாமல் சொல்லுகிறார்களே, அந்தப் போலீசுக்குப் போவது என்று பிள்ளையவர்கள் தீர்மானங் கொண்டார். மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் அரசன் மகளைக் கலியாணம் செய்துகொள்ளப் பாதி சம்மதம்தான். ஆனால் அரசன் மகள் சம்மதிக்க வேண்டாமா? பிள்ளையவர்கள் விஷயத்தில் — (அவரைப் பார்த்தாலே போதும்) — அரசாங்கத்தார் எவ்வாறு சம்மதம் கொடுக்காமலிருக்க முடியும்? பிள்ளையவர்களுக்குப் போலீஸ் வேலை கிடைத்தது.

போலீஸ் பெரிய துரை, பிள்ளையவர்களைக் கண்ணோட்டம் விட்டு கவனித்தார். அவருக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. 'எந்தக் கடவுள் உனக்கு இந்த உயரத்தையும் உடல் கனத்தையும் கொடுத்தார்?' என்று வினவினார். 'இங்கிலீஷ்காரர்களுக்கு, நிலைத்த சாம்ராஜ்யத்தைக் கொடுத்த கடவுள்' என்று உற்சாகத்துடன் திடீரென்று பிள்ளையவர்கள் வாய்ப் பதட்டத்துடன் சொல்லிவிட்டார். பெரிய துரைக்கு ஆனந்தம் பொறுக்க முடியவில்லை. சபாஷ் என்று தட்டிக் கொடுத்தார். கையிலே உத்தியோகம் வந்துவிட்டது

என்று பிள்ளையவர்கள் நிச்சயித்துக் கொண்டார். அவர் ஊகம் செய்துகொண்டது உண்மையே.

பிள்ளையவர்கள் வேலூரில் டிரில் பழகியது, பீனல் கோடு, ப்ரொஸீஜர் கோடு சட்டம் படித்தது, திருடர்களைப் பிடிப்பதற்கும், போக்கிரிகளை அடக்குவதற்கும், கிளர்ச்சிக் காரர்களை மடக்குவதற்கும் அவர் கற்றுக்கொண்டது — எல்லாம் மாமூல். இவைகளுக்கு அதிகமான பிரயாசை தேவையில்லை என்று பிள்ளையவர்கள் அடிக்கடி நண்பர்க ளிடம் சொல்லுவார். அவருடைய முடிவை அனுசரித்தே, நாமும் போவோமே; நாம் ஏன் அவைகளைப் பற்றி விஸ்தார மாகப் பேசவேண்டும்?

உத்தியோகம் வந்ததும், பிள்ளையவர்களுக்கு மனைவி யும் வந்து சேர்ந்தாள். அதிருஷ்டமும் அவகேடும் தனித்து வரமாட்டா என்று பெரியவர்கள் சொல்லுவது எவ்வாறு பொய்த்துப் போக முடியும்? ஆயிர ரூபாய் பணப் பையிலே, அடியில் இருக்கிற இடம் தெரியாமல் பதுங்கிக் கிடக்கும் ஐம்பதும் பதினைந்தும் பிள்ளையவர்களின் உத்தியோகத் துக்குச் சம்பளம். பணப்பைக்குக் காணாத ஐம்பதும் பதி னைந்தும் தோல் பையான வயிற்றுக்கு மட்டும் காணுமா? அதுவும் ஹிந்துப் பொதுக் குடும்பத்தில், ஒன்றிரண்டு தோல் பைகள் மட்டுமா? பத்துப் பேர்களுக்கு நடுவே சம்பா திக்கும் ஒருவன் படும் பாடு, 'உலகர் நவிலும் பஞ்சுதான் படுமோ, சொல்லத்தான் படுமோ?'

பிள்ளையவர்கள் உத்தியோக காலத்தில் படும் கஷ்டத் தைச் சொல்லி முடியாது. தெருவிலே பையன்கள் சம்பாஷ ணையின் நடுவே, 'ரைட்' என்று சொல்லிவிட்டாலே

போதும், பிள்ளையவர்கள் அறியாமலே அவரது வலது கால் ஆடும். அது அவருடைய காலின் பயிற்சி உணர்ச்சியைக் காண்பிக்கிறது. 'எபவ்ட்டேர்ன்' (உன்னைச் சுற்றித் திரும்பு என்று பொருள்) என்ற சத்தம் கேட்டால், தமது நாற்காலியை எதிர்ப்புறமாகத் திருப்பிப் போட்டுக் கொள்ளு வார். அவ்வளவு டிரில் கஸரத்து செய்திருக்கிறார். உடம் புக்குப் பழக்கம். அவர் என்ன செய்ய முடியும்? இவ்வளவு உற்சாகத்துடன் வேலை பார்த்தாலும், அவருக்கு 'பிளாக் மார்க்' (மேலதிகாரிகளின் கோபம் என்று பொதுவாக அர்த்தம் செய்துகொள்ளலாம்) பயம் ரொம்ப ஜாஸ்தி. 'ஓடம் வண்டியில் ஏறும், வண்டி ஓடத்தில் ஏறும், யார் கண்டார்?' என்று பிள்ளையவர்கள் தமக்குள்ளாகவே சொல் லிக்கொள்ளுவார்.

பரம்பரைப் பிரபுக்களின் குடும்பத்தில் பிறந்தவரான படியால், பிள்ளையவர்கள் பெருந்தன்மையோடிருப்பார். தமக்குக் கீழிருக்கும் கான்ஸ்டேபிள் வகையறாக்களிடம் துளிகூடக் கோபத்தையும் வருத்தத்தையும் காண்பிக்க மாட் டார். 'இடம், பொருள், ஏவல் ஒத்துக்கொண்டால் கான்ஸ் டேபிளும் சூபிரெண்டு ஆக முடியும்' என்று வேதாந்தம் பேசுவார். 'கோபமில்லாத போலீஸ்காரருக்குக் குடும்பக் கவலை வேண்டாம். அதைக் கடவுள் பார்த்துக்கொள்வார்' என்று பிள்ளையவர்களுக்குக் கீழிருக்கும் ஆசாமிகள் தங்க ளுக்குள் சொல்லிக்கொள்ளுவார்கள்.

பிள்ளையவர்களுக்கு ஒரே ஒரு வருத்தம்தான். 'நேற் றைக்குப் பிறந்த மீசை முளைக்காத பையன்கள் தமக்கு மேலே டெபுடி சூபிரெண்டாக வந்து விடுகிறார்கள். இருபது

வருஷம் பக்தி விசுவாசத்துடன் சர்க்காருக்கு உழைத்த தாம் இன்ஸ்பெக்டராக எவ்வளவு காலம் இருப்பது?' இது தான் அவருக்கு வருத்தம். பெரிய துரையிடம் முறையிட்டுக்கொண்டார். வேலைத் திறமைக்காகத் துரை பிள்ளையவர்களை மெச்சிக்கொண்டார். ஆனால் முடிவாகக் கிடைத்தது ராவ் சாகிப் என்ற பட்டமும் போலீஸ் மெடலும்தான். டெபுடி சூபிரிண்டு கோட்டை வாயில் திறப்பதற்கு வழியைக் காணோம்.

ஜாதகம் பார்க்கும் ஆமை ஜோசியரிடம் பிள்ளையவர்களின் ஜாதகம் போயிருக்கிறது. தபால் பில்லைகளுக்காக ரேகை பார்க்கும் லண்டன் நிபுணருக்குப் பிள்ளையவர்களின் உள்ளங்கைப் படம் போயிருக்கிறது. சிவன் கோயிலில் லட்சார்ச்சனைக்கும் பிள்ளையவர்கள் உத்தரவு கொடுத்திருக்கிறார். இதற்கு இடையே இன்ஸ்பெக்டர் ஜெனரல் துரைக்கும் மனுப் போயிருக்கிறது. டெபுடி சூபிரிண்டு கிடைக்குமா?

## தரகு கிருஷ்ணன்

தரகு கிருஷ்ணன் என்று அழகாகச் சொல்லலாமே, அதை விட்டுவிட்டு, தரகுக்காரக் கிருஷ்ணன் என்று ஏன் லோகத்திலே சொல்லுகிறார்களோ தெரியவில்லை. 'கடவுளுக்கு அடுத்தபடியாக ராஜா' என்பது பழைய காலத்துப் பேச்சு. அந்தப் பேச்சு ஆண்டு மாறிப் போய், 'கடவுளுக்கு அடுத்தாற்போல் சக்தியுள்ளவர்கள், பொது ஜனங்கள்' என்று பேசுவது இப்பொழுது வழக்கத்தி லிருக்கிறது. பழைய பொதுஜனங்களா யிருந்த புது ராஜாக்கள், ஒரு வார்த்தையை என்ன வேண்டுமோ செய்வார்கள். அவர்கள் சொன்னது தான் சட்டம்.

'அருமருந்து அன்ன' (தேவாமிருதத்தை யொத்த) என்று சொல்லும்படியாக, தமிழ் இலக்கணம் சொல்லிச் சொல்லிப் பார்த்தது. புது ராஜாக்களாகிய பழைய பொது ஜனங்கள், இலக்கணத்தின் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்கவே யில்லை. இலக்கணத்துக்கும் பொதுஜனங்களுக்கும் மல் யுத்தம். பொது ஜனங்கள் 'அருமருந்து அன்ன' என்பதைப் பிடிவாதமாக 'அருமந்த' என்று சொன்னார்கள். இலக்கணம் ஆனமட்டும் பார்த்து அலுத்து, அயர்ந்துபோய்,

புது ராஜாக்களான பழைய பொது ஜனங்கள் சொல்லுகிற மாதிரி சொல்லலாம் என்று ராஜி செய்துகொண்டது.

வேடிக்கை இதுதான். பிடிவாதமான முட்டாள்தனம் கூட, மேதையைப் போலவும் மதத்தைப் போலவும் ஆகி விடும் வழக்கம் உலகத்தில் உண்டு. நமது வாழ்க்கையின் நடை முதல் பழக்கங்களைப் பார்த்தால், இது, புலவர்கள் சொல்லுவது போல, தெற்றெனப் புலப்படும் (தெளிவாய் விளங்கும்.) மனிதர்களின் மூடபக்தி முழுமையும் பிடிவாத முட்டாள்தனத்திலிருந்து பிறந்த அருமைப் பிறப்பாகும். ஆனால் தரகுக்காரக் கிருஷ்ணன் இந்தப் பிறவி இனத்தைச் சேரவில்லை.

பண்டைக் காலத்திலே, பெரிய பெரிய தொகுதிக்குக் கூட, ஒரு தரகன் அகப்படுவது அருமை. இருபத்தைந்து மைல் வட்டாரத்திலே, ஒரே ஒரு தரகுத் தலை மட்டும்தான் நிமிர்ந்து நிற்கும். இந்தக் காலத்திலே, தடி யெடுத்தவர்கள் யாவரும் தண்டல்காரர்கள் (ராஜாக்களின் பிரதிநிதிகள்). ராஜா வேலையே மலிந்திருக்கிற பொழுது (ஐரோப்பாவையும் ஆப்கானிஸ்தானத்தையும் பார்த்துக்கொள்ளலாம்) தரகு வேலையா மலிய முடியாது ?

இந்த மாதிரி, தொழில்கள் மலிந்த இக்காலத்திலே தோன்றியவன் கிருஷ்ணன். பழைய பொது ஜனங்களான புது ராஜாக்களுக்குக் கோபம் வாராதபடிக்கு, நாமும் 'கிஷ்ணன்' என்று சொல்லுவோமே! கஷ்டப்பட்டுக்கொண்டு, 'க்ருஷ்ணன்' என்று ஏன் சொல்லவேண்டும்? கஷ்டப்படு வதற்குக் கூலிதான் உண்டா? இலக்கணத்தின் பூரண சம் மதத்தையும் பெற்று, 'க்ருஷ்ணன்' என்று சொன்னால்,

'இலக்கோணம் பேசருண்டோ' என்று பழைய பொதுஜன-புது ராஜா, பேச்சை நீட்டுகிருன். ஆட்டுக் கடாக்கள் இரண்டு சண்டை போடுகையில், நரி நடுவிலே அகப்பட்டுக்கொண்டு தவித்த கதி, நமக்கு ஏன் வரவேண்டும்? நாம்தான் பிறக்கிறது, இரக்கிறது, இருக்கிறது. இறக்கிறது என்ற நான்கு வார்த்தைகளுக்குள் நமது வாழ்வைப் பொட்டணமாக மடித்து வைத்துக்கொண்டு விட்டோமே! நமக்கு ஏன் வீண் தண்டா?

முன் காலத்திலே, ஒவ்வொருவரும் தங்களை மற்றவர்களுக்குத் தர்மகர்த்தாக்களாக மதித்து வாழ்க்கை நடத்தி வந்தார்கள். இப்பொழுதோ, ஒவ்வொருவனும் இன்னொருவனுக்குத் தரகன். தேசத்திலே சமாதானம் வேண்டுமா? 'தயாராயிருக்கிறோம். எவனும் உங்கள் கிட்ட வராமல் பார்த்துக்கொள்ளுகிறோம். நாங்கள் கேட்கும் தரகு சம்பளக் கமிஷனை மட்டும் நீங்கள் கொடுத்துவிடவேண்டும்' என்கிருர்கள், ஐ. ஸி. எஸ். தரகர்கள். தரகு கமிஷன் இல்லாத வேலையே கிடையாது. வாழ்க்கை, வாங்கி விற்கிற வியாபாரப் பொருளாக மாறிவிட்ட பிறகு, தரகுத் தொழில் மலிந்து போனதற்குக் காரணமும் வேண்டுமா?

தரகுத் தொழில் மலிந்ததென்றால், அதன் வருமானம் குறைந்துபோகவில்லை. கத்தரிக்காயைப் பயிர் செய்தவன், முழு வயிற்றுக்குச் சாப்பாடு கிடைக்காமல், தவித்துக் கொண்டிருப்பான். கத்தரிக்காயை வாங்கி விற்கிற தரகன் குபேரனாய்ப் போய்விடுவான். இதுதான் ரஸமான பாகம். பணக் கடவுளுக்குத் தரகன் பூசாரி. பூசாரி வரம் கொடுக்காமல், தெய்வத்தைக் காண முடியாது. தெய்வம் வரம் கொடுத்தாலும், பூசாரியின் வரம், கூட இருந்தாலொழிய,

காரியம் ஒருநாளும் பலிக்காது என்று தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

தரகனுடைய தயவு இல்லாமற் போனால், விளையும் பொருள்கள் வீட்டிலேதான் இருக்க வேண்டும். இவைகள் அவிந்து குப்பையாகப் போவதைக் காட்டிலும், அரைவிலை, கால் விலையாவது வரட்டுமே என்று ஜனங்கள் நினைக்கும் பொழுது, தரகன் விலாப்புடைக்கச் சிரித்து மகிழும் சங்கதி உங்களுக்குத் தெரியுமா? தரகன் செக்கைப் போல; அவன் பிழிந்து எடுத்துவிடுவான். தரகனுக்கு எண்ணெய் லாபம்; எள்ளின் சொந்தக்காரர்களுக்குப் புண்ணாக்கு மிச்சம். வீதாசாரம் சரிதான் என்று எனக்குத் தோன்றுகிறது. உங்கள் மனதும் இப்படியே இருக்குமாகில், தீர்மானத்தை — தரகர் நீங்கலாக — ஏகமனதாய் நிறைவேற்றி வைக்கலாம்.

தரகுக்கார கிருஷ்ணனை, தொங்கலில் விட்டுவிட்டு, நாம் கண்டதையெல்லாம் பேசிக்கொண்டிருந்தால், நியாயமாய் அவனுக்குக் கோபம் வரத்தானே செய்யும். 'எங்கிருந்தோ வந்தான், இடைச்சாதி என்றுரைத்தான்' என்று பாரதியார் பாடிய பண்டைக் கண்ணனுக்கும் (கிருஷ்ணனுக்கும்) நமது தரகு கிருஷ்ணனுக்கும் சம்பந்தம் கிடையாது. கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் இடைநின்று ராஜித் தரகு செய்த கண்ணன் பரம்பரைதான் நமது தரகு கிருஷ்ணனும் என்று நீங்கள் எண்ணிக்கொண்டால், அதற்கு நான் ஜவாப்தாரியல்ல. பண்டைத் தரகன் கிருஷ்ணனாலே பாரத யுத்தம் வந்தது. நவீனத் தரகர்களாலே உலக மகா யுத்தங்கள் வருகின்றன என்று நீங்கள் சொன்னால், அதை நானும் ஏற்றுக் கொள்ளவேண்டுமா?

## நடைச் சித்திரம்

கண்டதும் காதல் என்பது கதைக்கு அழகு, கவியின் கற்பனை, காவியத்தின் தேவை என்று பலர் எண்ணிக்கொண் டிருக்கலாம். தரகு கிருஷ்ணனை நீங்கள் பார்த்தால் இந்த மாதிரி நினைக்கமாட்டீர்கள். சொல்லுவதற்கும் உங்களுக்குத் துணிவு வராது. வாழ்க்கை வியாபாரத்திலே தரகு கிருஷ்ண னைக் கண்டதும் உங்களுக்குக் காதல் ஏற்படாமலிருப்பின் உங்களுக்குத்தான் நஷ்டம். உங்களைப் பயமுறுத்தி, நீங்கள் தரகு கிருஷ்ணனிடம் காதல் கொள்ளவேண்டும் என்பது என் சங்கற்பமல்ல. என் தயவு இல்லாமலே, நீங்கள் கிருஷ் ணனைக் கண்டதும் மோகித்துப் போவீர்கள்.

கிருஷ்ணன் பிறப்பினால் தரகன் அல்லன். அவன் மேற்கொண்ட தொழிலினாலும் அவனது குண விசேஷங்க ளாலும், கிருஷ்ணன் தரகன். உங்களுக்கு ஒரு சந்தேகம் வந்திருப்பதாக, நான் சந்தேகப்படுகிறேன். மறைமுகமாக, நான் பாரத பாகவத கிருஷ்ணனை வர்ணிப்பதாக நீங்கள் ஏமாந்து எண்ணிக்கொண் டிருப்பீர்களோ என்று சந்தேகிக் கிறேன். நான் பழைய கிருஷ்ணனை வர்ணிக்கவில்லை. புதுத் தரகு கிருஷ்ணனைப் பற்றிப் பேச்சு. மறைமுகமாகப் பேசு வதும், சிலேடை செய்வதும், தத்துவார்த்த அபத்தம் சொல்லுவதும் கதா காலட்சேபம் செய்யும் பாகவதர்களின் வேலை. பொருள் விளங்காமல், அதைப்பற்றி ஆனந்தப்படு வது, நம்மில் ஒரு கூட்டத்தாரின் வேலை. இரண்டு தொழில்களும் இல்லாத நான், தரகு கிருஷ்ணனைப் பற்றித் தான் சொல்லிவருகிறேன். சிறு பையன்கள் சொல்லுவது போல, 'முக்காலே மூணுவாட்டி' உறுதியாகச் சொல்லு கிறேன்.

# தரகு கிருஷ்ணன்

'தரகு கிருஷ்ணன், ஆட்டைத் தூக்கிக் குட்டியில் போடுவான்; குட்டியைத் தூக்கி ஆட்டில் போடுவான்' என்று பிரியத்தோடு, ஊர்க் கிழவிமார்கள் சொல்லுவார்கள். ஆடு விற்பனையில் கிழவிமார்கள் தேர்ந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் கிருஷ்ணன் சாமர்த்தியத்தை இப்படி வர்ணிக்க முடியுமா? குட்டியையும் ஆட்டையும் சேர்த்துத் தூக்கி, கிருஷ்ணன் யார் மேரில் போடுகிறானோ' அதைப்பற்றி பாட்டிமார்கள் சொல்லாததனால், எனக்கும் தெரியாது. உங்களுக்குத் தெரிந்திருந்தால் நான் சொல்லத் தேவையில்லை; வேலை மிச்சம்.

ராஜா பொம்மையிலிருந்து — பொம்மை ராஜா அல்ல — ராஜ்யம் வரையிலும், விற்பனையில் கிருஷ்ணன் தரகு செய்வான். 'ராஜா பொம்மையைப் பார்த்தீர்களா? என்ன அழகு? கண் முழித்தது முழித்த வாக்கிலேயே இருக்கிறது பார்த்தீர்களா? நிஜ ராஜாகூட இப்படி இருக்க முடியாது!' என்று கிருஷ்ணன் வர்ணிக்கத் தொடங்கிவிட்டால், விழித்தது விழித்த வாக்கிலேயே இருக்கிற பொம்மையை, வாங்காமல் போகும் வீரன்கூட இருக்க முடியுமா? 'சவம் அல்லவா விழித்தது விழித்த வாக்கிலே இருக்கும்; நாம் சவத்தை வாங்கலாமா?' என்று ஒருவருக்கும் தோன்றக் கூடாத வகையில் கிருஷ்ணன் தனது குரலை அமைத்துக் கொண்டு பேசுவான். ஆனால் அவன் தன் மனத்துக்குள்ளாகவே சிரித்துக்கொண்டிருப்பது, ஒருவருக்குமே தெரியாது.

அடை மழையிலே நனைந்து ஊறிப் போய், நெல் ஐப்பசி மாதத்துத தவளையைப் போல 'ஒப்பி'யிருக்கும். அதை வாங்குவோர் இருக்கமாட்டார்கள். கிருஷ்ணன் மனது

வைத்தால், 'வாகன்' கணக்கில் இந்த நெல் விற்பனையாகி விடும். அவன் சொல்லுவதைக் கேளுங்கள். விலைகாரர் வந்ததும், 'இந்த நெல்லை இனிமேல் புழுக்க வேண்டியதே யில்லையே! எதற்காக விறகுச் சேதம்? இது "பல்க்" நெல் (இங்கிலீஷிலே பல்க் என்றால் பருமன் என்று அர்த்தம், அதை மனத்தில் வைத்துக்கொண்டு, கிருஷ்ணன் கேலியாகப் பேசுவான்); இந்த நெல்லை அவல் இடிக்கலாம்; பொறி பொறிக்கலாம்; உண்டை பிடிக்கலாம்' என்று என்ன வெல்லாமோ சொல்லுவான். சாப்பாட்டுக்கு உதவுமா என் பதைப் பற்றி ஒரு பேச்சு பேசவும் மாட்டான்; பிறர் பேசுவதற்கு இடமும் கொடுக்கமாட்டான். அவர்கள் வாங்கு கிற வரையில் வர்ணித்துக்கொண்டே போவான்.

'ஜெர்மன் ஸில்வர். இது நேற்றையக் கப்பலில்தான் வந்தது; இப்பொழுது இங்கே கால் மணி நேரத்துக்கு முன் கிடைத்தது. கறுக்கவே கறுக்காது. புது மோஸ்தர். அடுத்த கப்பல் வர, இரண்டு மூன்று வருஷங்கள் ஆகும்' என்பான். இதற்குக் காரணம் மட்டும் சொல்லமாட்டான். ஸாது முகத்தோடு, இவ்வளவு உறுதியாயும் அபிமானத்துட னும் அவன் சொல்லும்பொழுது, அவனுடைய பேச்சைத் தட்ட யாரால் முடியும்?

இமிடேஷன் வைரம். 'பணச் சுணக்க நாளிலே, நிஜ வைரம் எதற்காக?' என்று குடித்தனக்காரர்களுக்குப் பரிந்து பேசுவது போலப் பேசுவான். 'இமிடேஷன் என்றால் கேவலமா? நல்ல சரக்கு. நன்றாய்ப் பாருங்கள். நிஜ வைரத் தை நெருப்பிலே போட்டால் கரியாகி விடுகிறது. இமி டேஷன் என்ன குறைந்து போகிறது? எண்ணெய் முறை யில், எண்ணெய் படியாமல், கழட்டி வைத்தால், இரண்டு

தலைமுறை இருக்குமே!' என்பான். வைரம் கரியாவது போல, வந்தவர்களின் காசையும் எப்படியோ கரியாக்கி விடுவான் கிருஷ்ணன்.

அபத்தப் பத்திரிகையா? 'நீங்கள் இந்தப் பத்திரிகையைப் பார்த்ததில்லையே! இந்தப் பத்திரிகையில் எழுதுபவர்கள், நிஜ தங்கப் பேனாவால் எழுதுகிறார்கள். தங்கம் எழுதினது தங்கம்தானே? தங்கத்தை வாங்க யோசிக்கிறதுண்டா? இந்த எழுத்து, மோட்டாரிலே போய்க்கொண்டிருக்கிற பொழுது, ஆவேசமாய்த் தோன்றிய எழுத்து. இந்தப் பத்திரிகையின் சொந்தக்காரர் பங்களா வாசி. துருக்கி ராஜா, இந்தப் பத்திரிகையின் தமிழைப் புகழ்ந்து எழுதியிருக்கிறார்' என்பான். தங்கப் பேனா, மோட்டார் யோசனை, பங்களா வாசம், (தமிழ் தெரியாத, ராஜாவே யில்லாத) துருக்கி ராஜா வாழ்த்து — இவைகளை மனத்தில் ஒரே காலத்தில் பொருத்திப் பார்ப்பவர்கள் பத்திரிகையை வாங்காமல் இருப்பார்களா? கிருஷ்ணன் சாமர்த்தியம் அதுதான்.

கை நிறையக் கமிஷன் கிடைக்கும் சாமானை, கிருஷ்ணன் எப்படியாவது விற்றுவிடுவான். மற்றவைகளில் அவன் கவனம் செல்லாது. வீண் காலமும் போக்கமாட்டான். ஒருவனுக்கு இரண்டு பேராய் வந்துவிட்டால், பத்திரிகை ஆசிரியர்கள் முகத்தைச் சுளுக்கிக்கொள்ளுகிறார்களே, அந்தக் கெட்ட வழக்கம் கிருஷ்ணனிடம் கிடையாது. கூட்டம் அதிகமாக அதிகமாகக் கிருஷ்ணனுக்குக் கொண்டாட்டம். வந்தவர்களின் திண்டாட்டத்தைப் பற்றி அவனுக்குக் கவலையில்லை. எப்பொழுதும் சிரிக்கிற முகம். ஒரு பொழுதும் ஏமாறாத பாவனை!

## டாக்டர் திருமலை

இங்கிலீஷ் வார்த்தைகளைத் தமிழ் வார்த்தைகளைப் போலத் தமிழில் எழுதினால், எனக்கு வருத்தமாயிருக்கிறது. முடியாத நிலைமையில் டாக்டர் என்றுதான் எழுதவேண்டியிருக்கிறது. நாட்டு வைத்தியத்தை மட்டமாக நினைப்பதால் — ஜனங்கள் நினைக்கிறார்கள், நான் நினைக்கவில்லை — வெள்ளைக்கார வைத்திய முறையில் பழகினவர்களை 'டாக்டர்' என்று அழைத்து மரியாதை செய்கிறார்கள்.

கைமீறிப் போன சங்கதிக்குக் கவலைப்படுவதில் பிரயோஜனமில்லை என்பது உண்மையான தத்துவம். எனவே, டாக்டர் என்று தமிழில் எழுதுவதால் ரொம்ப நஷ்டம் ஏற்பட்டு விடாதல்லவா? மேலும், திருமலை வெள்ளைக்கார வைத்திய முறையில் பழகியவர். அவரை வெறும் வைத்தியர் என்று அழைத்தால், கோபம் வந்தாலும் வந்துவிடும். வைத்தியர்களுக்குக் கோபம் வந்தால், நோயாளிகளுக்குத் தான் ஆபத்து.

திருடன் பெண்சாதி என்றைக்கிருந்தாலும் கைம் பெண்சாதி என்று சொல்லிக்கொள்வதைப் போல், நாம் எல்லோரும் ஒவ்வொரு சமயத்தில் நோயின் கொடுமைக்கு

ஆளாகத்தான் வேண்டும். டாக்டரின் கோபத்திற்கு நாம் பாத்திரமானால், 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி' என்பது அடியோடு மாறிப் போய், 'உடன் பிறந்தே கொல்லும் வைத்தியன்' என்ற பழமொழி அமுலுக்கு வந்தாலும் வந்துவிடும்.

கதையை வளர்ப்பானேன்? யாரையும், அவர்கள் ஆசைப்படும் மரியாதையோடு பேசினால், நஷ்டம் வந்து விடாது. அதற்காகப் பொய்யாகப் புகழவேண்டுமென்பதில்லை. வைத்தியரை டாக்டர் என்று சொன்னால் மரியாதைக்கு மரியாதை. இன்னும் பல லாபங்கள் உண்டு. நீங்கள் குறிப்பால் உணர்ந்துகொள்வீர்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

சொல்லவேண்டியவைகளை, மறதியாலோ, வேறு எந்தக் காரணத்தாலோ சொல்லாமல் விட்டுவிடப்படாது என்ற நல்ல எண்ணத்துடன், வாய்ப்பாடு வரிசை தவறாமல் உரக்கச் சொல்லுவது போல, சில மேடைப் பிரசங்கிகள், 'ஆதி காலத்திலே, பூமி தோன்றிய சமயத்திலே' என்று பிரசங்கத்தைத் துவக்கினால், உங்களுக்கு என்னமாயிருக்கும்? கூட்டத்துக்கு ஒருவன் குறைவு என்று ஒவ்வொருவரும் எண்ணிக்கொண்டு, வீடு போய்ச் சேர்ந்துவிடுவார்கள். டாக்டர் திருமலையின் கதையை அவ்வாறு நான் ஆரம்பிக்கப் போவதில்லை.

சிறிய கதைக்கு, இவ்வளவு பெரிய முகவுரையும் தேவையா என்று எவரும் திகைத்துப் போகவேண்டாம். இரகசியம் ஒன்று சொல்லுகிறேன். சொல்லுகிறதற்கு விஷயம் அதிகமா யில்லையானால், சிலர் 'அல்டாப்பு' பேச்சி

லேயே காலம் கழித்துவிடுவார்கள். பொருத்தமில்லாததைப் பொருத்தமாகக் காண்பிக்க முயன்று, காலத்தைப் போக்குவது ஒரு விசித்திர வேலை. எழுத்தாளர்களிலே பலர் இந்த வேலையில் நிபுணர்களா யிருக்கையில் 'நான் மட்டும் சகோதரத் துரோகம் செய்யலாமா? எனக்குத் தெரிந்த சரடை விட்டு, நானும் அந்தக் கோஷ்டியில் சேர்ந்தால்தான் எனக்கு உய்வு உண்டு.

போனது போகட்டும். நான் இனிமேல் 'அல்டாப்பு' செய்யவில்லை. டாக்டர் திருமலை ரொம்ப நல்லவர். சிறந்த உழைப்பாளி. கொடுத்ததை வாங்கிக்கொள்ளுவார். கொடுக்காததைப்பற்றி முணுமுணுக்க மாட்டார். இப்பேர்ப்பட்ட வைத்தியரிடம் நாம் எல்லோருமே வைத்தியம் செய்து கொள்ளலாம் என்று நீங்கள் எண்ணுவது இயற்கைதான். பஞ்சக் காலத்தில் இலவச வைத்தியம் செய்பவன் உயர்ந்தவன்தான். என்றாலும், டாக்டர் திருமலையின் விலாசத்தை மட்டும் நான் வெளியிடமாட்டேன்.

திருமலை சிறு பிள்ளையாகப் படிக்கிற காலத்தில் அவருடைய வீட்டிலே அவருடைய பெற்றோர்களுக்குள் அபிப்பிராய பேதம். திருமலை வக்கீலுக்குப் படிக்கவேண்டும் என்றாள் தாயார். 'கூடவே கூடாது. வைத்தியத்துக்குத்தான் படிக்கவேண்டும்' என்றார் தகப்பனார். 'ஆடு கோழி அறுக்கிறது மாதிரி இருக்கிற வைத்தியமா?' என்று தாய் ஆத்திரத்தோடு சொன்னாள். 'பொய்யும் புளுகும் சொல்லி, நரகத்துக்குப் போகிற வக்கிலா?' என்றார் தகப்பனார். 'வக்கீலாய்ப் போனால்தான் நாலு காசு வரும்' என்பது தாயின் கட்சி. 'வைத்தியனுக்கு ஒருநாளும் கிராக்கி குறையாது' என்று அடித்துப் பேசிவிட்டார் தகப்பனார்.

ஸெஷன்ஸ் கோர்ட்டிலே, நீதிபதி சொல்லுவதுதான் தீர்ப்பு. ஜூரிகள் அபிப்பிராயம் கொடுத்தாலும், அதை நம்ம நாட்டிலே நீதிபதிகள் பெரும்பாலும் ஏற்றுக்கொள்வதில்லை. இது நம்ம நாட்டு வழக்கத்துக்கு ஏற்றது போலும்! தாயின் பேச்சு பலிக்கவில்லை. பெட்டிச் சாவி யாரிடம் இருக்கிறதோ அவர்களின் பேச்சுக்குத்தானே செலாவணியுண்டு? எனவே திருமலை வைத்தியத்துக்குப் படிக்க நேர்ந்தது.

ஐ. ஸி. எஸ். பரீட்சையில் தேறினால் தேறினவர் எவ்விதப் பதவிக்கும் வேலைக்கும் தகுதி பெற்றவர் என்று பெருமையாகச் சொல்லப்படுவதுண்டு. அவர் ஜில்லா கலெக்டராகவும் இருக்கலாம். ஜில்லா ஜட்ஜாகவும் இருக்கலாம்; கவர்னராகவும் ஆகலாம். ஐ. ஸி. எஸ். பரீட்சைக்கு அவ்வளவு மதிப்பு. நம்ம நாட்டிலும் ஒருவகை விபரீதம் உண்டு. பையனுடைய தனித் தன்மையைப் பற்றிப் பெற்றோர்கள் கவலைப்படுவதில்லை. 'நாலு எழுத்து' இங்கிலீஷிலே தெரிந்தால், அவர்கள் எந்தப் பரீட்சைக்கும் போகலாம் என்று பாட்டி நீட்டி முழக்கிக்கொண்டு உத்தரவு போட்டுவிடுவாள்.

'வைத்தியம் படித்துத் தெரிந்துகொள்ளும் சங்கதியல்ல. அது பழகித் தெரியவேண்டிய தொழில்' என்பார் திருமலை. நாலைந்து வருஷம், இராப் பகல் படித்துப் பரீட்சையில் தேறிய பிறகு சொல்லப்பட்ட வார்த்தைகள். திருமலைக்குத் தொழிலே விளங்கவில்லை. வைத்தியப் புஸ்தகத்திலோ பல வியாதிகளுக்கு ஒரேவிதச் சின்னங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இருமல் தோன்றினால், அதைத் தொண்டைக் கட்டு முதல் க்ஷயரோகம் வரைக்கும் அடையாளமாகச்

சொல்லலாம். எந்த நோய் என்று கண்டு மருந்து கொடுப்பது? திருமலை திண்டாடுகிறார்.

முதன்முதலாக, வைத்தியம் செய்யும்பொழுது, திருமலை கஷ்டப்பட்டுப்போனார். 'சின்னப்பிள்ளை, அனுபவம் போதாது' என்று யாரும் அவரைத் துணிந்து கூப்பிடுவதில்லை. 'இது என்ன விநோத உலகம்! நாலு பேர் கூப்பிட்டால்தானே எனக்கு அனுபவம் வரும்! எனக்கே வைத்தியம் செய்துகொண்டு, அனுபவத்தை வளர்த்துக்கொள்வதா? இல்லை, என் தாய்க்கு வைத்தியம் செய்வதா?' என்று தமக்குள்ளாகவே சொல்லிக்கொண்டு மனம் எங்கினார்.

'ஏண்டாப்பா! ஐம்பகத்தின் பிள்ளை வைத்தியம் செய்கிறானாமே! அவன் எங்கே இருக்கிறான்?' என்று ஒரு பாட்டி திருமலையையே கேட்டாள். 'நான்தான், பாட்டி!' என்றார் திருமலை. 'நாலு நாளாய் மண்டையிடி சகிக்க முடியவில்லை. ஐம்பகம் (திருமலையின் தாய்) எனக்கு உறவு. உனக்கு அது எப்படித் தெரியும்? ஏதாவது மருந்து இருக்கோ அப்பா?' என்றாள். 'மண்டையிடி எதனாலே வந்தது என்று சோதித்துப் பார்த்து மருந்து தரணும் பாட்டி' என்றார் திருமலை. 'ஏதோ நெற்றியில் தேய்ப்பாளாமே, அந்த மருந்து இருந்தால், கொஞ்சம் கொடு. கடுகவ்வளவு கொடுத்தால் போதும்!' என்றாள் பாட்டி.

'தரும ஆஸ்பத்திரிக்குப் போங்கள்' என்று சொல்லுவதற்கு, திருமலைக்கு மனம் வரவில்லை. ஏதோ மருந்து கொடுத்தார். 'அப்பா! நீ தீர்க்காயுசாய் இருக்கணும்!' என்று வாழ்த்திவிட்டு வீட்டுக்குப் போய்விட்டாள். 'இப்பேர்ப்பட்ட கேஸ்தான் நமக்கு வரும்போலிருக்கிறது!'

என்று 'நாம்' போட்டு, தமக்குள்ளாகவே பேசிக்கொண்டார் திருமலை. ஆனால் பெரிய விளைவு சிறிய சம்பவத்திலிருந்து தோன்றும் என்பதை அவர் கண்டாரா?

பாட்டியின் ஊர்ப் பிரசங்கம், திருமலைக்கு இலவச விளம்பரமாகிவிட்டது. 'நம்ம ஊருக்கு ஒரு டாக்டன் வந்திருக்கிறான். (டாக்டர் என்றால் மரியாதையாகிவிடுமாம்! டாக்டன் என்று சொல்லவேண்டுமாம்) ரொம்ப நல்லவன். முகத்திலே நல்ல தேஜஸ். நம்ம ஜம்பாவின் பிள்ளையாம்' என்று பாட்டி சொல்லுவாள். 'நம்ம ஜம்பாவின் பிள்ளை' என்று முடித்து விட்ட பிறகு, வேறு என்ன வேண்டும்? திருமலைக்கு அவருடைய தாயின் மூலம் கீர்த்தி (!) ஆறு நூறாகப் பெருகி விட்டது.

எவ்வளவு உன்னத ஸ்தானம் பெற்றாலும், திருமலைக்கு ஊரில் எதிர்க் கட்சி உண்டு. 'நம்ம சங்கப் பெருமாள் நாட்டு வைத்தியம் மாதிரி, என்ன இருந்தாலும் வருமா? அவன் கையைப் பிடித்துப் பார்க்காமலே, வியாதி பறந்துபோகுமே! நாளுக்கொரு பஸ்பம் செய்கிறான். திருமலை மருந்து வெள்ளைக்காரத் தண்ணீர் மருந்துதானே!' என்று அட்டகாசம் செய்பவர்களும் உண்டு. ஆனால் அது மைனாரிடி கட்சி.

டாக்டருக்கு இப்பொழுது மோட்டார் கார், பங்களா, இன்னும் என்னவெல்லாமோ உண்டு. நர்ஸும் உண்டு. நர்ஸ் சம்பந்தமாக எந்த டாக்டர்தான் அவதூறிலிருந்து தப்பிக்க முடியும்? உலகத்தின் நாக்கு விஷங் கலந்த கொடிய நாக்கு. தொழிலுக்கு இயற்கையாக நேரக்கூடிய அவதூறு என்பார் டாக்டர் திருமலை. இப்படிச் சொல்லிப் பசப்புகிறார் டாக்டர் என்பார்கள் ஊர் விஷமிகள்.

## மணியகார ராஜா கவுண்டர்

‘கிராமங்களுக்குப் போங்கள்’ என்று தேசத் தலைவர்கள் தங்கள் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்கிறார்கள். கிராமத்துக்குப் போனால் கணக்குப் பிள்ளையும் மணியகாரரும்தான் கண்ணில் தென்படுகிறார்கள். நுழைந்து கொடுத்துக்கொண்டு எல்லாவற்றிற்கும் ஆதிகாரண பூதனாய் விளங்கும் கணக்குப் பிள்ளையினிடம் ஆர்ப்பாட்டத்தை அணுவளவும் காண முடியாது. உத்தியோக ஆர்ப்பாட்டத்தில், கணக்கருக்கு நேர் விரோதி மணியகாரர். பரம்பரைப் பெரிய தனக்காரர் என்று சர்க்கார் தஸ்தாவேஜிகள் அறியப் பெயர் வாங்கின மணியகாரருக்கு உத்தியோக டம்பத்தில் குறைவு இருக்க முடியுமா?

ஹிந்துக்கள் எல்லோருக்கும் கோத்திர பரம்பரையில் ஒருவித அவல ஆசையும் பிடிப்பும் உண்டு. மணியகாரர்களுக்கும் கோத்திர பரம்பரை உண்டு எனலாம். அரிச்சந்திர நாடகத்தில், நட்சத்தரகனை எல்லோரும் பார்த்திருப்பார்கள். அரிச்சந்திரனிடம், ‘கொட்டு ரொக்கம்’ என்று நட்சத்தரகன் கிட்டி கட்டிக் கேட்கும்பொழுது, நாம் அனைவரும் கண்ணீர் விடுவதற்குப் பதிலாக, கலகலவென்று குழந்தைப் பருவத்

தில் சிரித்திருக்கிறோமே, அதை நினைவுக்குக் கொண்டு வந்தால், மணியகாரரின் பரம்பரையைப்பற்றி நமக்குச் சந்தேகமே வராது.

துரும்பைக் கிள்ளி மாப்பிள்ளை என்று போட்டால், அது முறைக்கும் என்று வயது சென்றவர்கள் சொல்லுவார்கள். அது அவர்களின் நீண்ட கால அநுபவமாய்த்தான் இருக்க வேண்டும். மணியகாரர் வேலைக்கு மனுப் பண்ணிக் கொண்டாலே போதும், ஒருவன் நேராகவே பார்க்க மாட்டான். கண்களில் எவ்வளவு வக்கிரம் (கோணல்) செய்து கொள்ள முடியுமோ, அவ்வளவு அவஸ்தைகளையும் மணியகாரரின் முகத்திலே, ஆகியோடந்தமாய்ப் பார்த்துவிடலாம். கண் கோணலுக்குக் குரல் கோணல் தோழன். சங்கீத வித்வான்களுக்குக்கூட முடியாத குரல் விநோதத்தை, மணியகாரரிடம் காணலாம். நயம், பயம், அணைப்பு, ஆத்திரம் இவைகள் எல்லாவற்றையும் குரலிலே காட்டினாலொழிய, வேலை நடக்காதாம்! இது மணியகாரரின் தீர்ப்பு; இதற்குப் பிறகு, ஹைகோர்ட்டு அப்பீல் தீர்ப்புத்தான் உண்டாம்! எனவே, நடுவே நிற்கும் நம்மால் என்ன செய்ய முடியும்?

பெரிய தனக்காரர், அற்ப தனக்காரர் ஆனாலும், பரம்பரை மட்டும் விடாமல் அவர்களைக் கவ்விக்கொண்டு நிற்கும். ஆகையால் மணியகாரர் உத்தியோகம், வார்சு இல்லாமல் போனாலொழிய, ஒரே குடும்பத்திலே நிலையாக நின்று வரும். வேளாளர் குடும்பம், பிறப்பிலே பார்ப்பான் என்று சொல்லுவது போலவே, மணியகார குடும்பம் பிறப்பிலேயே மணியகாரன் என்று சொல்லுவதற்கு இடமுண்டு. இதைக் கிராமத்திலே பெருமையாகவும் பேசிக்கொள்ளுவார்கள். நாம்

ஆட்சேபித்தாலும் பலிக்காது. வீணாக, நாம் எவரும் முயற்சி செய்து பார்க்கவேண்டாம்.

'மணியகாரர் என்றால் லேசா, அவர் ஊருக்கு ராஜா' என்று கிராமத்து வெட்டி, தலையாரி சொல்லிக்கொள்ளு வதை, நீங்கள் கேட்டதில்லையா? 'ரூபாயிலே யார் தலையோ போட்டிருக்கிறது என்று நினைக்கிறீர்களோ? நிஜந்தான். அவர் லோகத்துக்கு ராஜா. நம்ம மணியகார கவுண்டர் ராஜ லட்சணத்திலே ஒண்ணு, ரெண்டு குறைஞ்சு போச்சு. இல்லாவிட்டால், நம்ம கவுண்டர், பூலோகத்துக்கு ராஜா வாய் இருக்கமாட்டாரா?' என்று தலையாரி சுதேசி சர்க்கார்ச் சரக்கால் தலையில் கிர்ஏறி பிரசங்கம் செய்வதை நீங்கள் கேட்டதில்லையா? இது கிராம வினோதங்களில் ஒன்று. இதை அனுபவிப்பதற்கு ஆத்திரம் கூடாது. கொஞ்சம் பொறுமையும் அனுதாப நகைப்பும் வேண்டும்.

உள்ளபடியே, ராஜா கவுண்டர், கொஞ்சம் கம்பீரத் தோற்றமுள்ளவர். பரம்பரையாலும் பழக்கத்தாலும் நம்ம வர் நடந்துகொள்ளுகிற வகையாலும் சாதாரண வெள்ளைக் காரனுக்குக்கூட அதிகார தோரணைப் பேச்சுத்தானே எடுத் ததும் வருகின்றது. அதிகாரத்திலே ஊறிப் போனவர் களை, தணிந்து பேச நாம் கண்டிருக்கிறோமா? அது அவர் கள் வழக்கம் என்று 'மாப்பு'ப் பண்ணத்தான் நமக்குத் தோன்றுகிறது. மௌனமாய்க் கேட்டுக்கொண்டிருப்பது நமது வழக்கம் போலும்! அதிகார தோரணையில் பழகின குடும்பத்து நபர்களுக்கு கம்பீரம் ஒருவகை இயற்கைப் பழக்கம். தாசில்தார் வீட்டுப் பல் முளைக்காத குழந்தைக் கும் 'அடே' என்று எளிதிலே வருவதை நீங்கள் பார்க்கா மல் இருந்திருக்க முடியுமா?

# மணியகார ராஜா கவுண்டர்

ராஜா கவுண்டரை, சிறு பிராயத்திலே நீங்கள் பார்த்திருக்க வேண்டும். படிப்புக்கும் தமக்கும் சம்பந்தமில்லை என்று எல்லை கோலித் தீர்த்துக்கொண்டார் மனத்தில். ஆனால் பள்ளிக்கூடம் போவதை நிறுத்தவுமில்லை. அவர் பள்ளிக்கூடம் சென்றது, மணியகாரர் வீட்டுப் பிள்ளை என்ற முறையில், பள்ளிக்கூடத்தைக் கௌரவிக்கும் பொருட்டே. பள்ளிக்கூடம் துவக்குகிற மணி, மூடுகிற நேரம், இடைவேளை ஓய்வுநேரம் முதலிய சில்லறை விஷயங்களில் ராஜா கவுண்டர் சிறிதும் சிந்தனை செலுத்தியதேயில்லை. தாம் இஷ்டப்பட்ட நேரத்தில் போய், தமக்குப் பிரியமான இடத்தில் உட்கார்ந்து, வகுப்பைச் சிறிது காலம் வரையில் அலங்கரிப்பார். உபாத்தியாயர் சொல்லுவதை ரஸித்து மனத்தில் வாங்கிக்கொள்ளுவதைப் போல, முகத்திலே பாவனை செய்துகொள்ளுவார். இப்படிச் செய்வது பெரிய மனிதர்களின் ஜாடையல்லவா? ஆனால் அவரது மனம் முழுதும் அவிழ்த்துப் போட்டிருக்கும் 'ரேக்ளா' குதிரைவண்டியிலே. குதிரைவண்டி சவாரியை உத்தேசித்தே தினந்தோறும் அவர் பள்ளிக்கூடம் போய்வந்தார் என்று நாம் உரக்கச் சொன்னால், ஊரார் சண்டைக்கு வந்தாலும் வரலாம். பெரிய இடத்துப் பொல்லாப்பு நமக்கு எதற்காக?

ராஜா கவுண்டருக்கு வண்டி சவாரியில் ரொம்ப ஊக்கம். வழியிலே போகிற வண்டிகளோடு பந்தயம்விடாமற்போனால், அவருக்குப் பொழுது போகாது. வெறும் பந்தயம் மட்டுமா? வண்டியிலே தம் வண்டியை மோதுகிறது; ஏழை வண்டிக்காரர்களை வம்புக்கு இழுக்கிறது; அவர்கள் அதிகமாகப் பேசாமல் தணிந்துபோனாலும், கைநீட்டிப் பிரயோகம் செய்

கிறது; போதாக் குறைக்கு, பெரிய மனிதன் என்ற ஹோதா விலே, போலீஸிலும் போய், குறிப்பிட்ட வண்டிக்காரன் ஒருவன் பேரில் வீண் பழி சுமத்தித் தூறு சொல்லுகிறது; வழியிலே போகிற ஏழைப் பெண்களை வெறிக்க வெறிக்கப் பார்த்து, சீட்டி அடிக்கிறது — இவைகள்தான் பள்ளிக்கூடத் துக்குப் போவதன் பிரயோஜனங்களாக முடிந்தன. ஒன்று மட்டும் அவர் கற்றுக்கொண்டார். யாருக்கும் விளங்காத படிக்கு, இங்கிலீஷ் கையெழுத்துப் போட. 'எஸ்', 'நோ', 'தாங்க்ஸ்' முதலிய இங்கிலீஷ் சொற்களும் அவருக்குத் தலைகீழாயும் சமயோசிதமாயும் வரும்.

அவரது பள்ளிக்கூடம் இருக்கும் ஊரிலே வரும் நாடகக் கம்பெனிகளுக்குச் சம்பளமில்லாத ஏஜண்டாக விளங்கு வார். கிளாஸ்கோ மல்வேஷ்டி, ஸில்க் சட்டை, விசிறி மடிப்பு மடித்த துயிலி அங்கவஸ்திரம், ரிஸ்ட்வாட்ச (கைக்கடியாரம்), வலது கையிலே வீரசங்கிலி, ஜிலுஜிலுவென்று டால் அடிக்கும் கடுக்கன்கள், அழகான அமெரிக்கன் கிராப், வாசனைப் புகையிலைப் பொட்டணம், வாசனை வீசும் கைக்குட்டை, சிறிய குதிரைச் சவுக்கு ஒன்று, பார்வைக்குத் தேவை யில்லாத பளபளப்பான மூக்குக் கண்ணாடி, — இவை கள் சகிதமாக நாடகக் கொட்டகையில் இவர் நுழைந் தால், இவர் தேடின சொத்தா பாழாய்ப் போகிறது? முன் னோர்கள் அடித்துப் பிடித்துக் கட்டிக்கொண்ட சொத்து எந்த வழியில் ஓட்டம் எடுத்தால் என்ன? அதைப்பற்றி ராஜா கவுண்டருக்கு இளம பிராயத்தில் என்ன கவலை?

இந்த அவசரத்தில் ராஜா கவுண்டரின் தகப்பனார் இறந்து போனார். அவர் இறப்பதற்கு முன்னமே, ராஜா கவுண்டருக்கு விதிப்படி ஒரு கலியாணமும், விதிக்கு மீறிய

காந்தர்வ விவாகங்கள் பலவும் நிகழ்ந்துவிட்டன. 'பணம் பாதாளம் வரையில் பாயாதா?' என்று சொல்லிவிட்டு, 'அதற்கென்ன சந்தேகம்?' என்று பிராஸம் போட்டுப் பேசுவார் ராஜா மணியகாரர். கற்பு என்பது காகிதப் பிசாசு என்றும் அவர் சொல்லுவதுண்டு. அவருடைய அபிப்பிராயத்துக்கு நான் பொறுப்பை ஏற்றுக்கொள்ள முடியாது. படித்தால் தானே அவரைக் காகிதப் பிசாசு வெருட்ட முடியும்? அதற்காகக் குதிரை வண்டி மூலமாய்த் தற்காப்புத் தேடிக்கொண்ட புத்திசாலி யல்லவா மணியகாரர்?

மணியம் உத்தியோகம் வந்ததும் ரேக்ளா குதிரை வண்டி, வில் வண்டியாக மாறிற்று. அதை மாற்றிவிட்டு, புது மாதிரி மோட்டார் வண்டிக்குப் போகலாமே என்று எண்ணிக்கொண்டிருந்தார். ஆனால் பலர் அவரை அசட்டுச் சிரிப்புடன், கும்பிடு போட்டு, பேட்டி காண வந்தார்கள். அவர்கள்தான் பெரிய இடத்தில் கடன் கொடுத்துவிட்டு, கை கட்டிக்கொண்டு கொடுத்த கடனைக் கேட்கும் லேவா தேவிக்காரர்கள். 'அவசரம் ஒன்றுமில்லை. சும்மா, கண்டு போகலாம் என்று வந்தேன்' என்று சொல்லிவிட்டு, அவர்கள் முதன் முதலாக விடைபெற்றுச் சென்றார்கள். அப்பொழுது தான் மணியகாரருக்கு விஷயம் புலனாயிற்று.

வண்டி சவாரியிலும் காந்தர்வ மணங்களிலும் பழகிய ராஜாவுக்கு, பொறுத்து வேலை பார்க்கத் தெரியுமா, வேலை பார்க்க முடியுமா? மணிய வேலைப் பொறுப்பும் சம்பளப் பொறுப்பும் கணக்குப் பிள்ளையுடையதுதான். இந்தத் துர்ப்பாக்கியத்தைக் கண்டு பயப்படுகிறவரா கணக்குப் பிள்ளை? இந்த மாதிரி மணியகாரர்தானே அவருக்குத் தேவை! கணக்கர் நீட்டின கடுதாசியில், குறிப்பிட்ட இடத்

தில் மணியகாரர், கூசாமல், அஞ்சாமல், சளைக்காமல் கையெழுத்துப் போடுவார். 'ஒன்றும் வராதே' என்று ஒரு சமயம் வாய் தவறி மணியகாரர் சொல்லிவிட்டாலும், அதை மனத்தில் கொண்டு, கணக்கர் நோகமாட்டார். மணியகாரரிடத்தில் அவ்வளவு வாஞ்சை என்கிறேன். அவர் சம்பளத்தில் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். நமக்குள் தகராறும் பஞ்சாயத்தும் வேண்டாம்.

சர்க்காருக்குத் தாம் ஸ்வீகாரப் பிள்ளை என்பது ராஜா கவுண்டரின் தீர்மானமான அபிப்பிராயம். தம்முடைய சொத்துப் போனாலும் அவருக்குப் பாதகமாகத் தோன்றாது. சர்க்கார் கிஸ்தி மட்டும் ஒழுங்காக, பாக்கியில்லாமல் கஜானாவுக்குப் போய்ச் சேர்ந்துவிடவேண்டும். திக்கற்ற மிராசுதார்களிடம் அவர் பிரயோகம் செய்யும் வசைமொழிகளைக் கேட்டவர்களுக்குத்தான் அவைகளின் ஸ்வாரஸ்யம் நன்றாகத் தெரியும். நான் அணியணியாக எடுத்துச் சொன்னாலும், அது அவ்வளவு ரஸமாயும் ரம்யமாயும் இருக்காது. நேரே அனுபவிக்க நோக்கமிருப்பின், ராஜா கவுண்டர் வட்டத்தில் ஒரு ஏகர் நிலம் வாங்கி நீங்கள் கிஸ்தி செலுத்த முடியவில்லை என்று சொல்லிப் பாருங்கள். பூரா ஆனந்தத்தையும் அப்பொழுது உங்களால் அனுபவிக்க முடியும்.

இருபது ரூபாய் சம்பளத்துக்குக் குறைந்த சர்க்கார் சிப்பந்திகள் யாவரும் ராஜா கவுண்டரை 'எஜமான்' என்று வாய் நிறைய அழைப்பார்கள். வாழ்த்தின வாயும் தூக்கின கைகளும் ஒருநாளும் சும்மா போனதில்லை. ராஜா கவுண்டருக்குக் காது கேட்கப்படாதது போல, 'இருந்தாலும், கவுண்டர் எஜமானைப் போல எல்லோரும் இருக்க முடியுமா?'

என்று சிப்பந்திகள் ஜாடைப் பேச்சுப் பேசிக்கொண்டு செல்வார்கள். தஸ்ராவுக்கும் திருவிழாவுக்கும் பேட்டி காணவந்த கான்ஸ்டேபிள் பாடு கொண்டாட்டம்தான். போலீஸ் ஸ்டேஷன் வரையில், வண்டி சவாரியும் அவனுக்குக் கிடைக்கும் என்றால், மாமூலைப்பற்றிப் பேசவும் வேண்டுமா?

பொய் கௌரவத்திற்காக, ராஜா கவுண்டருக்கு, ஓயாத செலவு. துரியோதனன் கையா தன ரேகை இருப்பதற்கு? அட்சய பாத்திரமா? பால்ய லீலைகளும் மணியம் உத்தியோகமும் சேர்ந்து ராஜாவின் உடலையும் சொத்தையும் பாழ்படுத்திவிட்டன. அவர் இப்பொழுது சதா இருமிக் கொண்டே யிருக்கிறார். கடன்காரர்களுக்கு என்ன வழி செய்கிறது என்று தெரியவில்லை. நின்று சேவித்தவர்கள் எல்லோரும், அவர் முன்னால் சிறிது சிறிதாக உட்கார ஆரம்பித்திருக்கிறார்கள். மணியம் உத்தியோகம் விட்டால் போதும் என்ற நிலைக்கு அவர் வந்துவிட்டார். ஆனால் அவர் அந்த வேலையை விட்டால், அதற்கு நூறு மனுக்கள் தயாராய்க் காத்துக்கொண்டிருக்கின்றன.

# மைனர் துரைக்கண்ணு

மேஜர் ஆகாதவன் மைனர் என்பது சட்டம். ஆனால் சட்டத்தைத் தழுவியா வாழ்வுக்கும் வார்த்தைக்கும் அர்த்தம் ஏற்படுகிறது? ஒருகாலத்து ஜன சமூகத்தின் அபிவிருத்தி நிலைமைக்கு, சட்டம் என்பது ஒரு 'ஹத்து'. ஆனால் வாழ்க்கை மாற மாற, இந்த ஹத்தும் (வரம்பும்) மாறிக் கொண்டே வரும். வார்த்தையும் இந்த விதியை ஒட்டித் தான், அர்த்தத்தில் வளர்ச்சி பெறுகின்றது, மாறுதல் அடைகின்றது.

புதிய பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப, மைனர் என்ற சொல்லுக்கும் விபரீதமான விசித்திரமான அர்த்தம் ஏற்பட்டிருக்கிறது. தலை கால் தெரியாமல், வரவு செலவுக் கணக்கு விபரமில்லாமல், செலவழிப்பவனை 'மைனர்' என்று இப்பொழுது சொல்லுகிறார்கள். மைனர் என்பது ஒருவகை ஜாதியாகவும் தொழிலாகவும் இக்காலத்தில் ஆகிவிட்டதாகத் தோன்றுகிறது.

முட்டாள் என்று நம்மைத் திட்டினால் நமக்குக் கோபம் வருகிறது. (கோபம்கூட வராத பரம சாதுக்கள் இருக்கலாம்.)

# மைனர் துரைக்கண்ணு

மைனர் என்று நம்மைப் பார்த்து எவரேனும் சொன்னால் போதும். உடல் பூரித்துப் போகும்படியாய்ச் சந்தோஷம் அடைகிறோம். ஆனால் மைனர் என்றால் மடையன் என்று தான் முடிவில் அர்த்தம். வார்த்தைக்கு வார்த்தை வித்தியாசம். முகத்துக்கு முகம் கண்ணாடி.

மைனர் கனிந்த பலாப்பழத்தைப் போல். சுளையைத் தின்று ருசிபார்த்துவிட்டு, கொட்டையையும் சக்கையையும், தின்ற இடத்திலேயே போட்டுவிடுவது போல், கெட்ட உலகம், மைனர்களைத் தன் இஷ்டப்படி உபயோகித்துக்கொண்டு, உபயோகமில்லாத காலத்தில், அவர்களை எலும்பும் தோலுமாக அடித்து, எட்டத்தில் உதறித் தள்ளிவிடுகிறது.

மைனர் துரைக்கண்ணு, மைனர் இனத்தைச் சேர்ந்தவன்; சேர்ந்தவர் என்று மரியாதையாகச் சொல்லவேண்டுமோ, என்னவோ ! லட்சுமிகடாட்சம் உள்ள பேர்களைக் கும்பிடவேண்டும் என்று வைதீகர்கள் சொல்லுகிறார்கள் என்பது உங்களுக்கு நான் சொல்லித் தெரியவேண்டிய சங்கதியா ? அசட்டு வைதிக ராஜ்யக் குடையின் கீழ் வாழச் சம்மதிப்பவர்கள் அவ்வாறு செய்யட்டும். நமக்கு அதைப்பற்றிக் கவலை என்ன ?

ஒருவனைப்பற்றிப் பேச ஆரம்பித்தால், அவன் நல்ல குடும்பத்தில் பிறந்தவன் என்று சொல்லுவது ஒரு மரியாதை. எந்தக் குடும்பமும் ஏதாவது ஒரு சமயத்தில் நல்ல நிலைமையில்தான் இருந்திருக்க வேண்டும். மேலும் நல்ல குடும்பம் என்று சொல்லுவதற்கு, விளங்கக்கூடிய பொருளே இல்லை. எது கெட்ட குடும்பம் ? சர்க்கார்தான் குற்றம் செய்யும் வகுப்பார்கள் என்று சில வகுப்புக்களையே பிரித்து ஒதுக்கிவைத்திருக்கிறார்கள். சர்க்காரின் சாமர்த்தியம் நமக்கு வருமா ?

துரைக்கண்ணு பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவன். அவன் உண்மையான மைனராயிருக்கிற காலத்திலேயே, அவனுடைய தகப்பனார் பரகதியடைந்துவிட்டார். சொத்துரிமையில்லாத அவன் தாயார் அவனுக்கு கார்டியனும் போஷகியுமானாள். பெண்கள், மனைவிமார்கள் என்ற முறையில், தங்கள் கணவனைச் சூட்சுமமாக ஆட்டி வைக்கலாம். ஆனால், தாய்களின் நிலையில், பிள்ளைகளை அடக்கியாள முடியாது. பாசம் காரணம் என்பீர்கள். காரணத்துக்கா குறைவு?

கல்வியில்லாத 'மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்; இடுகாட்டில், காக்கை உகக்கும் பிணம்' என்பது உண்மை. படிப்பைக் கேவலமாக மதித்த துரைக்கண்ணு, தனக்குக் கீழ் நிலையிலுள்ளவர்களைச் 'சினேகிதம் பிடித்துக்கொள்ளுவதில்' ஆச்சரியமேயில்லை. 'என்ன?' என்றால் 'ஆமாம்' என்று பதிலளிக்கும் ஆட்கள்தானே துரைக்கண்ணுவுக்குத் தேவை? பணம் படைத்த சீமான் அல்லவா அவன்? உலகத்தில் எந்தப் பொருளைப் பணத்தால் வாங்க முடியாது? இது துரைக்கண்ணுவின் தத்துவம். என்னுடையதல்ல.

'சேர்மானம் சேர்ந்தால் வழியாகச் சேரவேண்டும்' என்று கிராமங்களிலே சொல்லிக்கொள்ளுவார்கள். துரைக்கண்ணு வழியாகச் சேர்மானம் சேர்த்துக்கொண்டான். பாழூருக்கு நரி ராஜா; நெறியிழந்த, திக்கற்ற கபோதிகளுக்குத் துரைக்கண்ணு முடிசூடாத மன்னன். அவன் பார்வை கருணை கடாட்சம். அவன் குறிப்பு அதிகாரம். அவன் வார்த்தைகள் சட்டங்கள். அவனுடைய விகடம் வேதசூத்திரம். அவன் தன்னை மறந்து இறுமாந்து போவதற்கு ஆட்சேபம் இருக்கிறதா? இருந்தால் சொல்லுங்கள்.

## மைனர் துரைக்கண்ணு

மைனர் துரைக்கண்ணுவுக்கு இரண்டு மூன்று வேலைகள் எளிதிலே தெரியும். நீட்டின கடன் பத்திரங்களில், கூசாமல் கையெழுத்துப் போடுவான். தான் வாங்குவது கடன் என்ற எண்ணமே அவனுக்குக் கிடையாது. பாங்கு செக்கில் கையெழுத்துப் போடுவதாக அவனுடைய மயக்கம். வீட்டு வாயிலுக்கு வாரண்டுச் சேவகன் வரும்போதுதானே இந்தப் பித்தம் தெளியப் போகிறது? அதற்கு முன், அந்த மயக்கத்துக்கு மருந்து கிடையாது. 'இப்பொழுது நடப்பதோ சுக்கிரீவனுக்கினை! நாளைப் பொழுதை யார் கண்டது? இன்றைக்குச் செத்தால் நாளை இரண்டாம் நாள்' என்று நண்பர்கள் துரைக்கண்ணுவிடம் சொன்னுல், அது அவனுக்கு ஏற்குமா? தவறு என்று நீங்கள் சொன்னுல், அது ஏற்குமா?

லோகத்திலே நிகழும் எந்த மகத்தான சம்பவத்தையும் அலட்சியக் கண்ணோடு பார்ப்பதற்கு, அவன் எங்கு பழகிக் கொண்டானே தெரியாது. ஒன்றும் பிரமாதமான காரியமாக, அவன் கண்ணில் பட்டதே யில்லை. 'முனைந்தால் எதையும் செய்துவிடலாம்' என்று வாய்ச் சக்கர வட்டமாகப் பேசித் தீர்த்துவிடுவான். முனைந்து செய்வதுதான் அவனுல் முடியாத காரியம். இதைச் சொன்னுலும் அவன் ஏளனச் சிரிப்புச் சிரித்து, புகையிலை கலந்த வெற்றிலை பாக்குத் தம்பலத்தை, தன் உடையில் வழியவிட்டுக் கொண்டாலும் விடுவான்.

பெண்களைப்பற்றி அவன் என்ன நினைக்கிறுன் என்பதைச் சொல்லவேண்டுமா? பெண் உலகம்தானே மைனர் விளையாட்டுக்கு 'லீலைக் களம்'. ஈசனைப்பற்றிப் 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று ஒரு பக்தர் பாடியிருக்

கிறார். பெண்களைப்பற்றி நினைக்காத நிமிஷம் துரைக்கண்ணு வுக்குப் பிறவாத நிமிஷமாகத் தோன்றுவது அவனுடைய மைனர் பதவியின் அழகுக்கு அழகு செய்வதாகும்.

கண்ணால் பார்த்து, கையால் பணத்தைச் செலவழிக் காத தோஷத்தினால் துரைக்கண்ணுவுக்குச் செலவு சங்கதி மிக எளிதான காரியம். எல்லாம் பற்றுவரவுக் கணக்கு. எல் லாம் பிராமிசரி நோட்டு; அல்லது கைமாற்றுக் கடன். பக் கத்திலிருப்பவர்கள் எல்லோரும் கைகட்டிச் சேவகம். இந்த நிலைமையில் அவனுக்குப் பொறுப்பு இருக்கும் அல்லது வளரும் என்று நீங்கள் துணிந்து சொல்ல முடியுமா ?

மைனர் துரைக்கண்ணு பரிதாப நிலைக்கு வரும்பொழுது அவனைப் பார்ப்பதற்கு நமது கண்கள் கூசும். 'அறியாப் பாபம் தானாகப் போகும்' என்று உபசாந்தி சமாதானம் சொல்லுவார்கள். ஆனால் அறியாமையால் குற்றம் செய்தால், குற்றம் செய்தவனைச் சட்டம் மன்னித்து இரக்கப்பட்டு விடுவதில்லை. கர்மபலன் ஒரு கொடிய சட்டமாகும். கர்ம பலனின் பயனாக, துரைக்கண்ணு நோய்வாய்ப்பட்டு, கையில் காசில்லாமல், கடன்காரர்கள் வீட்டு வாயிலில் பழி யாகக் காத்துக்கொண்டிருக்கும் காட்சி, யோகியால்கூடப் பொறுக்கத் தக்கதன்று.

துரைக்கண்ணுவைத் தனித்துக் கோபித்துப் பயன் என்ன ? நமது பொறுப்பில்லாத வாழ்க்கையின் கொழுந்து அவன். பொறுப்பைக் கஷ்டமாகவும், சோம்பலைச் சுகவாசி வாழ்வாகவும், கல்வியைத் துன்பமாகவும், சொந்த புத்தியை அகம்பாவம் என்றும், அடிமை வாழ்வைச் சொர்க்கமாகவும் எண்ணிக்கொண்டிருக்கிற சமூகத்தினிடையே, ஒரு மைனர் துரைக்கண்ணு மாத்திரமா ? எத்தனை ஆயிரம் ! புள்ளி விவரத்தை நேரே சொல்ல முடியாது.

சித்திரம் — 21

## சிங்காணி சின்னான்

'வண்ணார(க)ச் சின்னானை எங்களுக்கு நன்றாய்த் தெரியும். இந்த சிங்காணி சின்னான் என்ன பேர்வழி, ஐயா!' என்று கேட்கிறீர்களோ? அதைச் சொல்லத்தானே ஆரம்பித்திருக்கிறேன். குங்குமப் பொட்டணத்துக்கு ஒரு பிள்ளைப் பொட்டணமுண்டு. ஸர்க்கஸ் கம்பெனியில் ஒரு சித்திரக் குள்ளன் இருப்பான். 'ப்ரேஸ்' போடுகிற பந்தயக் கடையில், சேஷ்டை நிறைந்த சிறு பையன் இருப்பான். இவர்கள், மேற்சொன்ன இனங்களுக்கு அழகுடன் அமையும் அங்கங்கள்.

நம்ம சிங்காணி சின்னான், இந்த இனங்களையெல்லாம் சேர்ந்தவனல்லன். அவன் தனி உருப்படி. கம்பங்கட்டி வித்தையாடிகள், முனிப் பாய்ச்சல் பாய்கிற வீரர்கள், நினைத்த மாத்திரத்தில் சவரன்களை வரவழைக்கும் பொக்கிஷ மந்திரிகளை யொத்த கண்கட்டி வித்தைக்காரர்கள், மாஞ்செடி முளைக்க வைக்கிற கழைக்கூத்தாடி பிரம்மாக்கள், இந்தக் கூட்டங்களிலே ஒரு பையன் இருப்பான். அவனைப் பார்த்தவுடனே, அவன்தான் சிங்காணி சின்னான் என்று

உங்களுக்கு அடையாளம் தெரிந்துவிடும். நான் வந்து ஆளைக் காண்பிக்க வேண்டும் என்ற தேவை யிருக்காது.

'ஏ பொடியா! என்னப்பா தூங்குறே! பிள்ளையைப் பெத்த தாய்மாருங்களைக் கூப்பிடு; குழந்தையைக் கொஞ்சும் அப்பாசாமிகளைக் கூப்பிடு!' என்று ஒரு கோடியிலிருந்து, பெரிய கழைக் கூத்தாடி சொன்னால், 'நான் இல்லே பொடி மனுசன்! பிள்ளையே பெறாத கன்னிமார்களே! குழந்தையெ உதைத்துத் தள்ளும் புண்ணியவான்களே! வாங்கோ, வாங்கோ! ஸலாம் வருது, வாங்கோ!' என்று பொசுக்கென்று கத்திக்கொண்டு, ஓடி வருவானே, அவன்தான் சிங்காணி சின்னான்.

பெரிய ஹோட்டல்களில் ஒரு தூங்கு மூஞ்சிப் பையன் இருப்பான். அவன் தூங்குவானே ஒழிய, வாய் அசை போட்டுக்கொண்டே இருக்கும். ஏன்? மூச்சு விடாமல், திருட்டுத்தனமாக அவன் சாப்பிடுகிறதையெல்லாம், அப் பொழுதுதான் அவனுக்குக் கடிக்கச் சந்தர்ப்பமும் சாவகாச மும் அகப்பட்டதோ, என்னவோ? அதைப் போலவே, சிங்காணிச் சின்னான் வாயும் எப்பொழுதும் எதையாவது மென்றுகொண்டே யிருக்கும்.

'என்னப்பா தின்கிறாய்?' என்று கிழவன் கேட்பான்; 'லோபி கொடுத்த மண்ணாங்கட்டி' என்பான் சிங்காணி. அவன் சொல்லும்பொழுது, அவனுடைய வயிற்றெரிச்சல் கொடுமை முழுதும், அவன் முகத்திலும் குரலிலும் வந்து தாண்டவமாடுவது போல இருக்கும். அப்பொழுது நீங்கள் பார்க்கவேண்டும் சிங்காணி சின்னானை!

'அப்பா, அப்பா! ஏ, விளையாட்டுப் பிள்ளே! மத்தளம் அடிக்கத் தெரியுதா! சொன்ன பேச்சு கேட்கத் தெரியுதா!

இலையிலே உட்கார்ந்தால், குறுணிச் சோறு கேக்குது உன் வயிறு! நீயோ அங்கே உட்கார்ந்துகொண்டு, பல்லைப் பல்லைக் காட்டுறே! எனக்கு இந்தக் கம்பிலே, சுருக்குப் போடத் தெரியலே!' என்று பெரிய ஆள் சொல்லிக் கொண்டே போகையிலே, 'சுருக்கை கழுத்திலே போட்டுக்கோ! அது உனக்கு நல்லாத் தெரியும்!' என்று சிங்காணி சின்னன் கீச்சுக்குரலில் சொல்லும் பொழுது, தரித்திரத்துக்கும் தவிப்புக்கும் மாற்று, கழுத்துச் சுருக்குத்தானே என்று சந்தேகிக்கும்படி யிருக்கும்.

'அப்பா துரையே, வாடா சாமி', 'வரமாட்டேன்'; 'அங்கேயே இரு சாமி', 'இருக்கமாட்டேன்'; 'பேசுடா சாமி', 'பேசமாட்டேன்'; 'பின்னே, நீ என்னதான் செய்வே?', 'என் இஷ்டப்படி நான் என்ன வேண்டுமானாலும் செய்வேன்' — இது பெரிய ஆளுக்கும் சின்னனுக்கும் சம்பாஷணை. கேள்வியிலும் பதிலிலும் சின்னன் சளைத்தவனாகவே இருக்கமாட்டான். பெரிய ஆள் 'சோறு கிடையாது' என்பான். சின்னன் 'லோபி, வயிறு வெடித்துச் சாவான்' என்று விதண்டாவாதம் செய்வான்.

'துரையே! மாஞ்செடி முளைத்ததே! இது யார் போட்ட மந்திரம்?' என்று பெரிய கம்பர் கேட்பார். உடனே சின்னன், ஒரு நிமிஷம்கூடத் தாமதிக்காமல், 'நான் போட்ட மந்திரம், செடி முளைத்தது; நீ போட்டால் அது பட்டுப் போகும்' என்பான். கூட்டத்தின் குதூகலத்தைக் கேட்கக்கூட வேண்டுமா? கூட்டம் சிரித்தால், 'சிரிக்காதேயுங்கள்! நான் போட்ட மந்திரம் வீணாய்ப் போய்விடும். அடியே! பொம்மக்கா, மந்திரம் கெடாமே பார்த்துக்கோடி!' என்று

கிழவனைப் போல, கொரளிக் குரலில் பேசினால், இன்னொரு தரம் அவன் பேசமாட்டானா என்று இருக்காதா?

எல்லா வித்தையும் முடிந்து, கிழவன், அவன் மனைவி, இரண்டு பேரும் காசு, அரிசி தண்ட வரும்போது, ‘பிள்ளை குட்டிக்காரனுங்கோ! இந்த அம்மா கர்ப்பிணிங்க, ரொம்ப அரிசி போடுங்க, தாய்மார்களே’ என்று அவன் சொல்லிக் கொண்டு வரும்போது, சின்னான் அலட்சியமாக, ‘ஆமாங்க, ஆமாங்க! என் வயிற்றிலே கூட, ஒரு பிசாசு இருக்குதுங்க; அது மூணு ஆள் சோறு கேக்குதுங்க’ என்று பேசுவான். இந்த சின்னானை நம்மால் விட்டுவிட முடியுமா?

# வாத்தியார் சாமண்ணு

**வா**த்தியார் சாமண்ணு பள்ளிக்கூட உபாத்தியாயர் அல்லர். உள்ளதைச் சொன்னுல் அவர் பள்ளிக்கூடத்தைக் கண்ணுல் பார்த்தவருமல்லர், காலால் மிதித்தவருமல்லர். ஒருகால் காதால் கேட்டிருக்கலாம். பிறகு இவர் எந்தத் தினுசு வாத்தியாரோ என்முல், சாமண்ணு புரோகிதர் — மணம், இதி முதலியவைகளை நடத்திவைக்கும் புரோகிதர்.

சாமண்ணுவின் வீட்டார் பரம்பரைப் புரோகிதர்கள். 'உன் பிறப்போ பத்து, உயர் சிவனுக் கொன்றுமில்லை. என் பிறப்போ எண்ணத் தொலையாது' என்று கோபங்கொண்டு விஷ்ணுவை இகழ்ந்து பாடிய காளமேகம் சொல்லியது போல், சாமண்ணுவின் குடும்பத்தாரின் புரோகிதத் தொழில் எந்தக் காலத்திலிருந்து வந்ததோ, அதற்குச் சரித்திரம் கிடையாது. ஊர் வம்பு மட்டும் உண்டு.

'ஏப்பா! அவுங்க குடும்பம் ஆயிரங் காலமா, இந்தத் தொயில்தான் செய்து வருதுங்க' என்று நிமிரச் சக்தியில்லாமல், கூனிக்கொண்டு, தடிகொண்டு நடக்கும் கிழவி சொல்லுவதுதான் பிரமாணம். எந்தத் தொழிலும் பரம்பரையாகிவிட்டால், அதை மேற்கொண்டவர்களுக்குச் செயற்கை

லட்சணங்கள் ஒன்றுமே தேவையில்லை; இயற்கைப் பாத்தியம் ஒன்றே போதுமானது என்பது ஒருவகை உலக இயல்பு.

வெள்ளைக் கடுக்கன், வீர சங்கிலி, அரைப்பவுன் மோதிரம், சின்ன ரேக்ளா வண்டி சகிதமாக ஊர்கோலம் வரும் சாமண்ணாவைக் கண்டால், நீங்கள் எனக்குப் படம் பிடித்து அனுப்பிவைக்க வேண்டும். எல்லா விஷயங்களிலும் அடியோடு மாறுதல் அடைந்த சாமண்ணா படம் பிடித்துக் கொள்ள மட்டும் மறுத்துக்கொண்டே வருகிறார். பிடித்துக் கொண்டால் ஆயுள் குறைந்து போகுமாம்! யாருடைய ஆயுளோ?

சாமண்ணா வீட்டுப் பெரியார்கள் சாமண்ணாவின் காலத்துக்கு முன்னர், அடக்க ஒடுக்கத்துடன் வாழ்ந்து வந்தவர்கள். பொருளிலும் பெயரிலும் அதிகமாக ஆசை வைக்காதவர்கள். 'வெந்ததைத் தின்று, விதி வந்தபொழுது சாகிறோம்' என்று நொந்துகொண்டு சொல்லுவது போலக் கேலி செய்யும் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் இந்தப் பெரியார்கள்.

'அழுக்கு வேஷ்டி நித்திய தரித்திரத்துக்கு அறிகுறி' என்பது ஒரு மரபு. ஆனால் அழுக்கு வேஷ்டி இடுப்பிலேறிய இப்பெரியார்களிடம் ஆயிரக் கணக்கில் ரூபாய் கையிருப்பு. ஆனால் அதை வட்டிக்கு விட்டு, குட்டி போடச் செய்யும் ஆற்றலும் ஆசையும் இல்லாதவர்கள். இந்த ஆசையில்லாமைக்குக் காரணம் ஆசை யில்லாமையன்று. பயந்தான் காரணம். பாய்ந்த மடையால் வடிந்து போகுமோ என்று பயந்து, பணத்தை இவர்கள் வட்டிக்கு விடுவதில்லை.

வெள்ளை வேஷ்டி கட்டிக்கொண்டால், ஊரிலே ஏதே னும் அவதூறு பேசுவார்களோ என்று எண்ணி, கிழிசலும் அழுக்கும் நிறைந்த துணிதான் இவர்களை அலங்கரித்து நிற்கும். பரிதாபக் கோலத்தை வருவித்துக்கொள்ளும் இவர்கள் இயற்கைச் சித்திரக் கவிகளாகத்தான் இருக்கவேண் டும். இவைகள் சாமண்ணுவின் பெரியார்களின் சுபாவம்.

நாளோடு நாகரிகம் சேரும் என்று சொல்லுவது போல, சாமண்ணுவும் நாகரிகமும் ஒன்ருய்ப் பிறந்தார்கள் ; ஒன்ருய் வளர்ந்தார்கள் ; ஒன்ருய் — அது மட்டும் இன்னும் நேர வில்லை. ஒன்ருய் வாழ்ந்து வருகிருர்கள். சாமண்ணுவின் இளம் பிராயத்திலேயே, அவரது தந்தை பரலோகப் பிராப்தி யடைந்தார். சிவலோகப் பிராப்தியோ, வைகுந் தப் பிராப்தியோ, சொர்க்கப் பிராப்தியோ — அல்லது மற் ருென்று பிராப்தியோ, அது எது என்று சொல்ல முடியாது. போய்ப் பார்த்துத் திரும்பினவர்கள் தைரியமாய்ச் சொல்ல லாம்.

பரலோகப் பேச்சுத்தான் இவர்களின் தொழிலுக்கு அஸ்திவாரம். இந்தப் பேச்சை ஏற்காதவர்கள் அவர்களின் தொழிலை ஏற்கவும் மாட்டார்கள். ஆனுல் மரண பயம் கொண்ட மாந்தர்கள், இகலோக வாழ்க்கையில் துளியளவும் இன்பத்தை அனுபவிக்காமல் உயிர் நீத்த மனிதர்கள், ஆசை பூர்த்தி யடையாமல் மரித்தவர்கள், மற்றவர்களை ஆட்டி வைக்கும் சுபாவம் கொண்டவர்கள் — இவர்கள் பரலோகத் தைப் பற்றி யாதொரு ஆயாசமும் இல்லாமல் பேசுவார்கள்.

இந்தப் பரம்பரைகளில் ஒன்றில் பிறந்த சாமண்ணுவுக்கு தரித்திரத் தொல்லை கிடையாது. அவருடைய பெரியவர்கள் சம்பாதித்த பணத்தையெல்லாம் அவருக்குக் கார்டியனுக

இருந்த ஒருவர், நிலத்தில் போட்டு பந்தோபஸ்து செய்ய எத்தனித்தார். மனம் கொண்டது மாளிகை என்பது அவருக்குத் தெரியாது. கல்வி யில்லாதவன் கசடன் என்று சொல்லுவதில் பயனில்லை. சாமண்ணு கசடன் என்று சொன்னால், இப்பொழுது அவர் இருக்கும் வரட்சையில் மான நஷ்ட தாவா செய்து பணம் சேர்க்கவும் துணியக் கூடும்.

சொத்துக்குச் சட்டப்படி மைனராக விளங்கிய சாமண்ணு, எல்லாத் துறைகளிலும் மைனராகவே விளங்கினர். புத்தியில் மைனர்; அனுபவத்தில் மைனர்; குணத்தில் மைனர்; பொறுப்பில் மைனர். இரண்டு சங்கதிகளில் மட்டும் அவர் மேஜராகிவிட்டார். பிறரை அவமதிப்பதிலும், கண் காது தெரியாமல் செலவு செய்வதிலும் அவர் மிகப் பழுத்த மேஜர்.

போர்க்களத்தில் அணி வகுத்து நிற்கும் சேனையை, ஒரு தரம் முழுதும் பார்த்து மனத்தை நிதானப்படுத்திக் கொள்ளுவார் தளகர்த்தர். அவ்விதம் கூடச் செய்யவில்லை நமது சாமண்ணு. வயதிலே மேஜர் என்ற சிகரம் அடைந்ததும், 'தாக்கு' என்று உத்தரவு கொடுத்தார் நமது சேனைக்கு. அவருடைய சேனை எது என்று உங்களுக்குத் தெரியாதா? அதுதான் பணம்.

சாமண்ணுவின் சேனைச் சிப்பாய்கள் நாலா பக்கங்களிலும் தாக்க ஆரம்பித்தார்கள். உபமானத்தை வளர்த்துக் கொண்டே போனால் இனிப்பா யில்லாமல் போய்விடவும் கூடும். சாமண்ணுவின் பணம் டிராமாக் கொட்டகைக்கு ஓடிற்று; தாசி வீட்டுக் கதவைத் தட்டிற்று; ஸில்க் முதலிய

அலங்கார உடைகளை விற்கும் சேட் அவர்களின் இருப்புப் பெட்டியில் போய் அடைக்கலம் புகுந்தது. மாட்டுச் சந்தையில், பரவலாய்ப் படுத்துக் கிடந்தது. நகை செய்யும் இடங்களில் பவுன்களாகவும் ஜொலிக்கும் கற்களாகவும் உருமாறிக் கிடந்தது.

'பணமே, உன்னைச் சேர்ப்பார் பிணமே' என்று சளி பிடித்துக்கொண்ட மயிலின் தொண்டையில் சாமண்ணு பாடுவதைக் கேட்டால், கேட்பவர்களின் உள்ளத்திலும் காதிலும் தேன் வந்து பாய்வதைப் போல இருக்கும். ஆகா! இவ்வளவு விரக்தி பணத்தில் இவருக்கு வந்துவிட்டதே என்று மூக்கர்கள், சாதுக்கள் எண்ணக்கூடும். இது விரக்தியன்று. இது சாமண்ணுவின் இயற்கையான முட்டாள் தனம்.

தான் தேடாத பொன் ரொம்ப நாளைக்குக் கைகட்டிச் சேவகம் செய்யாது. அது வந்த வழியைப் பார்த்துக் கொண்டு, திரும்பிப் பார்க்காமல், வருந்தி அழைப்பவர்களிடம் — வருந்தி உழைப்பவர்களிடம் அல்ல — போய்ச் சேரும். இப்பொழுது சாமண்ணுவுக்கு மிகுந்து நிற்பவைகளை ஜாப்தாவாக ஏற்கனவே சொல்லிவிட்டேன். ஒன்று சேர்க்கவேண்டும். எத்தகைய மருந்துக் கட்டுப்பாட்டுக்கும் அடங்காத, 'சுதந்திரம்' பெற்ற நோய்கள், சாமண்ணுவின் பேரில் அரசாட்சி செய்து வருகின்றன இப்பொழுது.

சாமண்ணுவுக்குத் தெய்வமும் இல்லை; 'திங்க'ளும் கிடையாது. தெய்வம், திங்களை நம்பி வாழும் மாந்தர்களின் மூலமாய் அவர் ஜீவனம் நடத்தி வருகிறார். வாழ்க்கைக்கு அர்த்தமும் பொறுப்பும் கற்பித்துக்கொள்ளாத

சாமண்ணாவின் கண்களில் யாரும் பெரிய மனிதராகப் படுவ தில்லை. மனக் கோணலை யாரால் நிமிர்த்த முடியும்? அதி லும் உடலில் நோய் சேர்ந்துகொண்டால் அவன் நடைப் பிணம்தான். அந்தக் கோஷ்டியில் சாமண்ணாவைச் சேர்த்து உரக்கச் சொல்லுவதற்கு எனக்குப் பயம். நீங்கள் சொன் னால், அதைக் கூடச் சேர்ந்து சொல்லுகிறேன். ஆனால் உரக்கச் சொல்ல மாட்டேன்.

சாமாண்ணாவுக்கு அனுபவ ரீதியாகச் சில உண்மைகள் புலப்பட்டிருக்கின்றன. அவைகளுக்கு அவர்தான் ஜவாப்தாரி. அவைகளைச் சொல்லுவதற்கு மட்டும் நான் பொறுப்பு ஏற் றுக்கொள்ளுகிறேன். (1) கற்பு என்பது கற்பனை. (2) கல்வி என்பது கற்காதவர்கள் ஏங்குவதற்காக ஏற்பட்ட கட்டுப்பாடு. (3) பணம் பிணத்துக்குச் சமானம். (4) புகை யிலை தேவாமிருதத்துக்கு அடுத்த சரக்கு. (5) பொறுப்பு என்பது தொந்தரவு. (6) இன்பமும் பெருமையும் சிலருக் குத்தான் உரிமைகள். (7) விதியை ஈச்வரனாலும் வெல்ல முடியாது.

# பூசாரி சரவணை

'வெட்ட வெளியினிலே, வேலை பார்க்கும் வேளையிலே, கள்ளி, கருப்பாயி! நீ கால் தலைகள் போட்டதென்ன?' என்று இந்த மாதிரிப் பாடிக்கொண்டு, உடுக்கு அடித்துக்கொண்டிருக்கிறாரே காளியம்மன் கோயிலில், அவர் தான் சரவணை பூசாரி. 'இழுக்குடைய பாட்டுக்கு இசை நன்று' என்பது ஆன்றோர் முதுமொழி. சரவணை, 'கண் இமைப் பொழுதில், கைநொடிப் பொழுதில், கவி கட்டி, உடுக்கு அடித்து, அதைக் காளியின் சன்னிதானத்தில் அரங்கேற்றவும் செய்துவிடுவார்.

இரண்டு மூன்று ரகப் பேர்வழிகளுக்கு, பாட்டுக் கட்டுவது எளிதான காரியம். அகராதியைத் துணைக்கு வைத்துக் கொண்டு தமிழ்ப் பண்டிதர்கள் கவி புனைந்துவிடுவார்கள். பாட்டுகளுக்குத் தளையும் சீரும் இருந்தால் போதும் அவர்களுக்கு. கவிதையின் ஆவேசம் என்ற ஒரு சங்கதி இருப்பதாகவே, தமிழ்ப்பண்டிதர்களின் கற்பனையில் படுவதே யில்லை. 'தேமாங்கனி, கூவிளங்காய்' முதலிய யாப்பு இலக்கண விதிகளை வைத்துக்கொண்டு தாளத்துடன் அகராதிச் சொற்

களை அடுக்கிக்கொண்டே போனால், கவிதையாகிவிடும் என்பது பண்டிதர்களின் நினைப்பு.

போதை மன்னர்களான முழுக் குடியர்கள் கவிபாடும் திறமை கொண்டவர்கள்தான்! எவ்வளவுக் கெவ்வளவு சரக்கு உள்ளே போகிறதோ, அதற்குத் தகுந்தாற் போல, பாட்டு வெளியே வரும். பாட்டு இருக்கிற இடத்தை, உள்ளே போகும் சரக்கு ஆக்கிரமித்துக்கொண்டால், பாட்டு வெளியே வராமல் என்ன செய்ய முடியும்? இவர்கள் பாடும் பாட்டுகளிலே, குறை கண்டுபிடிக்க முடியாது. நீட்டி நீட்டி ராகம் பாடி, பாட்டின் குறையைத் தொடைத்துவிடுவார்கள்.

பிலாக்கணம் பாடும் பெண்களுக்குப் பாட்டு எளிதிலே வரும். 'மஞ்சளிழந்தேன், மன்னவனைத் தானிழந்தேன்; பஞ்சிலே படுத்தெழுந்த பாலகனை நான் இழந்தேன்' என்று எப்படியோ பாட்டைப் பாடி, பிலாக்கணத்தைப் பூர்த்தி செய்துவிடுவார்கள். பிலாக்கணம் பாடும் பெண்களை இயற்கைக் கவிகள் என்றே சொல்லவேண்டும். கண்ணில் தண்ணீரும், நாவிலே பிலாக்கணப் பாட்டும் பெண்களுக்குத் திடீர் திடீரென்று உதயமாவது இயற்கைபோலத் தோன்றுகிறது.

பாட்டுக் கட்டுவது பூசாரிக்கும் எளிது. நாலைந்து தமிழ் வார்த்தைகளை — ஏன் கருமியா யிருக்கவேண்டும்? இருபது முப்பது வார்த்தைகளை — வைத்துக்கொண்டு, 'அதைத்தானே, மெள்ளத்தானே, போகத்தானே, எத்தனித்தானே' என்ற அழகான முறையில், எளிதாகப் பாட்டுக் கட்டிவிடுவார்கள் பூசாரிகள். இவர்கள் பாட்டுகளுக்குச் சரி சொல்வது போல, உடுக்கு அடிக்கும்; தானாக அடிக்காது. முள் வந்து தைத்தது என்று சொல்லுவது

எவ்வளவு சரியோ, அவ்வளவு சரியல்லவா உடுக்கு அடிக்கும் என்று சொல்லுவது ?

பூசாரியின் உடுக்கை, எங்களூர் பண்டாரி என்ற பையன் வர்ணிப்பதை, நீங்கள் கேட்டதில்லையே? 'உடுக்குன்னு உடுக்குத்தான் ; ஒண்ணுந்தா உடுக்குந்தான் ; ஒய்யார உடுக்குத்தான் ; அப்படி யிப்படிப் பேசுந்தான் ; சங்கீதம் பேசுந் தான் ; சரவணேயின் உடுக்குத்தான்' என்று பிராஸம் போட்டு, பண்டாரி குதித்துப் பாடுவதை நீங்கள் பார்த்தால், சரவணேயின் உடுக்கு பண்டாரியை எவ்வளவு வரையில் கவர்ந்திருக்கிறது என்பது உங்களுக்குத் தெளிவாகத் தெரியும்.

சரவணே காளி கோயில் பூசாரி. காளி கோயிலுக்குக் கடா வெட்டினல், சரவணேக்குத் தலே. பலி கொடுத்தவர் களுக்கு உடல் மிச்சம். பத்திரகாளிக்கு எது மிஞ்சுமோ, அதைப்பற்றி மேற்சொன்ன இருவர்களேயும்தான் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். 'காளி கடாவுக்குக் கழுத்து நிறையப் பூமாலே போடவேண்டும்' என்று சரவணே சொல் லிக்கொண்டு, கொடுவாள் சகிதமாகக் கோயில் வாயிற்படி களில் இறங்கி வரும்பொழுது, அவர் காளி ஸ்வரூபம் படைத் தவர் என்றே தோன்றும். சரவணேயின் குறி ஒரு நாளும் தப்பியதில்லே. ஒரு வெட்டுக்கு அதிகமாக, இரண்டாவது வெட்டுத் தேவையே இருந்ததில்லே.

ஏழைக் குடியானவர்கள் உடுக்கு அடித்துக் குறி கேட்க சரவணேயிடம் வருவார்கள். 'இப்போ நல்ல வேளே இல் லீங்க ; உச்சிப் பொழுதுக்கு வந்துடுங்க. காளியாயி என்ன உத்தரவு கொடுக்கிறளோ, பாப்போம். எல்லாம் அவள் நினேத்தபடிதான் இந்த உலகத்திலே நடக்கும். நம்மாலே என்ன ஆகுங்கோ? அவள் நினேத்தது சட்டம் ; நினேக்காதது

மட்டம்' என்று சரவணை சொல்லுவார். சரவணை சொன்ன கடைசி வாக்கியத்தின் அர்த்தத்தை நன்ருகத் தெரிந்து கொண்டவர்கள், குடியானவர்கள் தலையை ஆட்டுவார்கள். எனக்கோ சரவணை சொன்னதில் அர்த்தம் விளங்கவில்லை. பிராஸம்தான் தெரிந்தது.

குறி கேட்க வந்தவர்கள் கூட்டமாக உட்கார்ந்து கொள்ள, சரவணை உடுக்கு சகிதமாக, முன்னல் உட்கார்ந் திருப்பார். குத்து விளக்கு எரிந்துகொண்டிருக்கும்; குங்கு மப் பொட்டு, பூச்சயிலி சகிதமாக சாம்பிராணிப் புகை, கம கம வென்று வாசனை வீசும். உடுக்கின் பட்டுக் குஞ்சம் ஒரு கஜம் கீழே தொங்கி, தரையில் புரண்டுகொண் டிருக்கும். 'ஆதி பகவதி, அனந்தாயி, அன்னபூரணி! சொல்லுக்கரிய சுந்தரி, கௌமாரி! வந்து நீ என்னை வாழ்த்திடுவாய், வாழ்த் திடுவாய்! பூம், பூம், பூம், பூம்', என்று உடுக்கைத் தட்டி, சரவணை குறி சொல்லத் துவக்குவார்.

கவன சக்தி மிகுந்த சரவணை, பாட்டுக்குள்ளே புகுந்து விடுவார். 'அப்படி யிப்படிப் பேசுந்தான்; ஆனந்தமாய்ப் பேசுந்தான்' என்று பண்டாரி அருமையாக வர்ணித்த உடுக்கு, சங்கீத மயமாக ஒலிக்கும். அந்தச் சமயத்தில் சரவணை அவர்களின் உடல் படும் பாட்டைச் சொல்லி முடி யாது. ஆதி பகவதியாகிய ஓங்காரி காளி, சரவணையின் உடலில் புகுந்து குறி சொல்லப் போகிற சமய மல்லவா? சரவணையின் சிறிய உடலில் மகத்தான காளி புகுவது என்றால், வேதனை ஏற்படாதா?

'அப்பா, அப்பா!' என்று ஆர்ப்பரித்துக்கொண்டே, 'ஒரு பொருளைப்பற்றி நீ வந்து இருக்கிருய்' என்று சரவ

ணையின் உடலில் புகுந்துகொண்டிருக்கும் காளி சொல்லு வாள். 'அம்மா, எங்கேயோ நினைப்பாயிருக்கிறுயே! நீ சொன்னது சரிதான்; இருந்தாலும் சரியாய்ப் பார்த்துச் சொல்லு. ஒரு சீவனும் பொருள்தான். அது இல்லிங் கிலே! பார்த்துச் சொல்லு அம்மா!' என்பார் ஒரு குடியான வர். 'காளியாயி சொல்லட்டுமே, உனக்கு அதைக் காட்டி யும் என்ன அவசரம்? பச்சைக் கன்னுக்குட்டி மூணு நாளாய்ப் பால் குடிக்கலேன்னு காளியாயிக்குத் தெரி யாதோ?' என்பார் இன்னெருவர்.

சரவணைக்குப் பாட்டிலும் உடுக்கிலும் கவனம் என் பதை ஒப்புக்கொள்கிறேன். இவர்கள் பேசுவதிலும் கவனம் அவருக்குண்டு என்பதை நீங்கள் ஒப்புக்கொண்டுதான் தீர வேண்டும். 'ஆமாம், அப்பா! நீ ஒரு நாலு கால் ஜீவனைப் பற்றி வந்திருக்கே. அது மாயமாய்ப் போச்சு, மாயமாய்ப் போச்சு! கட்டுத் தரியைவிட்டு மாயமாய்ப் போச்சு! கள்ளன் கையில் சிக்கிப் போச்சு. போன வருஷம் நீ காளியாயிக்கு மாவிளக்குப் போடல்லே, போடல்லே!' என்று சொல்லிக் கொண்டே போவார் சரவணை.

'கள்ளன் கையில் போன பசுமாடு தானுக வருமா; தேடிப்பிடித்துத்தான் வருமா?' என்று கேட்டால் 'அப்பா, அப்பா! பொறுக்க முடியல்லே, பொறுக்க முடியல்லே! தானுக வந்தாலும் வரும், தேடிப் பிடித்து வந்தாலும் வரும்' என்பார் சரவணை. 'ஆயி! ஒண்ணை நிச்சயமாய்ச் சொல்லு' என்பார் ஒருவர். 'இவனுக்குப் புத்தியில்லை. சும்மாச் சும்மா கேட்டுக் கொண்டேயிரு. நாம் தேடினுல் பசுமாடு தானுக வருது' என்று அறிவுத் தெளிவுடன் இன்னெருவர் பேசுவார். இவர் கடைசியில் சொன்னதுதான் உண்மை.

இதற்குப் பூசாரி சரவணையின் உடுக்கு தயவு எதற்காக என்று இவர்களை யார் கேட்கமுடியும்?

கலியாணம் நிச்சயம் செய்வதற்காக, குடியானவர்கள் குறி கேட்கப் போவார்கள். 'பெண் எந்தத் திக்கிலிருந்து வரும்?' என்று கேட்டால், 'நீ பார்க்கிற திக்கிலிருந்து வரும்' என்பார் சரவணை. 'நீ பெண் பார்க்கிற திக்கிலிருந்து' என்பது சரவணையின் கருத்து. இப்படி அர்த்தம் செய்ய மாட்டார்கள் வந்தவர்கள். எப்படி உட்கார்ந்து குறி கேட்டு, எந்தத் திசையைக் கண்ணால் பார்த்துக்கொண்டிருக்கிறார் களோ, அந்தத் திசையிலிருந்து என்று வந்தவர்கள் முடிவு கட்டிக்கொள்ளுவார்கள். இவர்கள் தப்பிதமாய் அர்த்தம் செய்துகொண்டால் அதற்கு சரவணை ஜவாப்தாரி யாவாரா?

பூராத் திட்டம் சரக்குப் போடுவார் சரவணை. அந்தச் சமயத்தில் ஆடல், பாடல், ஏசல் எல்லாம் கலந்துகொள்ளும். பெண்ணுக்கும் பிள்ளைக்கும் பொருத்தம் பார்ப்பதற்கு, சிலர் அந்தச் சமயத்தில் வந்து சேர்ந்தால், அப்பொழுதுதான் ஜோர். 'என்ன பொருத்தங்க! பதினெட்டுப் பொருத்தம் பார்த்தாலும் சாவது இல்லீங்களா? அறுக்கிறது இல்லீங் களா? மனப் பொருத்தம் பாருங்க, போதும். இல்லாட்டி நாளைக்கு வாருங்கோ!' என்பார். போதை சமயத்திலே, சரவணை எப்பொழுதும் சத்தியந்தான் பேசுவார் என்பது நிச்சயம். மற்றையக் குறி வேளைகளில் எதையாவது தவறாக நீங்கள் நினைத்தால், அது உங்கள் பொறுப்பின் பேரிலே. எனக்கும் அதற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை.

## தாலூகா குமாஸ்தா

குமாஸ்தாவைப் பார்த்தாலே தெரியும். குமாஸ்தா என்ற அருமையான ஜாதிக்கு பிரத்தியேக லக்ஷணங்கள் உண்டு. நால்வகை ஜாதிகள் நமது நாட்டின் பழைய சொத்து; நமது சொந்தச் சரக்கு. ஆனால் இந்தக் குமாஸ்தா ஜாதி ஆங்கில ஆட்சியில் மலர்ந்த ஒரு தனி ஜாதி. சைவர்களுக்கு வெண்ணீறும், வைஷ்ணவர்களுக்குத் திருநாமமும், பார்ப்பனர்க்குப் பூணூலும் அடையாளங்கள் என மதித்து அவர்களை ஜனங்கள் கண்டுகொள்ளுகிறார்கள். அதே போல், குமாஸ்தாவைக் கண்டவுடன் தெரியும். வெண்ணீறு பூசினாலும், திருநாம மிட்டாலும், பாழ் நெற்றியுடனிருந்தாலும், நீண்ட தாடியுடனிருந்தாலும் இவைகளின் உள்ளே புதைந்து கிடக்கும் குமாஸ்தா வெளியே குதித்துவிடுவார்.

குமாஸ்தாக்களின் கண்கள் குழிந்து 'பஞ்சடைந்து' கிடக்கும். சட்டைக்கு எல்லாப் பித்தான்களும் இருக்க மாட்டா. நெய்த நூல் நீங்கி, தைத்த நூல் அதிகமாயிருக்கும். உடம்பில் தேமல் காணுவதைப் போல், சட்டையில் 'சுட்டை சுட்டையாய்' வேறு துணிபோட்டு ஒட்டியிருக்கும். சட்

டைப் பையில் மூக்குக் கண்ணாடி இருக்கும், ஏற்கனவே கண் ணில் இல்லாவிட்டால். இடுப்பில் பொடிமட்டை சொருகி யிருக்கும். சட்டையைச் சிறிது சோதித்துப் பார்த்தால், புகையிலைத் துணுக்குகளும், பாக்குச் சீவல்களும், வாடின வெற்றிலையும், உலர்ந்த சுண்ணாம்புக் கட்டியும் அகப்படும். கையிலே ஆபீஸ் தஸ்தாவேஜி கண்டிப்பாய் இருக்கும். இன் ெனாரு கையில் ஒடிந்த காம்புள்ள குடை ஒன்று. இந்த லட் சணங்களைக் கண்டால், குமாஸ்தாவென்று கும்பிட முடி யாதா?

குமாஸ்தா அருமையான மனிதர். கண்டவர்க்கெல்லாம் ஸலாம் போடுவார். பார்த்தவர்களுக் கெல்லாம் பல்லைக் காட்டு வார்; உடனே ஒரு அசட்டு விழி விழிப்பார். கூடக் கனைப்பும் வரும், தொண்டையும் கரடு கட்டும். மார்பு 'பக் பக்' என்று அடிக்கும். அடிக்கடி வியர்க்கும். இந்தக் குமாஸ்தா ஆசிர மத்துக்கு முன் இவர் இருந்த வகை தெரியுமா?

அவருடைய இருபத்திரண்டு வயது வரையிலும் கவலை யின்றித் தம் தகப்பனாரின் பணத்தை குமாஸ்தா செல வழித்து வந்தவர்; அப்பொழுதெல்லாம் ஊரை வளைத்துப் பேசினார். உலகத்திலுள்ள சாம்ராஜ்யம் யாவும் தமது என்று எண்ணினார். தம் கையில், செலவழிக்கக் காசு இருக்குமளவும் உலகத்தில் தமக்கு எவரும் நிகரல்லரென்று நினைத்தார்.

அந்தச் சமயம் தகப்பனார் சிந்தை தளர்ந்தார். கடன் காரன் வாயிலுக்கு வந்தான். பெண்சாதியும் குழந்தையை இடுப்பிலெடுத்துக்கொண்டு வீட்டுக்குள் வந்தாள். தாயின் நோய் வலுத்துவிட்டது. வேலைக்கு மனுச் செய்துகொண் டார். அதிருஷ்ட பாக்கியத்தால் வேலையும் கிடைக்கவே, குமாஸ்தா முத்திரையும் முகத்தில் ஏறிவிட்டது.

ஆபீஸில் ஐந்து ரூபாய் சம்பளம் உயருமுன் வீட்டில் இரண்டு குழந்தைகள் பிறந்து விடுகின்றன. ஆபீஸிலோ, மேலேயிருக்கும் ஆள் செத்தாலொழிய, கீழே யிருக்கும் ஆளின் பதவி உயராது. ஆகவே, மேலே யிருப்பவன் சாவுக்கு தினம் தினம் பிள்ளையாரைச் சுற்றி வரவேண்டும். சனி விளக்குப் போடவேண்டும். ஜோஸியம் பார்க்கவேண்டும். என்ன செய்தாலும் மேலே யிருப்பவன் 'குண்டுக்கல்'லா யிருக்கிறான்.

கையிலே காசு இல்லாததினால் உறவினர்களின் கலியா ணத்துக்குப் போக முடிவதில்லை. ரஜா கிடைக்கவில்லை என்று மனமறிந்து பழுத்த பொய்யைக் குமாஸ்தா சொல்லு வார். கடைசியாக, தாய்க்கு நோய் என்று உண்மையைச் சொன்னாலும் லீவு கிடைப்பதில்லை. ஓய்வோ ஒரு நாளும் கிடையாது. செக்கு மாடுபோல் உழைத்தே தீரவேண்டும்.

உட்கார்ந்த வேலை; ஆகவே, குமாஸ்தா நோய்க் களஞ் சியம். நோய்க்குப் பிறப்பது நோயா, குழந்தையா? அதை நினைக்க நினைக்க மனம் வருந்தும். குறைந்த சம்பளம், செலவு அதிகம். இதிலே நாகரிகமும் இரண்டு மடங்காகச் சேரவேண்டும். வைத்தியரும் அடிக்கடி பேட்டி காண வந்து விடுகிறார். துரை மனமோ தெரியாது. என்றைக்குச் சீட்டுக் கொடுத்துவிடுகிறாரோ?

குடும்பம் நடக்க வேண்டும். குழந்தைகள் பிழைக்க வேண்டும்; படிக்கவும் வேண்டும். பெண்ணுக்குக் கலியா ணம்; பணத்துக்குத் திண்டாட்டம். கவலை கொண்ட மனது; அதைத் தாங்கும் சீர் இழந்த நரம்புகள். ஆகவே புகையிலையை வைத்துத் தாக்கவேண்டும். ஷண்முகம் பொடி யைப் போடவேண்டும். எஸ்ஸன்ஸ் காபி குடிக்கவேண்டும்.

எல்லாம் சேர்ந்து உஷ்ண வாயுவைக் கிளப்பட்டும். மண்டைக் குத்தல் வரட்டும்; இரவுத் தூக்கம் போகட்டும். ஆயுள் குறையட்டும். 'மேல் வரும்படி'யில் கண் இருக்கட்டும். குமாஸ்தா பிழைப்பு ஒரு பிழைப்பா? என்ன செய்கிறது? 'ஏழைகளாய்ப் போனால் எத்தொழிலுக்கும் இசையத்தானே வேண்டும்?' என்று தலை குனிந்துகொண்டு, குமாஸ்தா சொல்லிக்கொண்டு போகிறார்.

குமாஸ்தாவைப் போல ஏக்கம் பிடித்தவர் எவருமில்லை. வீட்டிலே சம்சாரத்துக்கு பயம். ஆபீசிலே துரைக்கு பயம். வெளியிலே எல்லாரிடத்திலும் பயம். குமாஸ்தாவாக இருந்து, உயர்ந்த பதவி அடைந்து பணம் சம்பாதித்து மீதமாக்கி, கிழப் பருவம் எய்தி சுக ஜீவிகளாய் வாழ்ந்தவர் எவருமில்லை. சதா செலவுதான்; சதா கடன்தான். குமாஸ்தாக்களுக்கு நற்கதி எப்போதேனும் ஏற்படுமா? மனிதர்களுடன் கூடிக் கலந்து களிப்படையத் தக்க ஓய்வு அவர்களுக்கு உண்டாகாதா? ஆபீசுக்கும் துரைக்கும் செலுத்தும் பக்தியில் ஒரு பகுதியைக் கடவுளிடம் செலுத்தினால், அவரேனும் கைவிடாமல் இருக்கமாட்டாரா?

## பியூன் சின்னக்கண்ணு

பியூனுவது, சின்னக்கண்ணுவது, பெரியகண்ணுவது, இந்தப் பேர்வழி யார்? இந்தக் கேள்வியைப் பதட்டமாய்க் கேட்கவே படாது. எங்கள் சின்னக்கண்ணுவை நேரில் பார்த்தவர்களுக்கு, பதட்டமாய்க் கேட்கவேண்டும் என்ற புத்தியே வராது.

சின்னக்கண்ணு அம்மாக்கண்ணுவுக்கு என்ன வேண்டும்? சின்னக்கண்ணு ஆணு பெண்ணு என்ற சந்தேகம் எழலாம். தூங்குகிற நேரத்தில் பிரம்மா எத்தனையோ ஆண் பெண் பதர்களைச் சிருஷ்டி செய்து, 'உன்னைப் படைத்தானே ஒருத்தன்!' என்று வசையும் வாங்கிக்கொண்டிருக்கிறார். சின்னக்கண்ணுவைப் படைத்த 'ஒருத்த'னுக்குத் திட்டு எதுவும் கிடைக்காது என்பது நிச்சயம்.

சின்னக்கண்ணு ஆண்பிள்ளைதான். 'சின்ன'வோடு 'கண்' சேர்ந்திருக்கிறதே, அப்படியானால், தேவர்களுக்கெல்லாம் பணமில்லாமல் பணிவிடை செய்து மனிதர்களை மட்டும் ஒட்டாண்டிகளாக அடித்துவிடும் அசுர தாஸி — இல்லை, இல்லை, தப்பிதம், மன்னிக்கவும் — தேவ தாஸிக்

கூட்டத்தைச் சேர்ந்தவனே சின்னக்கண்ணு என்று மனத்தில் தோன்றினல், அது இந்த தேசத்தாரின் விகார மனப்பான்மையைக் காண்பிக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

ஜாதி என்ற வார்த்தையில், ஏதேனும் பெருமை இருக்குமாகில், சின்னக்கண்ணு ஜாதி ஹிந்து இனத்தைச் சேர்ந்தவன். ராஜ்யத்தைப் பறிகொடுத்துவிட்டுத் திண்டாடும் நாயுடு சமஸ்தானத்தைச் சேர்ந்த நாய்க்கர் சின்னக்கண்ணு. இப்பேர்ப்பட்ட பேர்வழியை, அவன் இவன் என்று சொல்லலாமா? சொல்லக்கூடாதுதான். ஆனல் நாங்கள் சின்னக்கண்ணுவோடு, அருமையாக நெருங்கிப் பழகிவிட்டோம். எங்களுக்குள் அவ்வளவாக, மரியாதைப் பதங்கள் விளையாடமாட்டா.

எங்கள் பள்ளிக்கூடத்தில் சின்னக்கண்ணு 'பியூன்'. எங்கள் பள்ளிக்கூடம் என்றால் நாங்கள் முதல் போட்டு நடத்தி வரும் பள்ளிக்கூடம் என்பதல்ல. நாங்கள் படித்து உருப்படாமல்— இல்லே, உருப்பட்ட—பள்ளிக்கூடம். நாங்கள் உருப்படவில்லே என்று உரக்கச் சொன்னல், எங்களுக்குச் சொல்லிக்கொடுத்த வாத்தியார்களுக்கெல்லாம் கோபம் வரும். சின்னக்கண்ணு கதையில், அவர்களேப் பற்றி அவதூறு பேசவேண்டும் என்பதுண்டா?

எங்கள் பள்ளிக்கூடம் கீற்றுக் கட்டிடமாய் இருந்த காலத்திலேயே, சின்னக்கண்ணு 'பியூன்' வேலேயில் அமர்ந்துவிட்டான். அப்பொழுது அவன் அதிபால்யம். எங்கள் பள்ளிக்கூடம் எத்தனேயோ தினுசுகளாக மாறிவிட்டது. சின்னக்கண்ணுவின் தலேயும் வழுக்கை விழுந்துவிட்டது.

இந்த வழுக்கையைத் தவிர, சென்ற முப்பத்தைந்து வருஷங்களாக—இது என் ஞாபக எல்லை — வித்தியாசம் எதுவும் தோன்றாமலே இருந்து வருகிறான். காலத்தினாலும், உடலும் உள்ளமும் சிறிதுகூட மாறவேயில்லை.

எங்கள் பள்ளிக்கூடத்தில் நூற்றுக்கணக்கான பிள்ளைகள் படிப்பார்கள். இத்தனை பிள்ளைகளின் பெயர்கள் வாத்திமார்களுக்குத் தெரியாமலிருக்கலாம். ஆனால் அத்தனை பையன்களுடைய—இப்பொழுதுதான் சில பெண்கள் படிக்க ஆரம்பித்திருக்கிறார்கள் எங்கள் பள்ளிக்கூடத்தில் — ஊர், பெயர், விலாசம், சொத்து, உறவு முதலிய எல்லா விபரங்களும் ஒன்றுவிடாமல் சின்னக்கண்ணுவுக்குச் சந்தேகமில்லாமல் தெரியும்.

ஒரு பையனுடைய முகத்தை ஒரு தரம் அவன் பார்த்தால் போதும். அதை ஒரு நாளும் அவன் மறப்பதில்லை. மனதுக்குள்ளே போட்டோ பிடித்துக்கொள்ளும் யந்திரம் ஏதேனும் வைத்துக்கொண்டிருக்கிறானோ என்னவோ? பையன்களைப் பற்றிய விவரங்கள் யாவுக்கும் சின்னக்கண்ணு ஒரு பெரிய அகராதி. சென்ற நாற்பத்தைந்து வருஷங்களாக, ஒரு ஆள் விடாமல், ஞாபகத்திலா இருக்கும்? இந்த நாட்டாருக்கு மனோ சக்தி குறைவு என்று சொல்லுபவர்கள், சின்னக்கண்ணுவைப் பார்க்காமல் அவசரத் தீர்ப்புச் செய்கிறார்கள் என்பதில் சந்தேகமே யில்லை.

நாங்கள் சின்னப் பையன்களா யிருக்கிற காலத்தில், எங்கள் தலைமை உபாத்தியாயரைக் கண்டால் ரொம்ப பயம். அந்த பயம்கூட அவ்வளவு பெரிதான சங்கதி யில்லை, சின்னக்கண்ணுவைக் கண்டால் எங்களுக்கு நடுக்கம்.

யாரையோ ஒருவனை அவன் குருட்டு அதிகாரம் செய்வான். அது எங்களைத்தானோ என்று எங்களுக்குச் சந்தேகம் உண்டாகும். தலைமை உபாத்தியாயராவது பையன்களோடு பேசுவார். சின்னக்கண்ணு யாரிடத்திலும் அதிக வார்த்தை வைத்துக்கொள்ளுவதில்லை. அவனிடத்தில் ஏன் மற்றவர்கள் கொஞ்சம் பயப்படமாட்டார்கள்?

இவ்வளவு பயமுறுத்துகிற சின்னக்கண்ணுவிடம் பிரியம், லவலேசமாயினும் இருக்குமா? அதுதான் ஸ்வாரஸ்யம். எங்கள் தலைமை உபாத்தியாயரைப் போல, கண்டிப்பு, மௌனம் என்ற போர்வையை மட்டும்தான் சின்னக்கண்ணு போர்த்துக்கொண்டிருக்கிறான். உள்ளத்தில் அனல் சட்டியைப் போல, கண கண வென்று ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அன்பு. உபமானத்துக்காகச் சொன்ன சங்கதி. அவனுடைய அன்பு யாரையும் சுட்டுவிடாது தொட்டு, கட்டி அனுபவிக்கலாம்.

சின்னக்கண்ணு யாரையும், எதையும், ஊன்றிக் கவனிக்காதது போலவே நடந்துகொள்ளுவான். ஆனால், அவன் பளிச்சென்று ஒரு தரம் பார்க்கிற பார்வை வலையில், எல்லா விவரங்களும் சிக்கிக்கொள்ளும். 'அவ்வளவு கூர்மையா அவன்?' என்று என்னைப் பரிகாசக் கேள்வி கேட்பதில் பயனில்லை. இன்றும் சின்னக்கண்ணு உயிரோடிருக்கிறான். இன்னும் ஆயிரங் காலத்துக்கு, அவன் இப்பொழுதிருக்கிற தேகக் கட்டோடு, இருக்கவேண்டு மென்பது என் ஆசை. அவனை நேரிலே பார்த்து, நான் சொல்வது உண்மையா, மற்றென்று என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

## பியூன் சின்னக்கண்ணு

சின்னக்கண்ணு எல்லாக் காலங்களிலும் 'பியூன்' டவாலி போட்டுக் கொள்வதில்லை. காங்கிரஸ் கமிட்டி கூட்டங்களில் விசேஷ சந்தர்ப்பங்களில், சில தேசபக்தர்கள் கதர் உடுத்திக்கொண்டு, ஆர்ப்பாட்டமாய் வருவது போல, பள்ளிக்கூடச் சோதனைக்காக இன்ஸ்பெக்டர் — போலீஸ் இன்ஸ்பெக்டர் அன்று; கல்வி இலாகா பரீட்சைச் சோதனை செய்யும் இன்ஸ்பெக்டர் — வரும் காலங்களில் மட்டும், சின்னக்கண்ணுவின் தோளிலே, டவாலியைக் காணலாம். டவாலி போட்டுக்கொள்வது ஒருவித வைதீக காரியம் என்பது சின்னக்கண்ணுவின் எண்ணம் போலும்!

வாத்திமார்களுக்குள் ஏதேனும் சில்லறை மனஸ்தாபங்கள், அபிப்பிராய பேதங்கள் இருக்கலாம். இவை யாவும் சின்னக்கண்ணுவுக்குத் தெரியும். ஆனால் இவைகளைக் கண்டு கொள்ளாதவன் போல், அவரவரிடம் மெச்சத்தக்க இங்கிதத்துடன் நடந்துகொள்ளுவான். ஒரு இடத்துச் சங்கதி இன்னொரு இடத்துக்கு அவன் மூலமாகப் போய், சண்டை மூண்டது என்ற குரலே கிளம்பினதில்லை. மனதில் ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு மூட்டை கிடக்கும். மூட்டைகள் கலப்பதற்கு அவன் விடுவதில்லை.

பள்ளிக்கூடத்திலே, பையன்கள் சாமான்களை வைத்து விட்டு மறந்துபோனால், அவைகளை ஜாக்கிரதையாக எடுத்து வைத்திருப்பான் சின்னக்கண்ணு. திரும்பவும் சாமான் சொந்தக்காரப் பையனிடம் போய்ச் சேருகையில், சின்னக்கண்ணுவுக்கு ஏதேனும் தட்சிணை கிடைக்காமல் இருப்பதில்லை. தாமாகவே பையன்கள் கொடுப்பார்கள். கொடுக்காத சண்டிகளிடமிருந்து சின்னக்கண்ணு வாங்காமல் விடு

வதுமில்லை. இது சின்னக்கண்ணுவின் அபூர்வ சாமர்த்தியம்.

பள்ளிக்கூடப் பணங்கள் யாவும் அவன் கை மூலமாகத்தான் 'பட்டுவாடா' ஆகும். பாங்கிக்குப் போவதோ, பரீட்சைக்காகக் கேள்விக் காகிதம் கொண்டு வருவதோ, பள்ளிக்கூட சம்பந்தமான எல்லாவித அந்தரங்க வேலைகளிலும் சின்னக்கண்ணு கலந்துகொள்ளாமற் போனால் காரியம் நடக்காதோ என்றுகூடத் தோன்றும். சின்னக் கண்ணுவுக்குப் பள்ளிக்கூடத்தில் எவ்வளவு மதிப்பு, எவ்வளவு கிராக்கி இருக்கிறது என்பது இப்பொழுதேனும் தெரிகிறதா?

பள்ளிக்கூடத்தை, தான் ஸ்தாபித்து, அதை நடத்தும் பொறுப்பு தன்னிடம்தான் இருப்பது போல சின்னக் கண்ணு இப்பொழுதும் எண்ணிக்கொண்டிருக்கிறான். மாதக் கூலிக்கு உழைக்கிற ஆள் என்ற அற்ப எண்ணமே, அவன் மனதில் ஒரு நிமிஷமாயினும் உதயமானது கிடையாது. பள்ளிக்கூடத்துத் தரையை, அவன் அங்குல அங்குலமாய் மிதித்துப் பார்த்திருக்கிறான். எத்தனை தடவைகள்! கணக்கு எடுப்பதற்கு, சர்க்கார் கணக்குப் பரிசோதகரால்தான் முடியும்.

தன்னுடையது பென்ஷன் இல்லாத சேவகமாயிற்றே, சுமார் நாற்பது வருஷங்களுக்கு அதிகமாக வேலை பார்த்துக் கையில் ஒன்றும் மிச்சப்படாதபடிக்கு, பள்ளிக்கூடத்தில் சம்பளம் கொடுக்கிறார்களே என்று அவன் நொந்துகொண்டதை நான் பார்த்ததில்லை. யாரிடமும் அவன் இதைப் பற்றி முணுமுணுத்துப் பேசினதாகவும் தெரியவில்லை. பள்ளிகளை

ஸ்தாபித்த பச்சையப்ப முதலியாரைப் போல, பள்ளிக்கூடம் செழிப்பாக நடந்து பையன்கள் நல்ல ஸ்திதிக்கு வந்தால் போதும் என்ற நல்லெண்ண மொன்றே, சின்னக்கண்ணுவின் அழியாத சொத்து. இப்பேர்ப்பட்ட அருமையான சின்னக் கண்ணுவைப் பற்றி, நான் எழுதாமலிருக்க முடியுமா?

# தாஸி கோகிலாம்பாள்

**வை**ஷ்ணவ பக்தர் ஒருவர். தமது பக்திப் பரவசத்தை, பாட்டில் இசைக்கையில், 'திருவேங்கடமுடையான் திருப்பதி மலையிலே நான் மீனுகப் பிறந்தேனு, அவரது திருக்கோயிலிலே தூணுகத்தான் பிறந்தேனு, அதுவாகப் பிறந்தேனு, இதுவாகப் பிறந்தேனு?' என்று தமது ஆருத துயரத்தைத் தெரிவித்துக்கொண்டிருக்கிறார். இது பண்டைக் காலத்து பக்தர்களின் பித்து.

சீரும் சிறப்பும் அழிந்து, வாழ்க்கையில் பிடிப்பும் லட்சியமும் இல்லாமல் தவிக்கும் நம் நாட்டு இளைஞர்கள், மேற்சொன்ன ஆழ்வாரைப் போல, 'நான்தான் கோகிலாம்பாள் வீட்டில் அதுவாகப் பிறந்தேனு, இதுவாகத்தான் பிறந்தேனு? அவள் முகத்தைப் பார்க்கும் கண்ணுடியாகத்தான் பிறந்தேனு?' என்று பிரலாபித்துக்கொண்டால், அது தவறு என்ரு உங்களுக்குத் தோன்றுகிறது? ஆழ்வாரின் பக்தி ஆண்டவனிடம் பக்தி; அந்தரப் பிழைப்புப் பிழைக்கும் இளைஞர்களுக்கு 'அம்மனிடம்' பக்தி!

'இப்படியும் ஒரு பக்திப் பரவசம் உண்டா?' என்று வார்த்தைகளால், நம்மில் சிலர் ஆட்சேபிக்கலாம். அந்த ஆட்சேபம் வெறும் வார்த்தைகள்தான். 'கோகிலாம்பாளின் பெயரை ஜபித்துக்கொண்டிருந்தாலும் போதுமே! அஷ்ட ஐச்வரியங்களும் சித்திக்குமே!' என்று அசைக்க முடியாத தீர்மானத்தை முகத்தில் காண்பிக்கும் ஆண் பிள்ளைகளைப் பார்த்தால், தாஸி கோகிலாம்பாள் எவ்வளவு பெரிய சக்தி என்று உங்களுக்கு யாரும் சொல்லாமலே தெரிந்துபோகும்.

'ஏண்டா, குப்பா, நீ கோகிலாம்பாளைப் பார்த்ததில்லையா? அட பாவி! உன் ஜன்மம் வீண் அப்பா, வீண். நீ பாக்கிய மில்லாதவன். போடா, போ! பார்வதியின், லட்சுமியின் அழகை கோகிலாம்பாளின் தலைமயிர்க் காம்பில்கூடக் கட்டி அடிக்க முடியாது. தலை முடிச்சை அவிழ்த்து விட்டால் தரையிலா வந்து விழும்! அவள் முடிச்சுப் போட்டுக் கொள்ளுகிற நாஸூக்கு என்ன? அவள் தலையை ஆற்றுகிற சொகுசு என்ன! ஊ, ஊப், அப்பாடா! என் நாக்கிலே ஜலம் ஊறுகிறது. சொல்ல முடியாது!' என்று சாம்பன் வர்ணிப்பதை நீங்கள் ஒளிந்துகொண்டுகூடக் கேட்டதில்லையா? உங்கள் ஜன்மம் வீண், வீண்.

சாம்பன் சொல்லுவதில் தவறு இல்லை. கோகிலாம்பாளைப் பார்த்தவர்கள் கல்லாகச் சமைந்து போகாவிட்டாலும், இருந்த இடத்திலேயே, சிறிது நேரம் ஸ்தம்பித்துப் போய் விடுவார்கள். 'ஏ பிரம்மா, நீதான் சிருஷ்டி செய்தாயோ?' என்று புகழும்படியான கவிதை யுணர்ச்சி பாமரர்களுக்குக் கூட வந்துவிடும். 'பிறர் சொல்வது உண்மையானால்,

என்னுடைய ஒப்பற்ற அழகை, தாலி கட்டின ஒருவன் அனுபவிப்பதைக் காட்டிலும் பலரும் அனுபவிப்பது யுக்தமல்லவா?'' என்று கோகிலாம்பாள் தத்துவம் பேசினால், உங்கள் காதுகளைப் பொத்திக்கொள்வீர்களா? அல்லது அவளது வாக்குச் சாதுர்யத்தைக் கண்டு நாம் வாயடைத்துப் போவோமா?

கோகிலாம்பாளின் அழகை வர்ணிப்பதற்கு ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனாலும் முடியாது என்று சாம்பன் சொல்லுகிறான். நான் கோகிலத்தை அவ்வளவாகப் பார்த்ததில்லை. ஆதிசேஷனையோ, 'வள்ளிசாக'ப் பார்த்தது கிடையாது. சாம்பனோ, இரண்டு பேர்வழிகளையும் நன்றாகப் பார்த்தவன் போல அதட்டி, உருட்டி, கெட்டியாகப் பேசுகிறான். அவன் கோகிலத்தைப் பற்றிப் பேசும்பொழுது மெய்மறந்து போய்விடுகிறான். அவன் கண்கள் எங்கேயோ மேகமண்டலத்தில் மறைகிறாப் போல, சொருகிப் போய் விடுகின்றன. கோகில வர்ணனை விஷயத்தில் அவன்தான் பிரமாணம். அவன் சொல்லுவதைக் கேட்போம்.

சாம்பன் சொல்லுகிறான்: 'மாயையாகிய இந்த உலகத்தில் கோகிலம்தான் உண்மை. நம்மை மெய்மறந்து போகச் செய்வது உண்மை யொன்றே. உண்மையைப் போல கோகிலம் நம்மைப் பரவசமாக்கிவிடுகிறாள். அவள் கூந்தலழகும், குரலினிமையும், நடையசைப்பும், மேனி மினுக்கலும், கண் கவர்ச்சியும், வாக்குச் சாதுரியமும், குழைவுச் சிரிப்பும், சவுக்கச் சங்கீதமும், கொஞ்சிப் பேசிப் பிறரை ரஞ்சிதப்படுத்துவதும், கன்னத்தில் இடித்துக் "கொண்டான்" அடிப்பதும், "மாட்டேன், மாட்டேன், விடமாட்

டேன்!" என்று வாய் நிறையச் சொல்லுவதும் — நான் எதை விட்டுவிட்டு எதை வர்ணிப்பது? ஒரு முகூர்த்த காலம் அவளோடு சல்லாபம் செய்வது நூறு வருஷ சொர்க்க போகத்துக்குச் சமானம்!'

'சாம்பா! இவ்வளவு விஸ்தாரணையுடன் நீ கோகிலத்தை வர்ணிப்பதற்கு, குரு தட்சிணை, பாத காணிக்கை, அவளுக்கு எவ்வளவு கொடுத்தாய்? ஆயிரக்கணக்கில்தான் இருக்கும். அதற்குக் குறைந்த ரேட்டில் கொடுத்திருந்தால், இவ்வளவு வர்ணனைப் பயிற்சியும் பக்தி விசுவாசமும் ஏற்பட்டிருக்க முடியாது' என்று அவனிடம் சொன்னால், 'நான் ராஜாவாயிருந்தால் கஜானாச் சாவியையே அவள் கையில் கொடுத்திருப்பேனே! கோகிலத்தைப் பார்த்த பிறகு, பணம் பெரிது, உயிர் பெரிது என்று தோன்றுமா, மாமா?' என்பான். கோகிலத்துக்காக, உயிரையே விடத் துணிந்த தியாகியிடம் என் அசட்டுத் தத்துவம் எடுபடுமா?

இதோடு நிற்கிற பேர்வழியா சாம்பன்? கோகிலத்தின் விஷயத்தில் அவனுடைய ஒரு நாக்கு ஆதிசேஷனுடைய ஆயிரம் நாவாக எப்படியோ மாறிவிடுகிறது. அவன் சொல்லுகிறான்: 'மாமா! வருத்தப்பட்டுக்காதேயுங்கள். சீமைக்குப் போய் பாரிஸ்டருக்குப் படித்துவிட்டு வருகிறார்களே, அவர்களுக்கு கோகிலத்தின் வரும்படி வருமா? கால் கடுக்க நாள் முழுதும் கோர்ட்டில் நின்று பேசுகிறார்களே, கடைசியிலே அவர்களுக்கு விரோதமாகத் தீர்ப்பு. இருந்த இடத்திலிருந்து, கோகிலம் தன் கட்சியை ஸ்தாபித்துக்கொள்கிறாள். அவள் வாயசைப்புக்கு எதிர்க்கட்சி ஏது, ஜட்ஜி

ஏது, ஜூரி ஏது? அவள் வைத்தது தான் சட்டம், சொன்னது தான் தீர்ப்பு.'

சும்மா கிடந்த சாம்பனைத் தூண்டிவிட்டது என் பேரில் பிசகு. அவன் விடுகிற பாட்டைக் காணோம். அவன் சொல்லுகிறான்: 'எம். ஏ. படிக்கிறார்கள்; எம். ஏ., எம். எம். ஏ. படிக்கிறார்கள் (சாம்பனுடைய உற்சாகத்தினால், எம். எம். ஏ. பட்டம் ஒன்றைச் சிருஷ்டி செய்துவிட்டானென்றால், அவன் பேரில் ஆத்திரப்படுவதில் பிரயோஜனமில்லை); அதற்கு அப்பாலும் படிக்கிறார்கள். அவர்களுக்கு ஒரு வார்த்தை நேரே பேசத் தெரிகிறதா? எல்லாரும் சபைக் கோழைகள். கோகிலத்தை எந்தச் சபையிலும் கொண்டுபோய் விட்டுப் பாருங்கள்!' 'நான் கொண்டுபோய் விடவும் வேண்டாம், பார்க்கவும் வேண்டாம்' என்று அவனிடம் சொல்லுவதற்கு எனக்குத் தைரியம் கிடையாது.

'ஆகா!' என்றான் சாம்பன் ஒரு நாள். எங்கேனும் இடி விழுந்துவிட்டதோ என்று எனக்கு பயம். 'ஆகா! என்ன கற்பனை! என்ன மனோதர்ம சஞ்சாரங்கள்' என்று மீண்டும் அவன் உரக்கச் சொன்னான். 'என்ன?' என்று நான் கேட்கவேண்டுமென்பது அவன் ஆசை. கேட்டாலொழிய அவன் விடப்போவதில்லை என்பதைத் தெரிந்து, 'என்ன?' என்றேன். அவன் சொல்லுகிறான்: 'மாமா! கேளுங்கள். "கிருஷ்ணன் இருக்கிறானே, நவநீத சோரன், கோபிகா லோலன், அவன் எங்கள் இஷ்ட தெய்வம். அவன் நித்திய பிரம்மசாரி; நாங்கள் நித்திய கல்யாணி" என்று கோகிலம் சொல்லுகிறாள். என்ன கற்பனை! எவ்வளவு வெங்கியார்த்தம் (மறை பொருள்)!' 'அசடே!' என்று

மனதில் நினைத்துக்கொண்டேன். வெளியே, வாய்விட்டுச் சொல்லவில்லை.

கோகிலாம்பாளைப் பற்றிச் சாம்பன் என்னிடம் பேசும் பொழுது, என்னை அவன், 'மாமா!' என்று அழைப்பது எனக்குப் பிடித்தமில்லைதான். அவனை நான் என்ன செய்ய முடியும்? 'கூப்பிடாதே' என்றால், நூறுதரம் விடாமல் கூப்பிடுவான். கோகிலத்தினிடம் சிட்சை சொல்லிக் கொண்டவனல்லவா அவன்? 'மாமா என்று மரியாதை யாய்ப் பேசினதை, கோகிலத்தைப் போலச் சிலேடையாக, நீங்களும் அர்த்தம் பண்ணிப் பேசுகிறீர்களே!' என்று அவன் வாயுருட்டல் செய்வான். அது மட்டுமா சொல்லு வான்? 'சிலேடை செய்வதில் முத்தய்யா பாகவதர் "பல்" பேர்வழி. ஆனால் அவர் "பாச்சா" கோகிலத்தினிடம் பலிக்காது' என்று அவன் நிச்சயமாய்ச் சொல்லவும் கூடும். நான் அசட்டுத்தனமாகச் சாம்பனிடம் ஒன்று சொல்ல, அதனால் முத்தய்யா பாகவதருக்கு அவமானம் வரும்படி யாக, அவனைப் பேசத் தூண்டுவது அழகாகுமா?

'கோகிலமா! மோசக்காரியப்பா! அந்தக் கூட்டமே பொல்லாத கூட்டமப்பா! தருமம் பேசுவார்கள்; தத்துவம் பேசுவார்கள். ஆசாரம் பேசுவார்கள்; ஆண்டவன் என் பார்கள். வந்த சீமானிடம், "உனது அடைக்கலம்" என் பார்கள். வருகிறவன் கையில் காசு இல்லாமல் போனால், கதவை அடைத்துவிட்டு, உள்ளே பேசாமல் சிரித்துக் கொண்டிருப்பார்கள். குலம் கோத்திரம் பேசுவார்கள். எல்லாம் வந்தவனை சூத்திரக் கயிறு போட்டு மடக்குவ தற்காக. "தயையிருந்தால் போதும்" என்று சொல்லி,

"தங்க ஒட்டியாணம் வயிரம் வைத்து இழைத்ததாக வாங்கித் தந்தால் போதும்" என்பார்கள். பணம்தான் அவர்களுக்குக் குறி. வந்தவர்கள் பிணமாகி வருவதைப் பற்றி அவர்களுக்குக் கவலையில்லை' என்று ஒருவன் சொன்னதற்கு, 'காசு இல்லாத கபோதியின் பேச்சு!' என்றான் சாம்பன்.

சித்திரம் — 27

# ஹோட்டல் மணி

சில வார்த்தைகளில் எல்லாருக்கும் மோகம்; சில வார்த்தைகளில் சிலருக்கு மோகம். மணி என்கிற வார்த்தையில் எல்லோருக்குமே மோகம், மோகத்துக்குக் கண்ணும், கதையும், காரணமும் கிடையாது. ஆனால் ஹோட்டல் மணிக்குக் கண்ணும், கதையும், காரணமும் உண்டு அவைகளை விஸ்தரிப்பதுதான் இந்தச் சித்திரத்தின் வேலை.

ஹோட்டல் மணி ரொம்பத் துடியான பையன். இந்த 'மணி'களுக்கோ, வயதாவது, பிறர் கண்ணில் படுவதில்லை. அறுபது வயதானாலும் பெற்றோர்களுக்கு பிள்ளை குழந்தைதானே? செல்லப் பெயர்கள் கொஞ்சுமே யொழிய, கிழப் பருவம் அடைவதில்லை. மார்க்கண்டனுக்கு எப்பொழுதும் 'எண்ணும் பதினாறு' என்பது, என்றும் பதினாறு' என்பதற்குக் கிராமத்துப் பேச்சு.

ஒவ்வொரு ஹோட்டலுக்கும் 'செல்ல மணி' ஒரு அங்கம். 'மணியும் மலையாளமும்' என்று சேர்த்துச் சொல்லியிருக்க வேண்டும். மலையாளம், நாட்டைக் குறிக்காமல், ஆளை எப்படிக் குறிப்பிடும் என்ற சந்தேகத்தை,

ஹோட்டலுக்குப் போய்த்தான் தீர்த்துக்கொள்ள முடியும். ஆனால் மணி, மலையாள இனத்தைச் சேர்ந்தவனல்லன். அவன் உயிருள்ள பேர்வழி.

ஒவ்வொரு காலத்திலே, ஜன சமூகத்தின் உயிர் ஒரு வழியாக வழிந்து ஓடிக்கொண்டிருக்கும். இந்தக் காலத்தில் அந்த உயிர் ஹோட்டல் வழியாக வழிந்துகொண்டிருக்கிறது. ஹோட்டல் மணி, அந்த உயிரின் ஜீவநாடி. நாடி பிடித்துப் பார்த்து, தேக ஆரோக்கியத்தைக் கணிப்பதுபோல, மணியை நாடி பிடித்துப் பார்த்துத் தெரிந்துகொண்டால், ஹோட்டலைப் பற்றிப் பூராவாகத் தெரிந்துகொள்ளலாம்.

என்னோடு ஏன் வீண் வாதம் செய்துகொண்டிருக்கிறீர்கள்? ஹோட்டல் வாசலில் நின்றுகொண்டு கூச்சல் போடுவது உசிதமல்ல, நாகரிகமாகாது. ஹோட்டலுக்குள்ளே அதோ ஜோராகப் பரிமாறுகிறானே அவன்தான் மணி. இன்னும் சந்தேகம் தீரவில்லையா? அப்படியானால் உள்ளே சென்று அவனைப் பூராவும் பார்ப்போம்.

மணி ராஜபார்ட்டுக்கு லாயக்கில்லையா? அவனை நன்றாகக் கவனித்துப் பாருங்கள். என்ன, 'பேசமாட்டேன்' என்கிறீர்களே! நான் சொன்னது உண்மைதான் என்று இப்பொழுதாவது படுகிறதா? 'அப்பொழுதே சொன்னேனே' என்று சொல்ல, நான் தயாராக இருக்கவில்லை. அந்தத் தொண்டை வேறு யாராவது செய்யட்டும்.

மணியின் பிறப்பு வளர்ப்பைப் பற்றிப் பேசுவானேன்? சீதையைப் போல, மண்ணில் அகப்படவில்லை. பிரம்மாவைப் போல, நாபியில் (தொப்புளில்) பிறக்கவில்லை. கவிதையைப் போல, ஆவேசத்தில் ஜனனம் எடுக்கவில்லை. 'தாயைக்

கூடல் விளக்கம் செய்ய' அவதரித்த தாமோதரன் இனத்திலும் அவன் சேர்ந்தவனல்லன். மணி சிறு பிராயத்துக் கலியாணத்தினுல் ஏற்பட்ட முதல் பயிர், முதல் விளைவு.

முந்திப் பிறந்தவர்களுக்கு, பெரும்பான்மையில் ஆபத்து. திலகர் முன்னுடி பிறந்து, சிறைக்குச் சென்று சென்று உயிர் நீத்தார். பின்னுல் வருகிறவர்களுக்கு அவ்வளவு கஷ்டமிருக்குமா? தகப்பனுக்குப் பின், மூத்த பிள்ளை, குடும்பச் சுமையைத் தூக்கித்தானே ஆகவேண்டும்? வழிகாட்டிகள் தான் வழியில் நேரும் விபத்துக்களுக்குப் பொறுப்பாளிகள்.

இந்தப் பொறுப்பு தானுக மணிக்கு வந்துவிட்டது இயல்பு. பால் மணம் வீசுவது நிற்கு முன்னமே அவனுக்குப் படிப்பு மணம் நின்றுபோய்விட்டது. இந்தக் குறை பெரும்பான்மையோருக்கு உண்டு என்று சொல்லலாம். குறையை ஒப்புக்கொண்டால் போதும்; நிவர்த்திக்கு அவரவர் வழி தேடிக்கொள்ளுவார்கள்.

மணிக்கு பத்து வயதிலேயே தரித்திர தரிசனம் ஏற்பட்டுவிட்டது. ஆனுல் அதைக் கும்பிட மனம் கொள்ளவில்லை. கும்பிட்டால் கூண்டோடு கைலாசம் எல்லோரும் போகவேண்டியதுதான். பிறப்புக்கும் மரணத்துக்கும் நடுவே வாழ்வு இருப்பதாக வெகு பேர்கள் கண்ணில் படுவதில்லை. கட்டின பசுப் போல இருப்பதுதான் பெரும்பான்மையோரின் தொழில். இந்த இனத்தைச் சேர, மணி சிறிதும் விருப்பம் கொள்ளவில்லை.

வேலைக்கு அலைந்தான். ஆனுல் ஓயவில்லை. சின்னப் பிள்ளைகள் தவிப்பதைப் பார்த்து இரங்குவது பண்டைக்

கால வழக்கம். அவர்களைச் சாறு பிழிந்து வேலை வாங்கு வது இக்காலத்து நாகரிகம். ஆனால் இதற்குச் சிறிதும் பயப்பட்டவனன்று மணி. கஞ்சி தானாக வராது என்று அவனுக்குத் தெரியும். கஞ்சிக்கு உழைப்பது கருமம் என்று முடித்துக்கொண்டான்.

ஹோட்டல்தான் தனது வாழ்வுக்கு நுழை வழி, முதல் வழி என்று தீர்மானம் செய்துகொண்டு, ஹோட்டல் முத லாளியின் சன்னிதானத்தில் போய் நின்றான். 'சின்னப் பையன்' என்றார் முதலாளி. 'வேலை கொடுத்துப் பாருங் கள்' என்று பரிதாபக் குரலில் பேசினான் மணி. நேருக்கு நேராய் நின்று இப்படிச் சொன்னால், யாருக்குமே இரக்கம் ஏற்படுவது இயல்புதானே? முதலாளியின் இரக்கத்துக்குக் காரணம் மணியின் உருவம்கூட.

எதிலும் ஒட்டிக்கொள்வதுதான் சிரமம். ஒட்டிக் கொண்ட பின், மணி அஷ்டாவதானம் செய்யமாட்டானா? பம்பரம்போல் வேலை செய்யும் மணியைக் கண்டால், முதலாளி முதல் எல்லோருக்குமே அவனிடம் பிரியம் ஏற்படுவது இயற்கை. வந்தவர்கள் யாவரும் மணி பரிமாறுகிற இடத் தையே நாடினார்கள். மணிக்கு ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம்.

மணியின் சாமர்த்தியத்தைக் கண்டவர்கள் 'எண் ணெய்க்கு' எள் என்று சொன்னால் போதும் என்று தீர்மானம் செய்துகொள்ளுவார்களானால், அதில் ஆச்சரியமே யில்லை. மணியின் கற்பனைக்கும் இயற்கை அறிவுக்கும் எல்லை போட முடியாது என்பது ஹோட்டல் பிரசித்தமாகி, ஊர்ப் பிரசித்தமாகிவிட்டது.

மணி பரிமாறும்பொழுது, அவன் வாய்க்குள்ளாகவே பாடி, தன்னையும் பிறரையும் ரஞ்சிதப்படுத்தும் அற்புதத்தை, நேரிலேதான் கண்டு அனுபவிக்க முடியும். ஹோட்டலி லுள்ள தின்பண்டங்களை, பிரஸ்தாபம் போட்டு, பாட்டைப் போலப் பாடும் வித்தையை அவன் எங்குதான் கற்றானோ? தப்பிதம்! கற்றுக் கொடுக்கப் பள்ளிக்கூடமேது?

உழைத்து உழைத்து, அவன் உருவம் நன்றாக அமைந்துவிட்டதாயினும், அவன் உள்ளம் தேய்ந்து கொண்டே வந்தது. கற்பனைக்கு இடமில்லாத வேலையில், ஒருவருக்குமே மனம் நீடித்து நிலைத்து நிற்காது. வாத்தியார் கையால் பிரம்படி படவில்லை என்றால், மணியின் கற்பனை செத்து மடிந்து போகுமா?

மணிக்கு சினிமாவிலும் நாடகத்திலும் ஆசை. இதிலே தான் அவனுக்கும் அவன் முதலாளிக்கும் தகராறு. 'முத லாளியின் வேலைக்கும் சினிமாவுக்கும் என்ன சம்பந்தம்?' என்பது மணியின் கேள்வி. 'இந்தக் கேள்வியை மனத்தில் கொள்வதற்கு மணிக்கு என்ன பாத்தியம்?' என்பது முத லாளியின் கட்சி. மணியின் கற்பனைக்கும் ஹோட்டல் வாழ் வுக்கும் வெகுதூரம் என்று நாம் சொல்லுவதிலே என்ன பிரயோஜனம்? சொன்னால், மணியின் வயிறு வாடி வதங்கிப் போகும்.

மணிக்கு பாரதியார் பாட்டு முதல் தெம்மாங்கு வரை யில் எல்லாம் தெரியும். பாட்டிலும், இலக்கியத்திலும், அர சியலிலும் அவன் பரம ரஸிகன். இவைகளைத் துணையாகக் கொண்டு அவன் எப்படியோ காலந்தள்ளி வருகிறான். காதல் கலியாணத்திலேதான் அவனுக்கு ஆசை. எனவே,

கண்ணில் படுகிற பெண் உருவங்களை, அவன் அப்படியே விழுங்கித் தீர்த்துவிடுகிறான். இதைப் பற்றிக் குற்றமாகப் பேசினாலும், அவன் கோபித்துக்கொள்வதில்லை. ஆனால், அவனை ‘ஹோட்டல்காரப் பையன்’ என்று யாராவது இழிவாகச் சொன்னால், அதுதான் அவன் நெஞ்சில் அம்பு போலப் பாய்ந்துவிடுகிறது.

# வக்கீல் குமாஸ்தா சாமு

வழக்குத் தீர்ப்பதற்கு பஞ்சாயத்து என்பது பழைய காலத்து ஏற்பாடு. முத்திரை ஸ்டாம்பும் கோர்ட்டு களும் ஏற்பட்ட பிறகு, செலவில்லாத பழைய பஞ்சாயத்து காற்ருய்ப் பறந்து போய்விட்டது. முத்திரை ஸ்டாம்பு, கோர்ட்டு இவைகளுடன் ஒட்டிக்கொண்டு பிறந்தவர் வக்கீல். வக்கீல் என்பவர் அர்த்தநாரீசுவரர் (பாதிப் பெண், பாதி ஆண்). வக்கீலின் இன்னெரு பகுதி அவருடைய குமாஸ்தா. இந்தத் திரு அவதார இரட்டையில் யார் ஆண் யார் பெண் என்று சொல்ல முடியாது.

குமாஸ்தாவை எழுத்து (வேலை)க் கூலிக்காரன் என்று சொல்லலாம். ஆனுல் வக்கீல் குமாஸ்தா மேற்கூறிய மட்ட ரகத்தைச் சேர்ந்தவரன்று. இலக்கணப்படி, வக்கீல் குமாஸ்தா என்பது வக்கீலின் குமாஸ்தா, வக்கீலுக்குக் குமாஸ்தா என்று அர்த்தம் தொனிக்குமாயினும், நடவடிக்கையில் வக்கீல் குமாஸ்தா வக்கீலை ஆட்டிவைக்கும் குமாஸ்தா என்ற உண்மையை எல்லோரும் எளிதிலே கண்டுகொள்ளலாம். இதிலிருந்து நடைமுதல் வாழ்வுக்கும் இலக்கணத்துக்கும் சம்பந்தம் இல்லை என்று கொள்வது தவருகும்!

நாகரிகம் என்பதற்கு, சாதாரணப் பேச்சிலே, டம்பம், செலவு என்று அர்த்தம் கொடுக்கலாம். ஒரு வகையில் பார்த்தால், வக்கீலும் அவரது குமாஸ்தாவும் வாழ்வுக்குத் தேவையில்லாத டம்ப அம்சங்கள். வாழ்க்கையின் செலவு இனங்கள் இவர்கள் என்று பொருளாதார நிபுணர்கள் சொல்லுவார்கள். இந்த உண்மையை எடுத்துக் காட்ட நிபுணர்கள் தேவையில்லை. வாழ்க்கையைப் பார்த்தாலே போதும்.

'ஆமை புகுந்த வீடும் அமீனா நுழைந்த வீடும் உருப்பட மாட்டா' என்று சொல்லுவார்கள். அமீனாப் பிரவேசத்துக்கு முந்தின காண்டமோ ஆமை புகுவது என்பதை நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. அதற்குப் போதுமான, ருசுவான சாட்சியங்கள் (கோர்ட்டில் சொல்லுவது போல்) கிடையாது. ஆனால் ஒரு வீட்டில் அமீனா நுழைவதற்கு அஸ்திவாரக் காரணமாயிருப்பவர் நிகரற்ற வக்கீல் குமாஸ்தா. குமாஸ்தா அடி வைத்த கெட்டி மச்சுக் கட்டிடமும் வெடித்து, விட்டுப் போகும்.

எந்தக் காரியத்துக்கும் காரணமுண்டு. அந்தக் காரணத்துக்கும் ஒரு காரணமுண்டு. இப்படிச் சொல்லிக்கொண்டே போனால் வரம்பு அகப்படாது. எனவே, இரண்டொரு படிகளில் நிறுத்திக்கொள்ளலாம். எந்த அவஸ்தை (நிலைமை)க்கும் அதற்கு முன், ஒரு அவஸ்தை (நிலைமை) உண்டு. குமாஸ்தா - அவஸ்தைக்கு முன் சாமுவின் பூர்வோத்திரம் தெரியவேண்டாமா?

கண்ணியமாக வாழ்ந்து வந்த குடும்பத்தில் நான்காவது குழந்தையாக சாமு பிறந்தார். அவர் தகப்பனார் நமது

முதல் மூன்று குழந்தைகளின் படிப்பு சம்பந்தமாகப் பணச் செலவு செய்து, பயனைக் காணமற் போகவே, நான்காவது குழந்தை சாமு விஷயத்தில் அலுத்துப் போனர். மூன்று குழந்தைகளின் அபிவிருத்திக்காக அரும்பாடு பட்ட தகப்பனர், மனிதன் முயற்சியை நொந்துகொண்டு, 'மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்' என்று திடீரென்று ஈசுவர பக்தி அடைந்து, சாமுவைத் தண்ணீர் தெளித்து விட்டு விட்டார்.

மனுவும் தாவாவும் போராட்டமும் செய்யாமல், இள வயதிலேயே பூரண சுயராஜ்யம் பெற்ற சாமு, காசில்லாத மைனராகச் சில காலம் விளங்கினர். காசில்லாத மைனர் என்றால் பணக்கார மைனருக்கு லோடா (கையாள்) என்று அர்த்தம். கிரகங்களில் சூரியனுக்குப் பக்கத்திலேதான் புதன் இருக்குமாம். அது போலவே, சாமு, இளம் பிராயத்திலே, பெரிய மைனர்-சூரியர்களின் பக்கத்திலேதான் எப்பொழுதும் இருப்பார்.

லோட்டாக்களுக்கே, அபூர்வமான தனிச் சக்தி உண்டு. எஜமான் - மைனர் சொன்னதற்கெல்லாம் 'ஆமாம், கேடீ' போடுவதில் அவர்கள் இணையற்றவர்கள். பெரிய மைனர், 'இன்றைக்குச் சூரியன் மேற்கே உதித்தால்' என்று சொல்லத் துவக்கினல், 'வாழ்வுக்கு விநோதம் தேவை. மாறுதலினலேதான் விநோதம் உண்டாகும்' என்று நயமாகவும் வேகமாகவும் சாமு முடித்துவிடுவார். இந்த நயமான பதிலுக்குச் சம்மானம் என்ன? அன்றைக்கு, சாமுவுக்குப் பரிபூர்ண சுகவாழ்வு சித்தித்துவிட்டது. இந்தச் சம்மானம் போதாதா?

எந்தக் காட்டிலும் எப்பொழுதுமே விடாமல் மழை பெய்துகொண்டிருக்க முடியாது. மழையில்லாமற் போய், காடு வரண்டு, தீப்பிடித்து எரிந்துபோகும் காலமும் உண்டு.

மைனர்களாகிய கருமேகங்கள் நீர் சுரந்து நிற்குமளவும் சாமுவின் காட்டிலே மழை பெய்யும். கருமேகங்களே வரண்டு போய்விட்டால்? அப்பொழுதுதான் சாமுவுக்கு யோசிக்கும் வேலை ஏற்பட்டது. கஷ்டப்படத் தேவையில்லாத வேலை வக்கீல் குமாஸ்தா வேலை என்ற முடிவுக்குச் சீக்கிரத்தில் வந்துவிட்டார்.

சாமர்த்தியசாலிகளுக்கு, சங்கற்பம் இருந்தால் போதும். சாமு உடனே வக்கீல் குமாஸ்தா ஆனார். கை சாமர்த்தியத்தில் (எழுத்து வேலையில்) பழக்கமில்லாத சாமு, வாய் சாமர்த்தியத்தைக் கொண்டுதான் பிழைக்கவேண்டும் என்று தீர்மானம் கொண்டார். எழுத்து வேலை நேர்ந்தால் அதை அவர் மழுப்பும் வகை விநோதமாயிருக்கும். ஏதோ ஒரு முதலாளி வீட்டுக்கு அவசியமாகப் போகவேண்டுமென்று சொல்லி, பக்கத்து குமாஸ்தாவின் தலையில் எழுத்து வேலையைக் கட்டிவிட்டு, 'மாடி' ஹோட்டலில், இனம் காப்பியைச் சாப்பிட்டுவிட்டு, உல்லாசமாகத் திரும்புவார் சாமு.

எவனுக்கு 'எஜமான்' போட்டாலும், அந்த ஆசாமிக்கு அளவில்லாத திருப்தி. மனிதர்களுடைய இந்த அசட்டுத்தனம் சாமுவுக்கு நன்றாகத் தெரியும். வக்கீல் முதல் வண்ணான் உடுப்பு - வெள்ளை வேட்டிப் - பண்டாரங்கள் வரையிலும் எல்லோருக்கும் கிரேடு வாரியாக, குரல் கிரமத்துடனும், மனோபாவ வரிசையுடனும், சாமு, 'எஜமான்'

போட்டுத் தீர்த்துவிடுவார். முதல் தட்டிலேயே, அவருக்கு ஜயம் கிடைப்பதில் என்ன சந்தேகமிருக்கிறது?

சாமுவுக்கு இரகசியமில்லாத பேர்வழியே கிடையாது. பிறர் காதின் கிட்ட வாயை வைத்துப் பேசினால், மனிதர்கள் மல்லாந்து போவார்கள் என்ற பரம ரகசியத்தை சாமு எங்கு கற்றுக்கொண்டாரோ தெரியாது. ஆனால் அந்த வித்தையைப் பிரயோகம் செய்து, அதற்கு நல்ல பயனைப் பார்த்த பின்னர், அந்த வித்தையை அவர் கைவிட்டு விடுவாரா? ரகசியத்தை விண்டு பார்த்தால், 'எள்ளுக்குள் எண்ணெய் இருக்கிற' சங்கதியாக முடியும். ஆனால் இதைப் பதமாகச் சொல்லுகிற சாமர்த்தியம் சாமுவைச் சேர்ந்ததாகும்.

கட்சிக்காரர்கள் கொண்டுவரும் எந்தக் கேசும் தோற்காது என்று அபயப்பிரதானம் கொடுப்பதில், சாமு அவர்களுக்கு 'எஜமான்' வக்கீல்கூட ஈடு இல்லை. 'ஒரு கோர்ட்டுக்குப் பிறகு அடுத்த கோர்ட்டு, எல்லா கோர்ட்டிலும் தோற்றாலும் ராஜி. அதுவும் முடியாமற் போனால், அந்தப் பயல் பேரில் (எதிரியின் பேரில்) கிரிமினல் வழக்குப் போட்டு, அவன் தந்தி நரம்பைப் பிய்த்து எறிந்துவிடுகிறது. அந்தப் பயல் கேஸ் ஜயித்து, உயிரோடு போய்விடுவானா?' என்று சாமு வீரப் பிரசங்கம் செய்யும்பொழுது எந்தக் கட்சிக்காரனுக்கு ஆவேசமும் உற்சாகமும் உண்டாகமாட்டா?

தீனி போட்டு மாட்டைக் கறக்கிறவர்கள் பால் விற்று ஜீவனம் செய்யும் உழைப்பாளிகள், அல்லது கண்ணியமாக வாழும் குடும்பஸ்தர்கள். ஆனால் வக்கீல் குமாஸ்தாக்களோ

ரொம்ப சாமர்த்தியசாலிகள். அவர்கள் கட்சிக்காரர்களின் பணத்தை அனாயாசமாய்க் கறக்கக்கூடிய திறமை வாய்ந்தவர்கள். இவர்கள் கட்சிக்காரர்களுக்குத் தூண்டிக் கொடுக்கும் ஆகாரம் ஒன்றே ஒன்று. கட்சிக்காரனுக்கு ஆச்சரியமும் அகங்காரமும் கலந்த மாச்சரியத் தன்மையை ஒன்றுக்கு நூறாகக் கிளப்பும் பேச்சுத்தான் இவர்கள் கொடுக்கும் ஆகாரம். இந்த வளர்ப்புக்கு, சாமு 'கார்டியன், போஷகன்' என்று சொல்லவும் வேண்டுமா ?

முடைப்பட்டால், கட்சிக்காரனுக்கும் வக்கீலுக்குமாகச் சேர்த்து, கடன் வாங்கிக் கொடுக்க வழி தேடுவதில் சாமு கைதேர்ந்தவர். மைனர்களின் பழக்கக் காலத்தில் சாமுவுக்கு எத்தனையோ லேவாதேவிக்காரர்கள் தெரியும். தமது சுருக்குப் பையிலிருந்து, ஒரு லேவாதேவிக்காரரை ஒரு சமயம் பொத்தென்று முடைப்பட்டவர்களின் எதிரே கொண்டு வந்து போட்டால், காரியம் பூரணமாய் நிறைவேறிவிடாதா? கடன்கார வக்கீலும் கட்சிக்காரனும் சாமுவின் தயவு இல்லாமல், அப்புறம் பிழைக்க முடியுமா ?

சலவை வேஷ்டி, ஸில்க் ஷர்ட், நயமான அங்கவஸ்திரம், வாய் நயம், கைக்கெட்டி, வெற்றிலை பாக்குப் பெட்டி (வாசனைப் புகையிலை சகிதமாக), ஆளைத் தட்டுகிற சாதுப் பார்வை, அகப்பட்டுக்கொண்டால் பாதாளத்தில் அழுத்தி விடுகிற ஆழ்ந்த யோசனை, வாய் கூசாமல் எந்த ஸ்திரீயையும் 'அம்மா' என்று அழைக்கிற விதரணை, கண்டவர்க்கெல்லாம் ஸலாமும் கும்பிடும், அரைகுறை இங்கிலீஷ் வார்த்தையழகு — இவையெல்லாம் சாமுவின் தொழிலுக்குப் போதாதா ?

# வண்ணார நாகப்பன்

ஸாட்சாத் பரமசிவன் ரிஷபவாகனர் என்பது பரம்பரை. கைலாஸத்தைப் போய்ப் பார்த்தவர்கள், திரும்பி வந்து சேதி சொல்லுவார்களானால், பரமசிவன் ரிஷப வாகனர்தானா என்ற உண்மை தெரியும்! அதுவரையிலும் பரம்பரைப் புராணத்தை நம்பலாம், அல்லது அதைப் பற்றிக் கேலி செய்யலாம், இஷ்டப்பட்டவர்கள் இரண்டிலொன் றைச் செய்யலாம். இரண்டும் முடியாது என்றால், நான் சும்மா யிருந்துவிடுகிறேன். மேலே, தாவா உண்டோ?

கைலாஸத்தில் எழுந்தருளியிருக்கும் பரமசிவனைப் பற்றிப் பேசுவது பெரிய பேச்சு. ரிஷபாரூடராகப் பரம சிவன் பக்தர்களுக்குத் தரிசனம் கொடுப்பது மெய்யோ, பொய்யோ, அது எனக்குத் துளிகூடத் தெரியாது. தெரிந்து நான் பாசாங்கு பண்ணுவதாக எண்ணி, வீணாக என்னைத் தொந்தரை செய்யவேண்டாம். பெரிய புராணங் கூட, நான் செவ்வையாகப் படித்ததில்லை.

ரிஷபாரூடராக, ஆற்றங்கரைக்குப் பவனிவந்து காட்சி யளிக்கும் ஒருவரை எனக்குத் தெரியும். அவர்தான்

வண்ணார நாகப்பன். நாகப்பனை 'அவர்', 'இவர்', 'போகிறார்', 'வருகிறார்', 'வேலை செய்கிறார்' என்று நான் மரியாதையாகப் பேசுவது, கிராமத்து மிராசுதார்களுக்கும் பட்டணத்து மோட்டார் மனிதர்களுக்கும் பிடிக்காமலிருக்கலாம். மேற்சொன்ன இரண்டு திருக்கூட்டத்தையும் நான் சேர்ந்தவனன்று. நாகப்பனைப் போல நானும் ஒரு தொழிலாளி. கூட்டத்துக்குள்ளே, ஒரு கூட்டத்தான். 'குடலை வழிப்பது' நியாயமன்று.

நான் சமூக ஊழல்களின் அழுக்குகளை வெளுக்கிற வண்ணான். நாகப்பன், சமூகத்தின் அழுக்குத் துணிகளை வெளுக்கிற வண்ணான். நடையுடை பாவனைகளில் படியும் அழுக்குகளைப் போக்கும் சங்கரனுடைய (சம்ஹரிப்பவனுடைய) குலம் எங்களுடையது. எங்கள் பிதிரார்ஜித சொத்திலே, நாகப்பன் ரிஷபத்தைப் பங்காக எடுத்துக்கொண்டார். நான் எதை எடுத்துக்கொண்டேன் என்று விரைவில் நினைவு வரவில்லை. கொஞ்சம் யோசித்துச் சொல்லுகிறேன்.

நாங்கள் பிரிந்து தனிக் குடித்தனம் செய்யுமுன்னர், நாங்கள் மூட்டை தூக்கிகளாயிருந்தோம். எத்தனை காலம், எங்கள் மூட்டைகளை நாங்களே சுமந்து செல்லுகிறது! நாகப்பனுடைய மூட்டைகளைத் தூக்க, 'தொழ தொழ' எருது அகப்பட்டது. எனக்கு? இப்பொழுதுதான் ஞாபகம் வந்திருக்கிறது. வந்த ஞாபகம் நெஞ்சிலே இருக்கிறது. அப்பா! நெஞ்சிலே மாட்டிக்கொண்ட ஞாபகத்தை, எப்படியோ வாயிலெடுத்துவிட்டேன். எனக்கு, எனக்கு......அகப்பட்டது 'தோஞ்சல்' பத்திரிகை.

'நாகப்பனுடைய எருதுக்கு, இல்லை இல்லை, "கொழு கொழு கன்று"க்கு வைக்கோல் ஏது, அவருக்குத்தான் நிலம் கிடையாதே!' என்பீர்கள். நாங்கள் 'ஊர் தண்டி'ப் பிழைப்பவர்கள் என்ற ரகசியம் உங்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்கும். தெரிந்திருந்தும் தெரியாதது போல இருப்பது மரியாதையல்லவா? ஊரிலே, நாகப்பனுடைய மனைவியும் பெண்ணும் தண்டுகின்ற சோற்றில், ஏராளமாக மிச்சப்பட்டால், 'கொழு கொழு கன்'றின் வயிற்றிலேதான் போய்ச் சேரும். அது போதாததற்கு, 'வண்ணான் துறை'யில் மேய்ச்சலுக்குத் தரை இருக்கிறது.

கிளியை வளர்த்துப் பூனைக்கு இரை கொடுப்பது அதர்மம் என்கிறார்கள். உண்மை. பட்டினியாகக் கிடக்கிற பூனை கிளியை வாரிக்கொண்டு போனால் என்ன செய்கிறது? நாகப்பன் வளர்க்கும் கன்று பலப்பட்டால் போதும், உடனே, அதை ஒரு ஒற்றை மாட்டு வண்டிக்காரன் வாரிக்கொண்டு போய்விடுவான். 'ஐந்துக்கு வாங்கி ஐம்பதுக்கு விற்கிறான் நாகப்பன்' என்று ஊரிலே பொறாமையுடன் பேசிக்கொள்ளுவார்கள். நஷ்டத்துக்கு விற்கிறவர்கள் இவர்கள் என்று தோன்றுகிறது. இவர்களுடைய சாமர்த்தியத்தைப் பற்றி நாம் ஏன் சத்தம்போட்டுப் பேசவேண்டும்?

அம்பட்டன் வீட்டில், ஏதோ ஒன்றுக்குப் பஞ்சமில்லை என்று முரட்டுக் கிராமத்தான், கெட்டியாகப் பேசுவதுண்டு. நாகப்பன் வீட்டில் துணிகளுக்குப் பஞ்சமே கிடையாது. முதல் தடவை சலவை, இரண்டாம் தடவை சலவை— மொத்தம் சலவைக்காக வந்த உருப்படிகளைக் கொண்டு, ஒரு பெரிய ஜவுளிக் கடை வைத்துவிடலாம். நாகப்பன் ரொம்ப

பாக்கியசாலி. பணம் கொடுத்து வாங்காமல், பட்டாடைகளை யும் கட்டி அனுபவிக்கும் தனி பாக்கியம் அவருடையதே!

நாகப்பன் சுயநலக்காரர் அல்லர். வேலைக்காக ஒருவர் துரையைப் பார்க்கப் போகிறாரா? நல்ல உடை யில்லையா? நல்லது. நாகப்பன் இந்த நெருக்கடி காலத்தில் அவருக்கு ஒத்தாசை செய்யாமல் சும்மாயிருப்பாரா? அழுக்கை நீக்கி, சுத்தம் செய்யும் வேலையில் அமர்ந்திருக்கும் நாகப்பன் பரோபகாரி யல்லவா? 'என்ன நாகப்பா, துரையைப் பார்க்கப் போகவேண்டுமே?' என்றால், 'தங்கமாகப் போங்கள்: ராசா மாதிரி திரும்பி வாருங்கள். என்னென்ன உருப்படி வேண் டும்?' என்று நாகப்பன் கேட்பார். பரோபகாரியான நாகப்ப னுக்கு, தான் ஒத்தாசைக்காகக் கொடுக்கும் ஆல்பாக்கா சட்டையும், துயிலி அங்கவஸ்திரமும் யாருடையதா யிருந் தால் என்ன?

துரையைப் பார்க்க உதவாத உருப்படி, நாகப்பனுடைய கைச் சலவைக்கு வந்தாலென்ன வராவிட்டா லென்ன? துரை ஆல்பாக்கா சட்டை யில்லாமல் போனால், பார்க்கமாட்டாரே! ஆல்பாக்கா சட்டைக்குஉடையவரின் கோபத்தைத் தாங்கிவிட லாம். துரையினுடைய கோபத்தை, அப்பாடா, யார் தாங்கு கிறது? 'பிறத்தியாருடைய உடைகளை வாடகைக்கு விட்டு ஏராளமாகச் சம்பாதிக்கிறான் நாகப்பன்' என்று ஊரார் உளறினாலும், அது நாகப்பனுடைய காதில் ஏறாது.

பெண் வீடு பார்க்கப் போகிற மாப்பிள்ளைக்கும் நாகப் பன் ரொம்பவும் உதவுவார். 'ஆயிரம் பொய் சொல்லி, மற்றவர்கள் கலியாணம் செய்துவைக்கையில், நான் என், நல்ல துணி கொடுத்து உதவப்படாதுங்க!' என்று நயமாகக்

தம் கட்சியை எடுத்துச் சொல்லுவார் நாகப்பன். ஊருக்குப் போன மாப்பிள்ளை திரும்பி வர நாள் சென்றால், 'மாப்பிள்ளை வேஷ்டி'க்குச் சொந்தக்காரரின் கண்களிலே, படவே மாட்டார் நாகப்பன். 'கலியாண விசயமுங்க' என்ற உண்மையை, அவர் மறைமுகமாகக்கூடச் சொல்லமாட்டார்.

நாகப்பனுடைய வருகைக்கு, ராஜா முதல் எல்லோரும் காத்திருக்க வேண்டியதுதான். கண்டிப்பாய் இருக்கவே முடியாது. 'தொறைப் பொங்கல் படைக்க நாளாச்சுங்க' என்று நாகப்பன் சொன்னால், அதைக் கண்டித்து யார் பேச முடியும்? துறைப் பொங்கலைப் பற்றி, யாருக்கு என்ன தெரியும்? துறையில் கொலுவீற்றிருக்கும் அம்மனுக்குக் கோபம் வந்துவிட்டால், சலவைக்கு வந்த துணிகள் 'டார் டார்' என்று கிழிந்துவிட்டாலும் விடுமோ, என்னமோ? நாகப்பனைக் கோபித்துக்கொண்டவர்களின் துணி 'முழுசாய்' வீடு வராது என்று ஊரிலே புரளி செய்வார்கள். உண்மை எனக்குத் தெரியாது.

'என்ன நாகப்பா, இவ்வளவு அக்கிரமம் பண்ணுகிறாயே, சலவைக்கு உருப்படி போட்டு எத்தனை நாளாச்சு?' என்று யாரேனும் கேட்டால், 'வெளுக்க, எங்கே தண்ணி அகப்படுதுங்க! ஆலூர்த்தோப்பு கிணத்துக்குப் போயில்லே, வெளுத்துட்டு வாரேன்' என்று பதமாய்ச் சொல்லுவார் நாகப்பன். ஜலம் கண்டுபிடித்துக் கொடுக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டல்லவா, நாகப்பனைக் கண்டிக்கத் துணிய வேண்டும்? சவுக்காரம் போடக்கூட, சக்தியும் மனமும் இல்லாதவர்கள், நாகப்பனைக் கொஞ்சங்கூடக் கண்டிக்கவே முடியாது.

ரொம்பத் துடுக்காக யாரேனும் நாகப்பனைப் பேசிவிட்டால், அந்தச் சங்கர்ப்பத்தையும் சமாளித்துக்கொள்ள, நாகப்பனுக்குத் தொழில் தெளிவு தெரியும். அழுக்கு இருக்கிறபடியே நீலத்தை ஏராளமாகத் துணியில் போட்டு, சலவை செய்துகொண்டு வந்துவிடுவார். அந்த அழுக்கு நீலத் துணியைக் கட்டிக்கொண்டு தெருவிலே, பகலில் போகத் துணிந்தவர்கள் பகல் வேஷக்காரர்களாய்த்தான் இருக்க முடியும்.

நாகப்பன், காய் உருட்டிப் பார்த்து, ஆரூடம் சொல்லுவார். அழுக்கு மூட்டையை, பாதையில் மரத்தடியில் வைத்துவிட்டு, ஆவலுடன் குறி கேட்கும் கிழவர்களிடமும், புருஷன் 'தொலை'க்குப் போன ஸ்திரீகளிடமும், தாமரை மணிகளை உருட்டி உருட்டி, ஒற்றைப் படை, இரட்டைப் படை பார்த்து, ஆவேசத்துடன் நாகப்பன் குறி சொல்லுவதைப் பார்த்திருப்பீர்களானால், நீங்கள்கூட, அவரை 'ஸ்வராஜ்யம் எப்பொழுது வரும்?' என்று கூசாமல் ஜோஸ்யம் கேட்கலாம்.

'வண்ணானுக்குக் கடன் மிஞ்சிவிட்டால், வீட்டில் தீப்பிடித்துக்கொண்டதென்று பொய் சொல்லி, அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு, சவாரி விட்டுவிடுவான்' என்று போலீஸிலே, சிலர் புரளி செய்வதுண்டு. இது உண்மையோ, பொய்யோ, அதை, அது பிறந்த இடத்திலே விசாரித்தால்தான் தெரியும். சொல்லுகிறதைத் திருப்பிச் சொல்லும் 'கோலக் கிளி' இனத்தைச் சேர்ந்தவன் நான். எனக்கு எது உண்மை என்று எப்படித் தெரியும்?

நாகப்பனும் அவரைச் சேர்ந்தவர்களும் மனது வைத்தால், எல்லா 'வீடுகளையும்' அழுக்கு மூட்டைகளாகச் செய்துவிட முடியும். ஆனால் பரோபகாரியான நாகப்பனுக்கு அந்த எண்ணம் ஒருநாளும் வருவதில்லை. 'ரொம்பப் பாவம்' என்று அவர் முணுமுணுப்பார். என்றாலும், 'வண்ணாப் பயல் விறைக்கிறான்' என்று கிராமத்து மூடர்கள் பகட்டமாய்ப் பேசுகிறார்கள் என்று நாகப்பனுக்கு வருத்தம். பாவ புண்ணியம் தெரிந்தவர் நாகப்பன் என்று ஊரார் ஒப்புக்கொள்ளுவதில்லை.

“எனக்குப் பணம் காசிலே ஆசை என்று சொல்லுகிறாங்க. யாருக்கு ஆசையில்லீங்க? நேரம் பொழுது பாக்காமல், நல்லது பொல்லாது பாக்காமல், வெயில் மழை பாக்காமல், நாங்கள் வேலை செய்கிறோம். கூலிக்கு நடந்து நடந்து, காலுக்கு விளக்கெண்ணெய் துவளை போடவேண்டியிருக்குதுங்க. வண்ணாப் பயல் என்று கண்டவங்க ஏசறாங்க. இது நல்லாயிருக்குதுங்களா?’ என்று நாகப்பன் என்னிடம் குறை சொல்லிக்கொள்ளுவார்.

நாகப்பன் மனத்தில் இருக்கிற கடைசிக் குறையைச் சொல்லாமல் போனால், நாகப்பனுக்கு மனத் திருப்தி உண்டாகாது. நாகப்பன் சொல்லுகிறார்: 'என்னாங்க போக்கிரித்தனம்? பெரியவங்க நையாண்டிக்கு, நாங்கதானா ஆப்பட்டோம்? என்னாங்க, உங்களுக்குக் காது கேக்குதுங்களா? சாத்திரம் பேசுகிறாவளாம், சாத்திரம்! “வண்ணானுக்கு வண்ணாத்தி பேரில் ஆசை; வண்ணாத்திக்கு—!” என்னாங்க அக்கிரமம்! நீங்கள் பத்திரிகையிலே சொல்றவங்க, நாக்கை அறுக்கணுப்பலே, எழுதுங்கள்!’ நானும் எழுதிவிட்டேன். இந்தச் சங்கதி, இதற்குள் நாகப்பன் காதுக்கும் எட்டியிருக்கும்.

## சவுகார் ரெங்கில் தாஸ் சேட்

'நானா? அந்தக் கடைக்குள் அடி எடுத்து வைக்க மாட்டேன்! நாம் உழைக்கிறதை அவன் காலில் கொட்டி அளப்பதற்கா? அவன் வாயால் விலை கேட்கமாட்டான்; அவன் காலால்தான் விலை கேட்பான். அவன் கிட்டவா நான் இந்த நகையைக் கொண்டு போவேன்? அப்பா! நான் மாட்டேன்' என்று ஸ்திரீ தன் புருஷனிடத்தில் சொல்லிக் கொண்டிருக்கிறாளே, அது யாரைப் பற்றித் தெரியுமா? அவர்தான் சவுகார் ரெங்கில் தாஸ்.

இந்தியாவுக்கு ஜம்புத் தீவு என்று ஒரு பெயர் உண்டு. அந்தக் காலத்து பூகோள சாஸ்திரிகளுக்கு இந்தியாவுக்கு வடக்கே இமயமலை இருக்கிறது, கடல் இல்லை என்ற சங்கதி தெரியாதோ என்னமோ? அந்த விஷயத்தைப் பற்றி ஆராயப் புகுந்தால், நமது சவுகார் தாஸ் காத்திருக்கவேண்டி நேரிடும். பெரிய மனிதனைக் காக்க வைக்கலாமா? நாம் எப்பொழுதாவது அவரிடம் காரியமாய்ப் போக நேரிட்டாலும் நேரிடும். அப்பொழுது நாம் ரொம்ப நேரம் காக்க வேண்டி வந்துவிடும்.

இந்த ஜம்புத் தீவின், எந்தப் பாகத்தின், எந்த மூலையின் எந்த முடுக்கிலிருந்து ரெங்கில் தாஸ் அவர்களும், அவருடைய மூதாதைகளும், அவரைச் சேர்ந்தவர்களும் தமிழ் நாட்டுக்கு எப்பொழுது வந்தார்களோ, அந்த வரலாறு எனக்குத் தெரியாது. அவர்கள் வந்தார்கள்; இங்கே வாழ்கிறார்கள். நம்மவர்கள் பண முடையின் நிமித்தம் அவர்களிடம் போகிறார்கள். நான் அவர்களைப் பற்றி எழுதுகிறேன். இந்தச் சங்கதிகள் எனக்குத் தெளிவாய்த் தெரிந்தவை.

சில ஜந்துக்கள் பார்த்தால் தூங்குவது மாதிரி இருக்கும். அது தூக்கமன்று; காரியத்திலே குறி, பார்வை, லட்சியம். பார்வைக்கு, பேதைவிழி மட்டும் தோன்றும். அதே மாதிரி மனிதர்களில் பலர் இருக்கிறார்கள். அவர்கள் பார்த்தால் பசுப் போல இருப்பார்கள். அவர்கள் பாயும் பொழுதுதான் அவர்கள் புலியினத்தைச் சேர்ந்தவர்கள், என்பதைக் கண்டுகொள்ள முடியும். வாடியிருக்கிற கொக்கை, மீன் துக்கம் விசாரிக்கப் போனால் என்ன ஆகும்? அந்தக் கதிதான் இவர்களிடம் மற்றவர்களுக்கு.

தமிழ் பாஷையைச் சித்திரவதை செய்து சாஸ்திரோக்தமாய்க் கொலை செய்யும் அந்நியர்களுக்குத் தமிழ்நாட்டிலே ஒருவித மதிப்புண்டு. தமிழ் பாஷையைக் கொச்சையாக உச்சரிக்கும் அந்நியர்களையும் தமிழர்கள் கொண்டாடுவார்கள். இந்த மரியாதை விருந்தோம்பல் என்ற வகுப்பைச் சேர்ந்ததோ என்னவோ! தரும சாஸ்திரம் தெரிந்தவர்களிடம் இதைக் கேட்டுத் தெளிந்துகொள்ளுங்கள்.

'கேளுங்கள்! அக்கானிகளே! ஏசு கிரீஸ்து — வானவர், பாப - மனிசர்களை ரச்சிக்க' என்று வெள்ளைப் பாதிரி

மார்கள் தமிழையும் உச்சரிப்பையும் கொலை செய்வதுமல்லாமல் நம்மையும் ‘அஞ்ஞானி’ ‘பாவி’ என்று தமிழில் திட்டுகிற விதரணையைப் பார்த்து நம்மவர்கள் மகிழ்ந்து போவதுண்டு. ‘அளகி, டாம் பண்டி வறுடி! (அழகி! டிராம் வண்டி வருடி)’ என்று குடித்துவிட்டு உளறிக்கொண்டு போகும் சிப்பாயைக் கண்டால் ஆனந்தம். கொலை எவ்வளவு அழுத்தமாக நடக்கிறதோ அதைக் கண்டு மகிழ்ச்சி.

தமிழைக் கொஞ்சம் நயமாய்க் கொலை பண்ணுகிற கூட்டத்தைச் சேர்ந்தவர் ரெங்கில் தாஸ். தமிழை அவரும் அவரைச் சேர்ந்தவர்களும் ஆசைக்காகவா கற்றுக்கொண்டார்கள்? இல்லை. வியாபாரத்தின் பொருட்டு. மேலும், அவர்கள் கைகள் எப்பொழுதுமே ‘மேல் கைகள்’. கடன் வாங்குபவர்களின் கைகள் எப்பொழுதும் கீழ்தானே? கீழேயிருப்பவனுடைய பேச்சை மேலேயிருப்பவன் சரியாகப் பேசவேண்டுமென்பதுண்டா? ‘என்ன சொல்றே?’ என்று தான் சவுகார் ரெங்கில்தாஸ் கேட்பார். அதற்கு நாம் ‘முடைப் பட்டால்’ கட்டாது.

பொதுவாக, மனிதர்களுக்கு மனித உயிரில் அக்கறை அதிகம். சவுகார் ரெங்கில் தாஸுக்கு பணத்தின் உயிரில் கொஞ்சம் கவலை ஜாஸ்தி. காதலிருவர், இரண்டு மூன்று தலைமுறைகளுக்குப் பிறகு, முப்பது ஜீவன்களாக வளர்ந்து பெருக்கடைந்திருக்கிறார்கள் என்ற சேதியைக் கேட்டால், சாதாரண மனிதனுக்குச் சந்தோஷம். ஆனால் சவுகார் தாஸுக்கு வேறு வகையில் ஆனந்தம். இரண்டு ரூபாய் சேர்ந்தால், அவைகள் முப்பது வருஷங்களுக்குள் எத்தனை குட்டிகள் போடும் என்பதில் கவலையும் ஆனந்தமும்.

## சவுகார் ரெங்கில் தாஸ் சேட்

'என்ன ஸேட்! இப்படிப் படுமோசமாக விலை கேட்கிறீர்களே! தருமமாகுமா?' என்று யாரேனும் சொன்னால், 'நமக்குத் தர்மம் தெரியும். ஏன் ஸும்மா பேஸரே! ஆண்டவன் இல்லே, பாத்துக்கிறான்!' என்று வாய் நீளமாக சவுகார் பேசும் பொழுது, ஆண்டவனே நேரில் வந்துவிடுவாரோ என்று அச்சப்படும்படியாக இருக்கும். ஆண்டவன் வந்தால் என்ன சொல்லுவாரோ என்று பயப்படுகிறது போல நாம் விழித்தால், விலையிலே கொஞ்சம் குறைத்துவிடுவார் சவுகார்.

'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்', 'கரும்புள்ள போதே ஆலையாடிக்கொள்' என்பன பழமொழிகளோ அல்லது பிஞ்சு மொழிகளோ, இவைகளின்சாரத்தை நன்கறிந்தவர் சவுகார். 'பாருங்கோ, பண கிராக்கி, ரொம்ப கஸ்டம் (படே முஷ்கில்)' என்று சவுகார் முகவுரை ஆரம்பித்தால் போதும், அவர் கரும்பை ஆலையில் கொடுக்கத் துவக்கிவிட்டார் என்று கூசாமல் முடித்துக்கொள்ளலாம்.

தர்ம வட்டி கால் வட்டி; கோர்ட்டு வட்டி அரை வட்டி; சாதாரண வட்டி ஒரு வட்டி; மைனர் வட்டி இரண்டு வட்டி. சவுகார் வட்டி இன்னதுதான் என்று சொல்ல முடியாது. 'ஆக்டர்கள் சமயோசிதமாய் நடிப்பார்கள்' என்று நாடக நோட்டீஸ் சொல்லுவது போல, சவுகார் வட்டி சமயோசிதம். இரண்டுக்குக் குறையாது. முதலுக்கு வட்டி முதலாகக் குவிந்து போகும். 'எப்பொழுதும் காற்று அடிக்குமா, கரும்பு அகப்படுமா?' என்று சவுகார் கேட்டால், உங்களால் என்ன பதில் சொல்ல முடியும்? முடியாமற் போனால் தரு

மோசமேதசப் பிரசங்கம் வேண்டாம்; வாயை மூடிக்கொள்ளுங்கள்.

சவுகாருக்குத் தெய்வ பக்தி கிடையாதா? ஓ! ரொம்ப உண்டே! ஸ்ரீரங்கத்தில் திருப்பள்ளிகொண்டிருக்கும் ஸ்ரீரங்கநாதனுக்கு அபிஷேக அர்ச்சனை செய்த மஞ்சள் அதோ அவர் நெற்றியின் உச்சியில் வைத்திருப்பது உங்கள் கண்ணுக்குத் தெரியவில்லையா? உங்களுக்கு அந்திமாலை போலிருக்கிறது! நாஸ்திகர்களுக்கே, கொஞ்சம் பார்வை குறைவு. அவர் கழுத்தில் துளசி மாலை இருக்கிறது, அது உங்களுக்குத் தெரியாது. உண்மை. சட்டையைக் கழற்றினுல்தான் தெரியும். காதிலே பச்சைத் துளசி இருக்கிறதே, இது கூடவா உங்களுக்குத் தெரியவில்லை? மோசம்! சவுகாரைப் பார்த்து தெய்வ பக்தி இல்லையென்று சொல்லும் படி யாச்சா?

கோ சம்ரட்சண சபையில் (பசுவைக் காப்பாற்றும் சபையில்) நமது சவுகார் ஒரு முக்கிய மெம்பர். தோல் வியாபாரிகள் பசுக்களை அடிமாடுகளுக்காக வாங்குகிறார்களே என்று நமது சவுகாரும் அவரைச் சேர்ந்தவர்களும் போடும் வருத்தக் கூச்சல், பரிதாப - அன்புக் கூச்சல், ஏழு சமுத்திரங்களையும் கடந்து பாற்கடலில் துயிலும் பரமனைக்கூட எழுப்பிவிடும். ஆனுல் கரும்பை, ஆலையில் கொடுத்து, 'சாறு பிழிந்து', சக்கையைத் தூர எறிந்துவிட்டு, கவலையில்லாமல் இருப்பவர்கள் தாங்கள் என்பது சவுகார்களுக்குப் புலப்படாமற் போனுல், அது என் குற்றமா?

காந்தி வந்தால், ரெங்கில் தாஸ் கும்பிடுவார். பணம் கொடுப்பார். பணம் கொடுப்பதில் ஒரு விசேஷம். முடிவு

பெற்ற நூறு ரூபாயாகக் கொடுக்கமாட்டார். வளரும் நூற்று ஒன்ருகக் கொடுப்பார். இலக்கத்திலேயே கடைசியில் பூஜ்யம் (ஸைபர்) வந்தால் சவுகார் கண்களை உறுத்தும். மேலும், ஸைபர் வராது; வந்தால் அதற்குச் சாவு என்று அர்த்தம். ஒன்று வளர்ந்துகொண்டே போகுமே! இந்த மர்மம் சவுகாருக்குத் தெரியாதா? அவருக்கும் வளர்ச்சியில் நம்பிக்கை உண்டு. ஆனுல் அவர் நினைக்கிற வளர்ச்சி வேறு என்ருலும், நெஞ்சில் ஈரமில்லாத பாபி சவுகார் என்று நீங்கள் சொன்னுல் எனக்குக் கோபம் வந்துவிடும்.

## சங்கரலிங்க பண்டிதர்

சங்கரலிங்க பண்டிதரை உங்களுக்குத் தெரியாது என்றால் நான் நம்பப் போவதில்லை. ஏனென்றால் சங்கரலிங்க பண்டிதர் ரொம்பப் பிரசித்தி பெற்றவர். நீங்களும் கீர்த்தியில் குறைந்தவர்கள் அல்ல. எனவே, பிரசித்திபெற்ற இரண்டு கூட்டத்தார் ஒருவரை யொருவர் தெரியாது என்று சொன்னால், அது நம்பத் தகுந்த விஷயமா?

பிறருக்குத் தெரியாததைச் சொல்லுவது என் வேலையன்று. மறந்துபோனதை நினைப்பூட்டுவதுதான் என் வேலையாகும். சங்கரலிங்க பண்டிதரை உங்களுக்குத் தெரியும். ஆனால் மறந்திருக்கக்கூடும். எனவே, உங்களுக்கு நினைப்பூட்டுகிறேன். சங்கரலிங்க பண்டிதர் கல்வியில் தேர்ச்சி பெற்ற பண்டிதரல்லர். பண்டிதர் என்ற பட்டம் வகுப்புப் பட்டமாகும்.

தமிழ்ப் பண்டிதர், காஷ்மீர தேசத்துப் பண்டிதர் சங்கரலிங்கம் என்று நினைத்து, உங்களுக்குத் தெரியவில்லையென்று நீங்கள் சொன்னீர்கள் என எனக்குத் தெரியும்.

பட்டத்தைக் குறிப்பிட்டவுடனே, நமது சங்கரலிங்கத்தை எல்லோருக்கும் தெரியும் என்று கை தூக்குவார்கள். ஆமாம், நீங்கள் கை தூக்குகிறீர்களே, ஆமாம், அவர்தான் சங்கரலிங்க பண்டிதர். இனிமேல் நான் அவரைப் பற்றி ஒன்றும் சொல்லத் தேவையில்லையே!

நிர்ப்பந்தப்படுத்தினால் சொல்லித்தானே தீரவேண்டும்! கட்டாய ராஜ பக்திக்கு எவ்வளவு நற்பயன் ஏற்படும்? அதைப் போலவே நிர்ப்பந்தத்துக்காகச் செய்கிற வேலையில் உயிரும் இருக்காது; உருவமும் இருக்காது. தெரிந்த ஒரு விஷயத்தை நீங்கள் மூடி வைத்துக்கொண்டு, அதையே என்னைச் சொல்லச் சொன்னால், அதிலே உங்களுக்கு இனிப்பு ஏற்படலாம். எனக்கு ரஸம் உண்டாகுமோ?

சங்கரலிங்க பண்டிதர் சங்கரன் என்ற திருப்பெயரோடு விளங்கிய காலமுண்டு. பழைய சங்கரன் கையில் மான் இருந்ததாம்; மழு இருந்ததாம். இந்தச் சங்கரன் தம்முடைய ஸம்ஹாரத் தொழிலுக்கு ஆரம்பிக்கையில், கூர் மழுங்கிய கத்தியைத்தான் கையில் எடுத்தார். ஊர்ச் சின்னப் பையன்களும் பார்ப்பன விதவைகளும் சங்கரன் கத்திக்கு இரையான காலமுண்டு.

தவறான அர்த்தம் செய்யவேண்டாம். சங்கரன் யாரையும் கழுத்தை வெட்டிவிடவில்லை. பரிகாரி வேலை செய்கையில், மண்டையிலே இரண்டொரு இடத்திலே, காயம் ஏற்பட்டு, ரத்தம் வீரிட்டுக் கிளம்பினால், அது சங்கரனுடைய தப்பிதமன்று. அது கத்தியின் தப்பிதமாகும். சாணை பிடித்த கத்தியை, பெரிய பண்டிதர்கள் சின்னச் சங்கரன் கண்ணில் காண்பிக்க மாட்டார்கள். வல்லவனுக்கு மொட்

டைக் கத்தியும் ஆயுதம் என்பதை நம்பி, சங்கரன் தமது தொழிலில் பயிற்சி செய்துகொண்டு வந்தார்.

ஊரென்றால் நாலுமிருக்கும் என்பார்கள். நாலுமிருப்பதை ஒன்றுபடுத்த முடியாமற் போனதுதான் நம்ம காலத்து துர்ப்பாக்கியம். மெலியாரை வலியார் அடித்தால் வலியாரைத் தெய்வம் அடிக்கும் என்று அர்த்தமில்லாமல் சொல்லிக்கொண்டே செத்துப்போன சந்ததியார்கள் எத்தனை தலைமுறைகளோ! மெலியாரை வலியார் அடித்தால், அந்த மெலியார் தம்மினும் மெலியாரை அடிப்பது என்றதுதான் வழக்கத்தில் மிஞ்சினதாகும் பழமொழி வேறு விதமா யிருந்தாலும் என்ன செய்கிறது ?

மனம் போனபடி ஊர் வலியார் நடந்துகொண்ட முறையில் சங்கரனும் அவரைச் சேர்ந்தவர்களும் ஜீவனம் பண்ணும் வகையற்றுப் போனார்கள். சங்கரன் ரோஷமுள்ள பையனாதலின், இந்த நிலைமையைப் பொறுத்துக்கொண்டிருக்க முடியவில்லை. அவருடைய கண் எப்படியோ காடு, மலை, வனாந்திரம், கடல் முதலியவைகளைத் தாண்டி சிங்கப்பூரில் போய் விழுந்தது. கண் விழுந்த இடத்தில் சிறிது காலத்துக்குப் பின்னர் கால்களும் போய்ச் சேர்ந்தன.

இயற்கை யறிவு மிகுந்து நின்ற சங்கரலிங்கத்தின் கண் பார்த்த ஊருக்குக் கால் போய்ச் சேரும்பொழுது கைகள் மட்டும் சும்மா யிருக்குமா ? கண் பார்த்தது கை செய்யும். சிங்கப்பூரில் அவர் ஆளுக்கு ஏற்றாற்போல, க்ஷவரம் செய்யக் கற்றுக்கொண்டார். சங்கருக்காகத்தான் — இப்பொழுது அவருக்கு சங்கர் என்று பெயர் — ஸலூனுக்குக் கூட்டம்

வருகிறது என்று சொல்லும்படியாக சங்கர் கைதேர்ந்து விட்டார்.

அரைச்சட்டை, கிராப்பு, கையில் வீரசங்கிலி, காலில் நல்ல ஜோடு, காதிலே பளபளப்பான கடுக்கன்கள் சகிதமாக, சங்கர் ஊருக்குத் திரும்பி வந்தார். சங்கர் மட்டும் தோற்றத்திலும் தேர்ச்சியிலும் மாறினரே ஒழிய, அவர் பிறந்த ஊர் சிறிதளவும் மாறவில்லை. கிராமத்திலே நாக்குக்கு வேலை அதிகம். கிராமத்து அற்ப நாக்குகள் எல்லாம் சேர்ந்து சங்கரை ஏளனம் செய்ய ஆரம்பித்துவிட்டன. சங்கர் தமது அழகு தோற்ற ஆபரணங்களை உள்ளே, பெட்டியில் போட்டு அடைத்து வைத்துவிட்டார். கிராப்பையும் எடுத்துவிட்டு, பாதி க்ஷவரம் செய்துகொண்டார்.

சங்கருடைய இந்தத் தீர்மானம் மெச்சத் தகுந்தது. இல்லாவிட்டால் அவரை மூந்தி விட்டு, அவர் காது கேட்கும்படியாக 'அம்பட்டக்கிருது' என்று வாழ்த்துப் பாடுவார்கள் கிராமத்தில். அற்பர்களுடைய நாக்குக்கு வேலை வைத்து, அவமானப்படுவதைக் காட்டிலும், அவைகளைப் பெட்டிப் பாம்புகள் போலச் செய்துவிட வேண்டும் என்ற நோக்கம் கொண்டு, சங்கர் செய்ததை எல்லோரும் 'சபாஷ்' என்று சக்கம் போட்டுச் சொல்லவேண்டும்.

இப்படி ஒளிந்து பிடிக்கிற தத்துவம் சங்கருக்கு நீண்ட காலத்துக்குப் பிடிக்கவில்லை. பயந்துகொண்டே போனல், வெருட்டுகிறவனுக்கு எளிது என்று யாருக்கும் தெரியும். இது சங்கருக்குத் தெரியாததன்று. மேலும், அற்பர் கண்ணுக்குப் பணம் பெரிது, குணம் பெரிதல்ல என்பதையும் கண்டுகொண்டார். தாம் சம்பாதித்துக் கொண்டுவந்த

பணத்தை, கொஞ்சம் கொஞ்சமாக, வெளியே வட்டிக்கு விட்டு, ஊர் வாயைச் சிறிது சிறிதாக அடைத்துவிட்டார்.

'சிங்கப்பூர்' சங்கரிடம் க்ஷவரம் செய்துகொள்ள, காதவழி (பத்து மைல்) தூரத்திலிருந்துகூட, மைனர்கள் வண்டி போட்டுக்கொண்டு வருவார்கள். 'அடே! சங்கர் க்ஷவரம் தூங்குகிற, தாலாட்டுகிற க்ஷவரம்' என்று அவர்கள் வண்டியிலே, தங்கள் லோட்டாப் பேர்வழிகளோடு, பிரசங்கம் செய்துகொண்டு போவதை நீங்கள் பார்த்திருக்க வேண்டும். வேலை செய்யும்பொழுது ஊர் நெளுவையும் உலக சங்கதிகளையும் தெரிந்துகொள்ளுவதில் சங்கர் இணையற்றவர், சின்ன மீன் போட்டு, பெரிய மீனை இழுப்பதுபோல்.

அன்று ஆனந்தன் புத்தபிரானுக்கு அந்தரங்கச் சீடனாக அமைந்தது போல், இன்று, சங்கர் காந்தியின் பேரில் அடங்காத பிரேமை கொண்டிருக்கிறார். படித்தவர்கள் க்ஷவரத்துக்குப் போனால், பேச்சு முழுவதும் காந்தியைப் பற்றித்தான் இருக்கும்; அல்லது கடன் வாங்குகிற கூட்டுறவு சபையைப் பற்றி இருக்கும். இப்பொழுது சங்கர் இந்தச் சபையிலே ஒரு மெம்பர். அது மட்டுமா? பஞ்சாயத்துக்கூட.

நாலா பக்கங்களிலும் சங்கருக்கு மதிப்பு. தொழிலில் மதிப்பு; நடத்தையில் மதிப்பு; லேவாதேவி விஷயத்தில் மதிப்பு; சம்பாஷணையில் மதிப்பு. எல்லோருக்கும் அவரிடத்தில் நம்பிக்கை. இவ்வளவு நம்பிக்கைக்குப் பாத்திரமான பின், அவர் வெறும் ஜாதிப் பண்டிதராக மட்டும் இருக்க விரும்பவில்லை. வைத்தியத்திலும் பண்டிதராக

வேண்டுமென்று முயற்சி செய்து வருகிறார். 'அரை வைத்தியர் ஆவதற்கு ஆயிரம் பேர்களைப் பைசல் செய்தாகி விட்டதா?' என்று எவரேனும் துடுக்காகக் கேட்டால், 'ஒன்று குறைவு ஸ்வாமி!' என்று, கேட்டவர் முகத்தைக் குறிப்பாகப் பார்ப்பார் பண்டிதர் சங்கர். இன்னொரு தரம் அவன் ஏன் பண்டிதரைப் பார்த்து, இந்தக் கேள்வியைக் கேட்கிறான்?

சுக்குப் பொடி வைத்தியத்தில் பணம் வராது என்று சங்கருக்குத் தெரியும். சீட்டி முதல் செட்டியார் வரையில் சிங்கப்பூர் என்ற பெயரைக் கொண்டு பெருமை பெறும் பொழுது, 'சிங்கப்பூர் சலூன்' என்று ஒன்றை சங்கர் திறக்காமல் விருப்பாரா? அவரது ஊருக்கு அடுத்த சிறிய பட்டினத்தில், சிங்கப்பூர் ஸலூன் நடந்து வருகிறது. போனால் அங்கே அவரைப் பார்க்க முடியாது. ஆனால் அவர் கதர் கட்டிக்கொண்டு, வைத்திய வேலையில், ஊர்கோலிக்கொண்டிருக்கையில், எங்கேனும் மூலே முடுக்கில் காணலாம். போய்ப் பார்த்து, காணமற் போனால், எனக்கு எழுதுங்கள். தகுந்த ஏற்பாடு செய்து அவரைப் பார்க்கும்படி செய்கிறேன்.

## பத்திராதிபர் சாரதி

'கலியுகம் எப்படி நடக்கப் போகிறது என்று விஸ்தாரமாய் பவிஷ்யத் புராணத்தில் (வருங்காலப் புராணத்தில்) சொல்லப்பட்டிருக்கிறது' என்று வைதீகர்கள் இறுமாப்புடன் பேசுவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். பவிஷ்யத் புராணத்தை எழுதியவருக்குக்கூட அவ்வளவு இறுமாப்பு இருக்காது. அர்ஜுனனுடைய வெற்றியை, தன் மகன் உத்தரனுடைய வெற்றி என்று சுண்டைக்காய் விராட ராஜன் எண்ணி அகமகிழவில்லையா? பிறர் பெருமையைத் தம்முடையதாகப் பாவித்துப் பெருமை பேசிக்கொள்ளும் புண்ணிய மூர்த்திகள் உண்டு. அவர்களுடைய கண்ணியத்தைப்பற்றி நாம் ஏன் பேசவேண்டும்?

பவிஷ்யத் புராணத்தை, எழுத்து விடாமல் துளைத்துப் பார்த்தாலும், பத்திராதிபர் என்ற புதுப் பயிரைப் பார்க்க முடியாது. சொர்க்க லோகத்தை வர்ணிப்பதும் நமது கற்பனையைக் கொண்டுதானே? கற்பனைக் கெட்டாத சம்பவங்கள் இல்லையா? காந்திக்கு முன், சாத்வீக ஒத்துழையாமையை, உலகம் அனுபவத்தில் பார்த்ததுண்டா? காந்தி

யின் உபதேசமும் வாழ்வும், சாதாரண மனிதக் கற்பனைக்குக் கட்டுப்பட்டதல்ல. பவிஷ்யத் புராணக் கற்பனைக்கு எட்டா தவர்கள் தற்காலப் பத்திராதிபர்கள் என்று தாராளமாய்ச் சொல்லலாம் எனத் தோன்றுகிறது.

பழைய காலத்திலே, வேதத்துக்கு எவ்வளவோ மதிப்பு. அந்த மதிப்பு, இப்பொழுது பத்திரிகைக்கு இருக் கிறது. பவிஷ்யத் புராணத்துக்குக்கூட அவ்வளவு இல்லை. இதைச் சொன்னால் வைதீகர்களுக்குக் கோபம் வரும், அர்த்தமில்லாத கோபமும் மனக் கசப்பும் மலிந்து கிடக்கும் இந்த நாளிலே 'பக்கம் பார்த்துப் பேசுவதே' உத்தமம். ஆனால், பக்கம் பார்த்துப் பேசும் காரியம் உருப்படாது என்று பத்திராதிபர் சாரதி சொல்லுகிறார். தற்காலத்து வேதவாக்கு அவருடையது. அதைத் தட்டித் தள்ள என்னால் முடியாது. சாமர்த்தியம் இருந்தால் நீங்கள் செய்யலாம். ஆனால் இதையும் பத்திராதிபர் சாரதி 'நோட்' பண்ணி (கவனித்து) வைத்துக்கொண்டு, சமயம் வந்த பொழுது, உங்கள் பேரில் பாயவும் கூடும். ஜாக்கிரதை! முன் னெச்சரிக்கை செய்துவிட்டேன்.

சாரதி குழந்தை முதலே, ஒரு கோணஷ்டைப் பேர்வழி. அதாவது, அவருக்கு வக்கிரபுத்தி. வைதீக பாஷையிலே இதற்கு குயுக்தி என்று பெயர். எதிர்வாதத்தை விரும் பாத கசடர்கள் குயுக்தியைக் காணப் பொறுப்பதில்லை. அது வும் சரஸ்வதியின் பிரதிநிதிகளாகத் தங்களை மதித்துக் கொண்டிருக்கும் வாத்திமார்கள் பொறுப்பதே யில்லை. 'இந் தியா யாருடைய தேசம்?' என்று வாத்தியார் சாரதியைக் கேட்பார். கொஞ்சங்கூடத் தயங்காமல், 'இந்தியர்களின்

தேசம்' என்பான் சாரதி. 'பதில் தவறு' என்று அடுத்த பையனை வாத்தியார் கேட்பார். அவன், 'இங்கிலீஷ்காரர்களுடையது' என்பான். 'சாரதியை ஒரு குட்டுக் குட்டு தலையில்' என்பார் வாத்தியார்.

சாரதிக்கு ஆத்திரம் பொங்கும். 'ஸார், நான் சரியாய்ச் சொல்லுகிறேன். இப்பொழுது எனக்குத் தெரிந்துவிட்டது. பரிவர்த்தனை ஏற்பாடு. இந்தியா இங்கிலீஷ்காரர்களுக்குச் சொந்தம். இங்கிலாந்து இந்தியர்களைச் சேர்ந்தது' என்பான். அவனுடைய முதல் பதிலுக்குக் குட்டு; இந்தப் பதிலுக்குச் சுடச்சுடப் பிரப்பம்பழம்; பெஞ்சிமேல் ஏறி நிற்கவும் நேரிடும். வாத்தியாரின் போதனையிலே சாரதிக்குத் திருப்தியில்லை; சாரதியின் பதிலிலே, வாத்தியாருக்குப் பிடித்தம் கிடையாது. இன்ஸ்பெக்டர் சோதனைக் காலத்தில், சாரதி பள்ளிக்கூடத்துக்கு வராத ஏற்பாட்டைச் செய்வார் வாத்தியார். சாரதியின் பதிலைக் கொண்டு, 'பள்ளிக்கூடம் ராஜநிந்தனையை வளர்க்கிறாப் போலக் காணப்படுகிறது' என்று இன்ஸ்பெக்டர் 'ரிமார்க்' எழுதிவைத்தால் என்ன செய்கிறது என்பது வாத்தியாரின் திகைப்பு.

பள்ளியில் படிக்கிற பொழுதே பையன்களை ஒன்று சேர்த்து, கூட்டம் போடுவதில் சாரதி சமர்த்தன். பிரசங்கம் செய்வான். பிரசங்கத்தின் விஷயங்கள் விசித்திரமாக இருக்கும். 'காதலுக்குப் பின் கலியாணமா? கலியாணத்துக்குப் பின் காதலா?', 'விதவா விவாகம்', 'ஸர்க்கார் உத்தியோக வேட்டை', 'ஆண் பிள்ளைகள் இரண்டாவது தாரம் கலியாணம் செய்துகொள்ளலாமா?', 'ஆகாய விமானக் காட்சி'—இந்த விஷயங்களைப் பற்றிப் பேசும்பொழுது,

சாரதியின் சத்தமே அதிகமாயிருக்கும். வாய்க்கு வந்த தெல்லாம் பேசி, தன் கட்சியை ஸ்தாபித்துவிடுவான். பையன்கள் மருள மருள விழிப்பார்கள். சாரதி பையன் களுக்குக் குட்டிக் கடவுள்.

பள்ளிக்கூடத்திலே, ஒன்றைத் தவிர, மற்ற எல்லா வற்றையும் கற்றுக் கொடுப்பார்கள். தானாக யோசிக்கும் திறமையை பையன்களுக்குச் சொல்லிக் கொடுக்க, வாத்தி மார்களுக்குத் தெரியாது. யோசிக்கும் திறமை குருவில்லா வித்தை. அந்த மை வேலை வித்தையைப் பழக்கிக் கொண் டான் சாரதி. சாதாரணப் பட்டங்கள் ஆகாயத்தில் அழ காகப் பறக்கும்; 'கலாசாலைப் பட்டம் பணத்துக்குக் கேடு, மனைவியின் தாலிக்கு ஆபத்து' என்று சாரதி சொல்லிச் சிரிப்பான். 'வாலிழந்த நரி பிரசங்கம் செய்வதைப் பார்' என்று பட்டதாரிகள் சாரதியைப் பார்த்து நகைப்பார்கள். காளமேகப் புலவர் சொன்னது போல,' பெருக்கப் பெருக்கத் தெரியும்' என்பான் சாரதி. பட்டதாரிகளின் எண்ணிக்கை பெருக்கப் பெருக்க என்று சிலேடையாகப் பேசுகிறானும் சாரதி.

எதிர்வாதம் செய்யாமல், எதையும் ஏற்காத சாரதியைக் கண்டால், யாருக்குப் பிடிக்கும்? ஆனால் அவனுடைய கட்சியை, முற்றிலும் தள்ளி விடுவதும் சாத்தியமில்லை. சாரதியின் எதிர்வாதம், கேட்பவர்களின் மனதில் திகிலை உண்டாக்கிற்று. அவன் சொல்லுவதை ஏற்கவும் மனமில்லை. வீட்டைப் பற்றிப் பேசுவானேன்? சதா சண்டைதான். குழந்தைகள் பெற்றோர்களின் சொத்தாகப் பாவிக்கப்படும் இந்த நாளிலே, அந்தச் சொத்து நல்ல விலைக்கும் போகக்

கூடாத நிலைமைக்கு வருமாயின், பெற்றோர்கள் மனம் புழுங்க மாட்டார்களா? பிள்ளை நிறையச் சம்பாதிக்க வேண்டும் என்பது ஒன்றே பெற்றோர்களின் ஆசை. அந்த ஆசையிலே இடி விழும்படியாக நடந்துவந்த சாரதியின் பேரில், பெற்றோர்களுக்குப் பிரியம் இருக்குமா?

'நீறு இல்லா நெற்றி பாழ்' என்பது பழைய பழமொழி. புது மொழி ஒன்று உண்டு. 'சர்க்கார் உத்தியோகமில்லாத வீடு பாழ்.' நீறு அணிந்த நெற்றியைக் கண்டால், வேலை கொடுக்கும் சர்க்கார் கூட்டத்தில் ஒருவிதக் கசப்பு உண்டாகின்றது என்பதை வயிற்றுப் பிழைப்பு நாகரிகத்தில் ஊறிக் கிடக்கும் வீட்டார் அறிவதில்லை. என்றாலும் அவர்களுக்கு, சாரதியைப் போலுள்ளவர்களின் பேரில் கோபம்.

பட்டம் பெறாதவன் சர்வே உத்தியோகத்துக்கு லாயக்கு என்பதைத் தெரிந்து, பொக்கிஷமாக வைத்துக் கொண்டிருந்த சாரதியின் தாயார், இதை அவனிடம் சொன்னாள். உத்தியோகத்துக்காக நேரில் ஆஜரானான். 'கொஞ்ச காலம் நீ இந்த ஆபீசில் அட்டெண்டர் வேலை பார்க்க வேண்டும்' என்றார் உத்தியோகஸ்தர். 'அந்த வேலையிலிருந்து தான் இந்தப் பெரிய உத்தியோகம் தங்களுக்குக் கிடைத்ததோ?' என்று வாய்த்துடுக்காகச் சொல்லிவிட்டு, சாரதி வெளியேறினான். வீட்டுக்கும் போகவில்லை. ஆனால் பட்டினி கிடக்கவுமில்லை. பரந்த தேசத்திலே பட்டினி கிடந்து சாக முடியாது என்பது சாரதியின் தீர்மானம்.

தாலூகாக் கச்சேரிக்கு மனுப் பண்ணிக்கொண்டான். நேரில் வர உத்தரவு. தாசில்தாரின் முன்னே போய் நின்றான்.

'மூன்று மாதம் சம்பளமில்லாமல் வேலை செய்யவேண்டும்' என்றார் தாசில்தார். 'அவ்வளவு காலம் வயிற்றை யாரிடம் ஒப்படைத்து வைக்கிறது?' என்றான் சாரதி. 'அதிகப் பிரசங்கி' என்றார் தாசில்தார். 'நானா?' என்றான் சாரதி. 'பியோன்!' என்றார் தாசில்தார். 'நம் இரண்டு பேரையும் படைத்துத் தவிக்க வைக்கும் ஆண்டவன் நினைப்பு, இந்தச் சமயத்தில்கூடத் தங்களுக்கு வரலாகாதா?' என்று விடுவிடென்று சொல்லிவிட்டு வெளியேறினான். சர்க்கார் உத்தியோக மோகம் போய்விட்டது. குடும்பத்தை நினைத்தான்; வயிற்றை நினைத்துக்கொண்டான். 'தானியக் களஞ்சிய நாட்டிலே சாரதிக்கு மட்டுமா பஞ்சம்?' என்றும் நினைத்துக் கொண்டான்.

சந்தர்ப்பத்துக் கேற்ற மனிதன் தோன்றுவான் என்பது ஒரு இங்கிலீஷ் பழமொழி. சந்தர்ப்பமும் வந்தது. சாரதிக்குப் பிழைப்பும் பெருமையும், இரட்டைப் பிறவிகளைப் போல, வந்து சேர்ந்தன. ஒரு பணக்காரன் ஏழையின் மனைவியைப் பலவந்தமாகத் தூக்கிக்கொண்டு போனான். அதை வெளிப்படுத்த ஊராருக்குப் பயம். போலீஸ் இதற்கு உடந்தை என்று ஊராரின் எண்ணம். சாரதிக்கு இதைக் கேட்கச் சகிக்கவில்லை. பத்திரிகைக்கு எழுதினான். கேஸை ருசுப்படுத்த முடியவில்லை. பணக்காரனுடைய தூண்டுதலால் ஜெயிலுக்குப் போக நேர்ந்தது. ஆனால் பெண் மட்டும் புருஷன் வீட்டுக்குத் திரும்பிவர முடிந்தது. தன்னைக் காப்பாற்றிய சாரதிக்குப் பரிந்து, அவள் பிரஸ்தாப பத்திராதிபருக்குக் கடிதம் எழுதச் செய்வித்தாள். அந்த லக்கினத்திலிருந்தே, சாரதிக்கு சுக்கிர திசை.

பத்திரிகைத் தொழிலிலே ஈடுபட்ட சாரதி, சில ஆண்டு களுக்குள், பழுத்த, முழுப் பத்திராதிபன் ஆனான். வெளி யுலகத்தில் பொறுமை யிருப்பது பெரிய காரியமன்று. பத்திரிகை ஆபீசுக்குள் இருக்கும் பொறுமையைச் சொல்ல முடியாது. ஒருவனுக்கு மற்றவன் இரகசியப் போலீஸ்கார னைப் போல வேலை செய்வான். சமயம் பார்த்து ஒருவன் மற்றவன் பேரில் கோள் சொல்லுவான். இத்தகைய பால அரிஷ்டங்களுக்கு (குழந்தைப் பருவ நோய்களுக்கு)த் தப்பிப் பிழைத்து, பத்திரிகை ஆபீஸில் நிலைத்து இருப்பது ரொம்ப அருமையான வேலை. சாரதி தப்பிப் பிழைத்தான்.

பணக்காரனை வெருட்டி கள்ளத்தனமாகப் பணம் தேடும் பத்திராதிபர்கள் கூட்டத்தைச் சேர்ந்தவனல்லன். சாரதி. காக்காய் பிடிக்கிற கூட்டத்தையும் சேர்ந்தவ னல்லன். யதார்த்தவாதி வெகுஜன விரோதி என்று தவருகச் சொல்லுகிறார்களே, அந்தக் கூட்டத்தைச் சேர்ந் தவன் சாரதி. பத்திராதிபர் என்றால் நாட்டின் கவலைப் பொறுப்பு முழுமையும் ஏற்றவர் என்பது அவனது எண்ணம் அவனை நேரே கண்டால் நடுக்கம்; அவன் இல்லாத இடத்தில் அவனைப்பற்றி வீண் வம்புப் பேச்சு.

சாரதி பத்திரிகைத் தொழிலைப் பற்றிச் சொல்லுவது உங்களுக்குத் தெரியாதே! பின்னாலே சொல்லப் போகிற தெல்லாம் அவனுடைய பேச்சு. என்னுடையதன்று. சாரதி சொல்லுகிறார் (இனி, அவர் பத்திராதிபர் ஆனபிறகு, சொல்லுகிறான் என்று மரியாதைக் குறைவாய்ப் பேச லாமா ?) : ' பத்திரிகை வேலையைப் போல், தொல்லை பிடித்த வேலை கிடையாது. " இம் என்றால் சிறைவாசம், ஏன் என்றால்

வனவாசம்" என்று பாரதியார் எழுதினாரே, அது பத்திராதிபர்களுக்கு ரொம்பப் பொருத்தமானது.

'அபிப்பிராய பேதமிருந்தால் அதற்குப் பொறுமை என்று சகோதரப் பத்திராதிபன் பட்டம் சூட்டுகிறான். அல்லது அறியாமை என்று படுகுழியில் தள்ளப் பார்க்கிறான். "உங்கள் பத்திரிகையில் போட்டது தவறு" என்று ஒருவன் உறுமுகிறான். இல்லையென்றால் "தாவா நோட்டீஸ் கொடுப்பேன்" என்று உளறுகிறான். முதலாளியைப் போற்றினால், தொழிலாளிக்குக் கோபம். தொழிலாளியை ஆதரித்தால், முதலாளிகள் "பத்திரிகை வேண்டாம்" என்கிறார்கள். விளம்பரம் அதிகமாய்ப் போட்டால் எஜமானர்களாகிய வாசகர்கள் கோபிக்கிறார்கள். "கொடுத்த காசுக்குப் பண்டமில்லை" யென்கிறார்கள். படம் போட்டால், "படத்தைப் போட்டு ஏமாற்றுகிறான்" என்கிறார்கள். படம் போடாவிட்டால், "பத்திரிகையின் கருமித்தனத்தைப் பார்" என்று பிரசாரம் செய்கிறார்கள்.

'இது மட்டுமா? பத்திரிகை குட்டையாயிருந்தால், நீளமாய் வேண்டுமாம். நீளமாய்ப் போட்டால், "என்ன நீளம் நீளம்?" என்று சொல்லிக்கொண்டேயிருக்கிறார்கள். யாராவது வாயை மூடினாலொழியத் தாமாகத் தங்கள் வாய்களை மூடுவதில்லை. "பெண் பக்கம் என்று தனியாகப் போடவேண்டும்" என்று சிலர் சொல்லுகிறார்கள். 'அப்படிப் போடுவது விஷமத்தனம்" என்று பெண்கள் ஆட்சேபிக்கிறார்கள். கட்டுரைகள் நிறைய இருந்தால் "கதை இல்லையே" என்கிறார்கள். கதை போட்டால் "விகடம் இல்லை" என்று பழி. விகடம் இருந்தால் "கருத்து இல்லை" என்று கூத்து.

எல்லாம் இருந்தால், "வெளியூர்க் கடிதங்கள் இல்லை" என்று ஆட்சேபம். "ஊருக்கு ஒரு தேவடியாள் யாருக்கு என்று ஆடுவது?" என்று முதலில் சொன்னானே அவன் ரொம்பப் புத்திமான்.

'விஷயதானம் செய்பவர்களோ சண்டைக்குத் தயாராய் இருப்பதாகக் காணப்படுகிறார்கள். "இதைப் பத்திரிகையில் போடுங்கள். இல்லாவிட்டால்—?" இந்த வாக்கியத்தை, உங்களுக்கு என்னவெல்லாம் கற்பனை தோன்றுகிறதோ அதை வைத்துப் பூர்த்தி செய்துகொள்ளலாம். அதில் தப்பிதம் ஒன்றுமே ஏற்படாது. பத்திராதிபரைப் பார்க்க வருபவர்கள் சிறிது நேரத்திற்குள் தங்கள் வேலையை முடித்துக்கொள்வதில்லை. ஆதிகாலப் பிரளயம் முதல் காந்தியின் சத்யாக்ரக இயக்கம் வரையில், காபி வழக்க முதல் சிறையில் மோர் கொடுக்கவேண்டும் என்ற விஷயம் வரையில் பேசி, முடிவு கட்டிக்கொள்ள வேண்டும் என்ற தீர்மானத்துடன் வருகிறார்கள். ஆனால் பத்திரிகைத் தொழிலைப் போல, உயர்ந்த, சிறந்த தொழில் வேறு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. பட்டம் வேண்டாம்; அதிகப் பள்ளிப் படிப்பு வேண்டாம். நல்ல உணர்ச்சி போதும்; இயற்கை அறிவு போதும்; நியாய புத்தி போதும்; சுதந்திர ஆவலும் அன்பும் இருந்தால் போதுமானது.'

## கான்ஸ்டேபிள் சுப்பய்யா

கான்ஸ்டேபிள் சுப்பய்யா தங்கமான பேர்வழி. தங்கத்துக்குக் கிராக்கியாக இருக்கிற இந்தக் காலத்தில், நான் மரியாதைக்குச் சொன்னதை வைத்துக்கொண்டு, சுப்பய்யாவை உருக்கி, யாரும் நகை பண்ணிப் போட்டுக் கொள்ள ஆசைப்பட வேண்டாம். தலைமாலைத் தலைக்கு அணிவது பரமசிவனுடைய பித்து. மற்றவர்கள், தலை மாலையை அணிந்துகொள்ள, தைரியம் கொள்ளுவார்களா? கான்ஸ்டேபிள் சுப்பய்யா, தங்கமான பேர்வழியானாலும், எல்லோரும் கிட்ட நெருங்க, அவர் இடங்கொடுக்க மாட்டார்.

சுப்பய்யா, கான்ஸ்டேபிள் ஆவதற்கு முன், அவரது பூர்வோத்திரம் சுருக்கம். சிறு பிராயத்தில், அவர் இருக்கிற ஊரில், எந்தத் தெருவிலேனும், வம்பு, சண்டை, கைகலப்பு — இவைகளில் எது நேர்ந்தாலும், அந்த நிகழ்ச்சியின் மத்தியில் சுப்பய்யாவைக் காணலாம். அவரைச் சாட்சி பூதமாய்க் காண முடியாது. கட்சிக்காரனாகத்தான் காண முடியும். வம்பில் கடைசிப் பேச்சு அவருடையது; சண்டை

யில் வெற்றி அவருக்கு. கை கலப்பில், அவர் கொடுக்கிற அடிதான் கடைசி அடி.

போலீஸ் உத்தியோகத்துக்கு, உடலில் சில லட்சணங்கள் வேண்டும். உயரம், அகலம், கனம் — எல்லாம் கணிசமாயிருக்கவேண்டும். இந்த லட்சணங்கள் அமையப் பெற்றவர்களுக்கு, நல்ல ஜீவதாது இருக்கும் என்று சொல்லத் தேவையில்லை. ராஜ லட்சணங்கள் உள்ளவர்கள், ராஜா ஆகலாம்; அல்லது ராஜாவுக்காக உழைக்கலாம். பின்னாலே சொன்னதுதான் பெரும்பாலும் நம் நாட்டில் நேருகின்றது.

ஒரு குடும்பத்துக்கு ஜீவனோபாய நெருக்கடி ஏற்படின், அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், சாவகாசமாக, நல்ல தொழிலைப் பயின்று, அவைகளில் தேர்ச்சி பெற்று, வாழ்க்கை நடத்த முடியாது. 'கஞ்சி வாரப்பா, எங்கு வாரப்பா?' என்ற பரிதாப நிலையிலிருப்பவர்கள், 'நல்லவர்கள் சோறு போட்டால்தான் சாப்பிடுவோம்' என்ற சங்கற்பத்துடன் வாழ முடியுமா? 'கனல் வாதை' வந்தால், கண்ட தொழிலைச் செய்து, கண்ட இடத்தில் சாப்பிட வேண்டியதுதான்.

இன்னதுதான் வேண்டும் என்று பிச்சைக்காரன் கட்டளையிட முடியுமா? வந்தது அதிருஷ்டம், வராதது செல்லாப் பணம், அசட்டுப் பணம் என்று மனத்தைச் சமாதானம் செய்துகொண்டு வாழவேண்டிய நிலையில், நமது நாட்டில் லட்சக் கணக்கான குடும்பங்கள் இருக்கின்றன. அந்தக் குடும்பங்களில் தவங்கிடந்து, பிள்ளைகள் பெறவில்லை. ஆண்டவன் சோதிக்கிறானே என்று தாய்மார்கள்

அலறிக் கதறும்படியாக, பிள்ளைகள் பிறந்து விடுகின்றன. ஆச்சரியம் என்னவெனில், பெற்றோர்கள், தாங்கள் என்ன சாப்பிடுவார்களோ தெரியாது, அவர்கள் வாயு பட்சணம் செய்வார்களோ அதுவும் தெரியாது. குழந்தைகளை மட்டும் எப்படியோ காப்பாற்றி வளர்த்துவிடுகிறார்கள்.

சுப்பய்யாவின் குடும்பத்தின் வறுமையைச் சொல்லி முடியாது. என்றாலும் சுப்பய்யாவின் பெற்றோர்களின் மானத்தைப் பாருங்கள். அழகான சுப்பய்யாவை, பங்காளி யொருவர் ஸ்வீகாரமாகக் கேட்டார். கேட்டதுதான் தாமதம். பெற்றோர்கள் இருவரும் பங்காளியைப் பிடுங்கி எடுத்து விட்டார்கள். 'உனக்கு என்ன திமிர்? நாங்கள் ஏழைகள்; வாய் அசைத்தவுடனே, பிள்ளையைக் கூட்டிவிட்டு விடுவோம் என்று உனக்கு நினைப்பா? உன் திமிரைக் குலைக்க, அதோ எரிந்துகொண்டு போகிறானே, அந்த சூரிய நாராயணமூர்த்தி இருக்கிறான்!' என்று பேசித் தீர்த்துவிட்டார்கள். ஆனால் கடைசியில் சுப்பய்யா சர்க்காருக்கு ஸ்வீகாரப் பிள்ளையானதில், அவர்களுக்குச் சந்தோஷம்.

தெருச் சண்டை, ஊர்ச் சண்டை முதலியவைகளில் ஒன்று விடாமல், ஈடுபட்டு வந்த சுப்பய்யாவுக்கு போலீஸ் உத்தியோகம் வருவது அருமையா? அதை நிர்வகித்துப் பார்ப்பதுதான் அருமையா? அதை நிர்வகித்துப் பார்த்து வருவதற்கு, ஒரு சிறு சம்பவம் நேர்ந்தது. சுப்பய்யா, சில நண்பர்களுடன் பக்கத்து டவுனில் விழா நடக்கையில் போனார். அங்கே அவர் தமது சகாக்களுடன், போலீஸ் கான்ஸ்டேபிள் ஒருவனால் 'நியூஸன்'ஸுக்காக, சார்ஜ் செய்யப்பட்டார். 'அண்ணே, நாங்கள் தொப்பியில்லாத கான்ஸ்

டேபிள்கள். எங்க கிட்ட, உன் கையைக் காண்பிக்கிறயே!' என்று சுப்பய்யா சொல்லிப் பார்த்தார். கான்ஸ்டேபிள் அசையவில்லை.

அன்றைக்குச் சபதம் செய்துகொண்டார் சுப்பய்யா. 'அண்ணே! இன்னும் ஒரு வருஷத்துக்குள் உடுப்புப் போட்டுக்கொண்டு, உன்னையே சார்ஜ் பண்றேன்' என்று மிடுக்காகப் பேசினர். ஆனல் சார்ஜ் விஷயத்தில் அபராதம் செலுத்தவேண்டியது நின்றுபோகவில்லை. சுப்பய்யா வார்த்தைப்படி நடந்தார். இராப் பள்ளிக்கூடத்தில் மூன்று மாதம் படித்து நாலெழுத்து படிக்கக் கற்றுக்கொண்டு, யார் யாரையோ சிபார்சு பிடித்து, போலீஸில் எப்படியோ சேர்ந்துகொண்டார். அதன் பிறகு, தம்மைச் சார்ஜ் பண்ணின அண்ணனைச் சார்ஜ் செய்வதாகச் சபதம் செய்துகொண்டாரே, அதை சுப்பய்யா நிறைவேற்றினரோ என்னவோ, தெரியாது.

சுப்பய்யா போலீஸில் சேர்ந்த பிறகு, அவருடைய முகத்தின் அழகே போய்விட்டது. 'என்ன சுப்பய்யா! உன் அட்டஹாஸமே போய்விட்டதே! என்ன காரணம்?' என்று சுப்பய்யாவைக் கேட்டேன். சுப்பய்யா சொல்லுகிறர்: 'என், ஸார், கேட்கிறீர்கள் எங்கள் பிழைப்பை? எங்கள் எஜமானர்கள், எங்கள் பெயர்களைச் சொல்லிக் கூப்பிடக் கூடாதோ? "ஏ, 813" என்கிறர்கள். "ஆஜர்" என்று நாங்கள் சொல்லவேண்டி யிருக்கிறது. எங்களூரில் என்னை சுப்பய்யா என்று வாய் நிறைய, எவரேனும் கூப்பிடா விட்டால், எனக்கு ஆத்திரம் பொங்கும். இப்போ, என்ன ஸார் செய்ய முடியும்? 813-ஆம் ஸார், 813!'

மேலும் சொல்லுகிறார் : 'அரசாங்கத்திலே, கோடிக் கணக்கிலே வரவு செலவு நடந்தாலும், எங்கள் கான்ஸ்டேபிள் களுக்கு மாதம் கிடைப்பது டபிள் பத்துத்தானே? (சுப் பய்யா, டபிள் என்ற வார்த்தையைச் சொல்லும்பொழுது, அவருடைய கால்கள் ஓட்டத்துக்குத் தாளம் போடுவது போலிருக்கும்) இந்தச் சம்பளத்தைக் கொண்டு நாங்கள் என்ன செய்ய? நாங்கள் டூடி பார்க்கிற இடத்தில், கொஞ் சம் அயர்ந்து மறந்தாற் போல நின்றாலும் போதும். உடனே பிளாக் மார்க்குத்தான். எங்கள் கால் காசு லஞ்சம், எல்லார் கண்களையும் உறுத்துகிறது. பெரிய இடங்களைப் பற்றிப் பேசினால் தலையே போய்விடும்.'

சுப்பய்யாவுக்கு ஒரு மனக்குறை. 'போலீஸ் எஜமான் தான் உத்தரவு போடவேண்டும். நாங்கள் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். எஜமான் சம்சாரம் அதிகாரம் செய்யும் பொழுது, எனக்குக் கோபம் வருகிறது. போலீஸ் வேலை யையே உதைத்துவிட்டுப் போகலாமா என்று தோன்றுகிறது. அரைக்கால் ரூபாயைக் கொடுத்து, மார்க்கட்டில் அரை ரூபாய்ச் சாமானை வாங்கிவரச் சொன்னால், நாங்கள் என்ன பண்ணுகிறது? மார்க்கட்டிலே இருப்பவன், என் தாய் மாமன் மகனா? ரொம்பக் கேவலமான பிழைப்பு!' என்பார் சுப்பய்யா.

சுப்பய்யா சொல்லுகிறார் : 'என்ன, ஸார்! ஊருக்கு ஒரு பக்கத்தில் இடி. எங்களுக்கோ எல்லாப் பக்கங்களிலும் இடி. எந்த வழி போனாலும், யாருக்காவது வருத்தம் வரு கிறது. பொய்யை நயமாகச் சொல்லவேண்டி யிருக்கிறது.

நாங்களோ சின்னச் சம்பளக்காரர்கள். நாங்கள் என்ன செய்ய முடியும்? பங்கோபஸ்து சமயத்தில் இலவசமாய் நாடகம் பார்ப்பதும், கோடிமுத்தய்யா பிள்ளையின் வெற்றிலை பாக்குக் கடையில், இனம் வெற்றிலை பாக்குப் போட்டுக் கொள்ளுவதும்தான் எங்களுக்கு மிச்சம்.'

# டபேதார் காசிராவ்

டபேதார் காசிராவ் அவர்களை எல்லோருக்கும் தெரியும். காசிராவ் என்பது வர்க்கப் பெயர்; அது தனி ஒரு மனிதனுக்குப் பெயர் அன்று. காசிராவ் தலைமை வகிக்கும் கூட்டத்தில், எல்லோரும் ஏறக்குறைய ஒன்று போலத்தான் இருப்பார்கள். காசிராவ் அவர்களின் கதையைச் சொன்னால், அவருடைய கூட்டத்தாரின் கதையைச் சொன்னது மாதிரிதான். காசிராவ் இப்பொழுது பென்ஷன் வாங்குகிற சமயம். எனவே, அவர் வரலாற்றைக் கொஞ்சம் சொல்ல வேண்டாமா ?

காசிராவ் அவர்களின் பரம்பரை மிகவும் பழமை கொண்டது. அவருடைய முன்னோர்கள் சேனையில் தக்க பதவி வகித்தவர்கள். சுதேசி மன்னர்களின் செல்வாக்கும் பெருமையும் வெள்ளைக்காரர்களைக் கண்டதும் செல்லரித்துப் போகவே, காசிராவைச் சேர்ந்தவர்களுக்குச் சேனையில் இடமில்லை. சேனை யிருந்தால் அல்லவா இடமிருக்கப்போகிறது? ‘மண் வெட்டிக் கூலி தின்னலாச்சே, எங்கள் வாள் வலியும்

வேல் வலியும் போச்சே!' என்று புலம்பும் மறவ வீரனைப் போல், காசிராவின் முன்னோர்களில் சிலர் புலம்பினார்கள். ஆனால், தற்கொலை செய்துகொள்ளவில்லை. காசிராவ் தோன்றிய கதைச் சுருக்கம் இதுதான்.

காசிராவுக்கு வயது பதினைந்து இருக்கும். மிலிட்டரி ஹோட்டல் வைத்திருந்த அவர் தகப்பனார் இறந்துபோனார். ஹோட்டல் வேலை காசிராவுக்குப் பிடிக்கவில்லை. கொண்டியாகத் திரிந்துகொண்டிருந்த காசிராவுக்குப் பணக் கஷ்டம் ஏற்பட்டது. வீட்டிலே தாயார் ஓயாமல் வைது திட்டினாள். பட்டாளத்துக்கு ஓடப் பார்த்தார். மீசை முளைக்கவில்லை என்று அங்கே தள்ளிவிட்டார்கள். ஒற்றை மாட்டு வண்டி ஓட்டிச் சம்பாதிக்க முயன்றார். ஒரு முதலாளி காசிராவுக்கு வேலை கொடுத்தார். மாடு நல்ல மாடு. காசிராவுக்குக் குஷி உண்டாயிற்று. 'பல், பாலாமணி ரமாமணி' என்று அர்த்தமில்லாமல் சத்தம் செய்து, பக்கத்து வண்டிக்காரனோடு பந்தயம் ஓட்டி, ஒரு மரத்தில் கொண்டுபோய் மோதி, வண்டி குடை கவிழ்ந்து, மாட்டுக்கும் காசிக்கும் அடிபட்டு, வண்டியின் ஆரங்கள் சில நொறுங்கிப் போயின. முதலாளி நல்லவரானதால், நஷ்டம் கேட்காமல், காசிக்குச் சீட்டுக் கொடுத்துவிட்டார். வண்டி இலாகா முயற்சி முற்றிற்று.

பீடி சுற்றுகிற இடத்துக்குப் போனார் காசி. பீடி சுற்றுகிற இலைகளைக் கிழிக்கத் தெரிந்ததல்லாமல், அவருக்குச் சுற்றத் தெரியவில்லை. முதலாளி ஒரு முஸல்மான். இரண்டொரு நாட்கள் அவர் காசிராவின் அநியாயத்தைப் பொறுத்துப் பார்த்தார். சகிக்க முடியவில்லை. காசிராவின் இடது கன்னத்தைத் தமது வலது கையால் முழுதும் 'பட்'

என்று அளந்து பார்த்தார். காசிராவின் காதிலே விர்ரென்று ஒலித்தது. பீடிக்கும் முதலாளிக்கும் ஸலாம் செய்தார். வீட்டுக்குப் போய்விட்டார்.

மளிகைக் கடைக்கு வேலை பார்க்கப் போனார் காசிராவ். சம்பளம் கிடையாது. இரண்டொரு நாள் வரையிலும் முஸ்லிம் முதலாளி கன்னத்தில் அளந்தது நினைவில் இருந்தது. அசட்டுத்தனம் ஒன்றும் செய்யவில்லை. மூன்றும் நாள், சாக்குச் சாக்காய் நிறைந்திருக்கிற கற்கண்டு, சீனி, வெல்லம், திராட்சைப்பழம் முதலியன செலவழியாமல் சாக்கில் இருப்பது ஜலம் ஊறுகிறது. பெரிய இரண்டு கற்கண்டுக் கட்டிகளை வாயில் திணித்துக்கொண்டார். பட்டறைப் பலகையிலிருந்த முதலாளி காசியைக் கூப்பிட்டார். ஒரு தரம், இரண்டு தரம், பதிலில்லை. கதுப்புக் கிழியக் கற்கண்டு வாயிலிருக்கையில், அது காசியைப் பேச விடுமா? தொண்டை அடைத்துக்கொள்ளும் போலிருக்கிறது. முதலாளிக்கு இரண்டு கற்கண்டுத் துண்டுகள் போச்சு; காசிக்கு வேலை போச்சு. இடையிலே கிடைத்தது கற்கண்டு சுகமும் ஒரு பட்டினம் 'கல்தா'வும்.

இவைகளை வீட்டிலே, தாயாரிடம் காசி சொல்லுவதில்லை. ஆனால் பரதேசித் தபால் இல்லையா? ஸர்க்கார் தபால்தான் 'ஒஸ்தி'யா? காசியின் நடவடிக்கைகள் தாய்க்கு ருசிக்கவில்லை. வீட்டிலே சோறு கிடையாது என்று காசிக்கு நோட்டீஸ் கொடுத்துவிட்டாள் தாயார். சோற்றுக்கு என்ன செய்கிறது? கோயிலிலே உற்சவம். அங்கே போனால் ஏதாவது கிடைக்கும் என்ற எண்ணத்துடன் போனார் காசி. ஏகக் கூட்டம். ரொம்ப கெடுபிடி. சுவாமி தரிசனத்துக்கு வந்த

முன்சீபும் அவர் குடும்பத்தாரும் நெரிபட்டுப் போவார்கள் போல் இருந்தது. அவர்களுக்கு அப்பொழுது ரொம்ப பந்தோபஸ்து செய்தார் காசி. முன்சீபின் சம்ஸாரத்தின் மனம் குளிர்ந்து போயிற்று. மறுநாள் முதல் காசிக்கு முன்சீபு கோர்ட்டில் சம்பளம் முன்சீபு வீட்டில் சாப்பாடும் வேலையும். கைக்குழந்தைகளை அழாமல் சமாதானம் செய்வதும் இழுவண்டியில் வைத்துத் தள்ளுவதும் முதன் முதலாக அவர் பழகிக்கொண்ட வேலை. கொஞ்சம் கொஞ்சமாய்த் தண்ணீர் இழுப்பது, மாடு கறப்பது, துணி துவைப்பது, மார்க்கெட்டுக்குப் போவது முதலிய வித்தைகளில் காசிராவ் கை தேர்ந்தார். இவ்வளவும் சர்க்கார் செலவிலே. 'முன்சீபு தாரிணி'யான எஜமானியம்மாளின் கிருபா கடாட்சத்தினால் காசிராவ் முற்றும் பழுத்த டபேதார் ஆனார்.

எஜமானியம்மாள் பிச்சை போட்ட ஓய்வு நேரத்தில், காசிராவ் சிறிது எழுதப் படிக்கத் தெரிந்துகொண்டார். டபேதார் வில்லையும் அவரது வலது மார்பில் அலங்கார லட்சணத்துடன் அமைந்து நின்றது. அதை, அவர் தொட்டுத் தொட்டுப் பார்த்து மனப்பூரிப்பு எய்துவார். பெருமூச்சும் விடுவார். படிப்படியாக, காசிராவ் கச்சேரியின் 'நெளிவு சுளுவு'களைத் தலைகீழாகத் தேர்ந்துகொண்டார். தாரத்துக்கு ஒரு தாலியும் கட்டிவிட்டார். இப்பொழுது அவரைப் பார்க்கவேண்டும்.

நல்ல மஸ்லீன் தலைப்பாகை. இடுப்பில் எட்டு முழ வேஷ்டி. 'சோமன் கட்டு.' ஒரு ஷர்ட்டு. ஷர்ட்டுக்கு மேலே நீள அங்கி. வலது தோளிலே, வில்லையுடன் கூடிய டவாலி. நெற்றியிலே மராட்டிய கீறு நாமம். கிருதா சகிதமாக விளங்

கும் முகம்; முகத்தை வேலைப்பாட்டுடன் அமைத்துக் காட்டும் கொழுந்துவிட்ட மீசை. இவை எல்லாவற்றையும் விமரிசையாக எடுத்துக் காட்டும் 'மந்தஹாஸம்'. உடலழகு, மேனியழகு, எஜமானரின் தயவு அபரிமிதமாய்க் கிடைக்கப் பெற்றிருக்கும் காசிராவ் மன்னிக்கத் தக்க தற்பெருமையுடன், என்னையும் உங்களையும் பார்த்தால் நமக்கு ஏன் கோபம் வரும்?

காசிராவைப் போல இங்கிதப் பிராணி அகப்படுவது அருமை. முன்சீபு கூப்பிட்டாரா? உடனே 'எஜமான்' என்பார் காசி. எஜமானி கூப்பிட்டால், 'அம்மா, ஆஜர்' என்பார். முன்சீபின் பெண் ருக்மணி கூப்பிட்டால், 'அம்மணி!' என்று நயக் குரலில் பதில் உரைப்பார். ருக்மணியின் சின்னத் தம்பி ஏழு வயதுள்ள ராமன் கூப்பிட்டால் 'ஹெஹ்ஹே! சொக்கிரகோ!' என்று அட்டஹாஸம் செய்வார். 'என்ன காசி, பயமுறுத்துகிறாயே!' என்று ராமன் கேட்டால், 'கோவிலிலே வெள்ளை யானை வந்திருக்கிறதே, அதைச் சின்ன எஜமான் பார்த்தாங்களோ?' என்று பதட்டமில்லாமல் பேசுவார் காசி.

முன்சீபு எப்படி ஒரு வழக்கில் தீர்ப்புச் சொல்லியிருக்கிறார் என்பதைக் காசிராவ் முகத்தில் கண்டுகொள்ளலாம். அவருடைய தயவுக்காகக் காத்துக்கொண்டிருக்கிற கட்சிக்காரர்களிடம் நுழைந்து கொடுத்துப் பேசும் திறமையை அவர் எந்த மேதாவியிடமிருந்து கற்றுக்கொண்டாரோ! கலகலவென்று கையில் விழாத சங்கதியில் அவர் கவனம் செல்வதில்லை. அந்தச் சமயம் அவருக்கு வேறு எங்கேயாவது வேலையிருக்கும். கட்சிக்காரர்களும் ஏனையோரும், காசிராவின் தயவின்பேரிலேதான், கச்சேரியில் கொஞ்சமாகிலும்

சத்தம் போட்டுப் பேசலாம். முன்சீபுக்குக் கோர்ட்டுக்குள்ளே அதிகாரம்; அந்த அறைக்கு வெளியே காசி அவர்களது தர்பார்.

எவரேனும் காசியின் உதவியை நாடினால், 'கலிகாலத்தில் காசு இல்லாமல் ஒன்றும் நடவாது' என்று சூத்திரமாகச் சொல்லுவார். இங்கிதம் தெரிந்தவர்களுக்கு உதவி உண்டு. தெரியாதவர்கள் வாயில் பக்காப் படி மண் தான். பெரிய வக்கீலுக்கு வினயம் நிறைந்த கும்பிடு; சின்ன வக்கீலுக்கு, அபயம் கொடுக்கும் வணக்கம். கடைசி குமாஸ்தாவுக்கு வேலை கற்றுக்கொடுப்பார். தலைமை குமாஸ்தாவுக்கு யோசனை சொல்லுவார். நடுத்தர குமாஸ்தாக்களிடம் நன்றாய்க் 'காபி' சாப்பிடுவார். வாயில்லாத வக்கீல் குமாஸ்தாக்களையும் கட்சிக்காரர்களையும் வெருட்டுவார். ஆனால் ஒருவருக்கும் இடைஞ்சல் செய்யமாட்டார்.

முஸ்லிம் முன்சீபு காலத்தில் மொகரம் பண்டிகையைப் புகழ்ந்து பேசுவார். கிறிஸ்தவராயின் 'கிசுமசு' பண்டிகை. வைஷ்ணவராயின் நெற்றியில் கீறு நாமம். சைவராயின் பட்டை பட்டையாக விபூதி. அவருக்கு எல்லாக் கடவுள்களும் ஒன்றே. இல்லாவிட்டால் இருபது ரூபாய் சம்பளத்தைக் கொண்டு, முப்பத்தேழு வருஷங்களில் பத்துப் பேர்களைக் கொண்ட குடித்தனத்தை நடத்தி, கலியாணங்கள் செய்து, சொந்த வீடு ஒன்று வாங்கி, இரண்டாயிரம் ரூபாய் கை ரொக்கம் இருக்குமா? தமது பேத்தியை நல்ல இடத்தில் கொடுக்கவேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார். இப்பொழுதும், ஆபீஸ் பெட்டியை, தலை நிமிர்ந்து காசி தூக்கிச் செல்ல, முன்சீபு பின்தொடர்ந்து வரும் காட்சியை நீங்கள் பார்த்து ஆனந்திக்கவேண்டும்.

## கர்ணம் குப்பு முதலியார்

தேசத்தைத் தாங்குவது கிராமம். அரசாங்கத்தின் வரவு செலவு திட்டத்துக்கு அஸ்திவாரம் கிராமக் கர்ணிகரின் கணக்கு. கணக்குப்பிள்ளை என்ற பெரியாரை நம்பியே அரசாங்கம் நடைபெறுகிறது. கர்ணிகரின் உத்தியோகம் பார்வைக்குச் சிறிதாயிருக்கலாம்; கணக்குப் பிள்ளைக்குப் பென்ஷன் இல்லாமலிருக்கலாம். ஆனால் கணக்குப்பிள்ளைக்கு வேலையும் கீர்த்தியும் ரொம்ப ஜாஸ்தி.

பாற்கடலைக் கடைய எத்தனிக்கையில் மந்திரகிரியை மத்தாகவும் வாசுகியை(பாம்பை)க் கயிறாகவும் வைத்துக் கடைவதென்று தீர்மானித்தார்களாம். ஆனால் மந்திரகிரி மத்தை யார் தாங்குவது? உடனே மகாவிஷ்ணு ஆமை அவதாரம் எடுத்து மந்திரகிரி மத்தைத் தாங்கினதாகப் புராணம் கூறுகின்றது. அந்தத் திருவவதாரம் அன்றோடு போய்விட்டது என்று எவரும் எண்ணவேண்டாம். ரிவினியூ வெண்ணெயைத் திரட்டும் சர்க்காரை நின்று தாங்கும் ஆமை அவதாரம் கர்ணிகர் என்று புகழலாகாதா?

எங்கும் சுற்றினாலும் ரங்கநாதன் இருக்கிறார் என்று வழிப் போக்கு நாடோடிப் பரதேசிகள் சொல்லிக்கொள்ளு வார்கள். ஸ்ரீரங்கத்திலே கட்டாயம் சோறு கிடைக்கும் என்பது பரதேசிகளின் நம்பிக்கைபோலும்! பி. ஏ. பட்டதாரிகள் கூடக் கர்ணம் வேலைக்கு மனுப்பண்ணிக்கொள்ளு கிற காலமாகிவிட்டது. 'வீட்டோடு வாசல்,' 'உள்ளூர்ப் பூனை அயலூர் யானைக்குச் சரி,' 'எப்படியிருந்தாலும் சர்க்கார் உத்தியோகம்' என்று என்னவெல்லாமோ, பாட்டிகள் கல்லும் கரையும்படியாக உபதேசிப்பது, வேலையில்லாமல் திண்டாடும் பட்டதாரிகளின் காதில் விழப் போகுமா?

குப்பு முதலியாரின் பரம்பரை மிக மிகப் புராதனம். அவருடைய குடும்பம், பல நூற்றாண்டுகளாக, கிராமக் கணக்கு குடும்பம். கிராமக் கணக்கர் இறந்துபோனால், காலி வேலைக்குக் குவியும் மனுக்கள் எத்தனையோ? எத்தனை பேர்கள் மனுப்பண்ணிக்கொண்டால் என்ன? எத்தனை உயர்தர உத்தியோகஸ்தர்களுக்கு அப்பீல் செய்துகொண்டால்தான் என்ன? முதலியார் வீட்டைச் சேர்ந்த ஒருவர், பரம்பரை என்ற ஒரே ஆயுதத்தைக் கொண்டு, ஏனைய அபேட்சகர்களை, மனுக் களத்திலே வென்றுவிடுவார். களத்தில் வென்றார் என்று ஒரு வகுப்பினருக்கு விருது பட்டம் உண்டு. கணக்குப்பிள்ளை குடும்பத்தார்களுக்கு மனுவில் வென்றார் என்ற பட்டம் இருக்கப் பெறாதது காலவிபரீதம் என்றே தோன்றுகிறது.

மனு விசாரணை விநோதம். ரொம்ப விநோதம். பத்துப் பேர்கள் தாசில்தார் அவர்களின் சன்னிதானத்தில், மேலாடையை இடுப்பில் தரித்து, கைகளை மார்பின்மேல்

அணைத்து இறுகக் கட்டிக்கொண்டு, கால்களை ஒன்றாய்ச் சேர்த்துவைத்து நின்றுகொண்டிருப்பார்கள். தாசில்தார் மனுதார்களின் யோக்கியதாம்சங்களை விசாரிப்பார். ஒருவர் தமது பரீட்சை யோக்கியதையைச் சொல்லுவார். ஒருவர் தாம் செலுத்தும் சர்க்கார் கிஸ்தியைப் பெரிதுபடுத்திக் கூறுவார். மற்றொருவர் தாம் சென்னை ரிவினியூ போர்டு உத்தியோகஸ்தர் ஒருவரின் மருமகன் என்பார். ஒருவர் உள்ளூர் என்பார். ஒருவர், தமது தகுதியைச் சொல்லாமல், நீண்ட காலமாய், முதலியார் குடும்பத்திலேயே கணக்குப் பிள்ளை வேலை இருந்து வருவது தவறு என்று பொறாமை யால் துடுக்காய்ச் சொல்லுவார். ஒருவர் தமக்கு நன்றாகக் கூட்டிக் கழிக்கத் தெரியுமென்றும், மணி மணியாக எழுதத் தெரியும் என்றும் சொல்லுவார். இப்படியே மற்றவரும் சொல்லிக்கொண்டுபோய்ச் சலித்துவிட, குப்பு முதலியார், 'காலஞ் சென்ற கணக்கரின் புதல்வன் நான்' என்று பரம் பரைக் கணக்கனது வணக்கத்துடன் தெரிவித்துக்கொள் ளவே, தகப்பனுக்குப் பிள்ளை என்ற உண்மையை உடனே தெரிந்துகொண்ட தாசில்தார், குப்பு முதலியாருக்குக் கிராமக் கணக்கு வேலையைக் கொடுத்தார். கணக்குப் பிள்ளை வேலைக்கு நிலைத்த யோக்கியதை வாரிசு பரம்பரை ஒன்றே.

ஜில்லா கலெக்டருக்கு அடுத்தபடியாக ஜில்லா ஜட்ஜியை மதிப்பது கிராமத்தார்களின் வழக்கம். கிராம மணியகார ருக்கு அமுல் செல்லலாம். ஆனால் 'பேனாவைப் புரண்டும்' கணக்குப் பிள்ளையினிடம் கிராமத்தார்களுக்கு ரொம்ப பயம். 'பேனா முனையாலே அவன் என்ன பூரி விடுகிறானோ?' என்பார்கள். கணக்கனது பேனாவின் கீறலைத் திரிமூர்த்தி

களாலும், இந்தியா மந்திரி ஸர் ஸாமுவேல் ஹோர் அவர்களாலும்கூட அசைக்க முடியாது என்பது ஏழைக் கிராமத்தாருடைய அழிக்க முடியாத பயம். அந்தப் பேறு எந்த வேளையிலே ஜனனம் எடுத்ததோ! அதன் ஜாதகத்தை நிபுணர்கள் பார்த்தால் ஒருவேளை தெரியுமோ என்னவோ?

கிராம மணியகாரர் பெரியதனக்காரர் என்ற டம்பத்துடன் ஆயிரம் ரூபாய் கிஸ்தி செலுத்தலாம். குப்பு முதலியாருக்குக் குழி நிலம் இருக்கத் தேவையில்லை. சிவபெருமான் தொண்டர்களின் பக்தியிலே எப்படி ஐக்கியமாய் விடுகிறார் என்று சொல்லப்படுகிறதோ அதே சூட்சுமக் காரணத்தினால், மணியகாரர் கணக்குப்பிள்ளையின் உள்ளங்கைக்குள் அடக்கமாகிவிடுவார். உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல என்பது போக, உள்ளங்கை கிராம மணியகாரரைப் போல என்று புதுமொழியை ஏன் உண்டாக்கலாகாது? இரண்டுக்கும் ஒரே அர்த்தத்தைக் கொடுத்தால் மோசம் ஒன்றுமே ஏற்படாது எனத் தோன்றுகிறது.

கிராமத்தில் கோயிலில் திருவிழாக்கள் நடக்கும் பொழுது, ஊரில் எல்லோரும் வந்திருப்பார்கள். மரியாதை விநியோகம் செய்யவேண்டும். கணக்குப்பிள்ளை மட்டும் வந்திருக்கமாட்டார். அவருக்கு சர்க்கார் ஜோலிகள் எத்தனையோ? 'உன்னாலே யல்லவோ உலகத்தை ஆளுகிறேன் சகுனி மாமா' என்று துரியோதனன் பிரலாபித்ததாகக் கதை. உலகத்தை ஆள விரும்புவோருக்கு, கிராமக் கணக்கன் தயவு எந்த அளவில் இருக்கவேண்டும் என்பதை திருவிழாக் காலத்தில் கண்டுகொள்ளலாம். ரொம்ப விநயத்தோடு கணக்கர் கோயிலுக்குள் வருவார். வரும்பொழுதே

ஸ்தோத்திரம் செய்துகொண்டே வருவார். எல்லோரும் 'கிரேடு' வாரியாக வரவேற்கிறார்களா என்பதை அறிந்து கொண்டு, 'அடாடா, ரொம்ப நாழியாகிவிட்டது. ரிவினியூ இன்ஸ்பெக்டர் சேவகனுலே இவ்வளவு நாழி. அவர்கள் வீட்டில் நாளைக்குத் திதியாம்' என்பார். காத்திருந்த ஸ்வாமிக்கு, பூஜை நிவேதன விமோசனம் ஏற்படும்.

கிராமக் கணக்கரின் கணக்குகளைப் பரிசோதிக்க வரும் ரிவினியூ இன்ஸ்பெக்டரோடு கணக்கர் பேசுவது விநோதமாயிருக்கும். உத்தியோகஸ்தருக்கு முன்னே உட்காரும் கெட்ட வழக்கம் கணக்கர்களிடம் அறவே கிடையாது. மார்பு முழுமையும் வெளியே திறந்து காட்டி மரியாதை செய்யும் வழக்கந்தான் அவர்களிடம் உண்டு. கோபம் பொல்லாது என்று எவரும் அவர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டியதில்லை. கோபமும் ரோஷமும் கூடாது என்பது அவர்களுக்குப் பாரம்பரையாக வந்த அருந்தனமாகும். 'இதென்ன, இழவு கணக்கு, ஐயா!' என்பார் இன்ஸ்பெக்டர். 'எஜமான் கையெழுத்துப் போட்டால் எல்லா இழவும் கலியாணமாகி விடுகிறது' என்று வாய்முழுதும் பேசுவார் கணக்கர். வாய் பேசாமல், இன்ஸ்பெக்டர் கையெழுத்துப் போடுவார். கணக்கரிடம் அவருக்கு அவ்வளவு நம்பிக்கை!

தாசில்தாரிடமிருந்து கிஸ்தி வசூலுக்காக, கடுமையான உத்தரவு. அபராதம், ஸஸ்பெண்டு, வேலை நீக்கல்—இவைகளுக்குக் குறைந்த எதையும் உத்தரவிலே காண முடியாது. என்ன செய்வதென்று தெரியாமல் மணியகாரர் கணக்கரைக் கலப்பார். கணக்கர் சிரிப்பார். 'தாசில்தார் புதிது. வேலைக்குப் பழக்கமில்லாதவர். நேரில் கண்டால் எல்லாம் சரியாகப்

போகும். என்ன பயம்?" என்று கணக்கர் அபயப் பிரதானம் அளிப்பார். மறுநாள் கிராம நவுக்கர்கள், பாக்கி விசாரணைக்கு, தாசில்தாருக்கு முன்னே ஆஜர். 'வட்டத்திலே சில்லறைப் பட்டாக்கள் ரொம்ப அதிகம்; கூட்டுப் பட்டா ஜாஸ்தி. மணியகாரர் கோயம்புத்தூர் டெபுடி கலெக்டருக்குச் சொந்தம்' என்று சம்பந்த மில்லாமல் கதம்பக் கூடையைத் தலை கீழாய்க் கொட்டி, தாசில்தாருக்குச் சமாதானம் வரும்படியாக, கணக்கர் செய்துவிடுவார்.

ஊர் விளையாமல் பாழாய்ப் போனாலும் சரி, சாகுபடிக் கணக்கைச் சரியாக அனுப்பிவிடுவார். வரி வசூலுக்குக் கணக்கரும் மணியகாரரும். வரி வஜாவுக்கு, பொறுப்பை ஏற்பதற்கு, சர்க்காரிலே யாருக்கும் பாத்தியம் கிடையாது என்பது சம்பிரதாயம். சர்க்காருக்குக் கிஸ்தியும், கணக்கர்களுக்கு 'மாமூ'லும் போய்ச் சேர்ந்தால் போதுமானது. கணக்கன் மாமூலை, பெரிய துரை பழைய ஸ்டோக்ஸ் அவர்கள்கூட, ஒப்புக்கொண்டதன் பின்னர், கணக்கனுக்குக் கவலை எதற்கு, பென்ஷன் எதற்காக? 'பீ மெமோ' அதிகாரம் கணக்குப் பிள்ளையின் பாசுபதாஸ்திரமாகும். அதற்கு அஞ்சாத ஜமீன்தாரும் உண்டோ?

குப்பு முதலியார் பயப்படுவது, துரை ஜமாபந்தி ஒன்றுக்குத்தான். துரைக்குத் தமிழ் தெரிந்தால் அங்கேயும் அவருக்குச் சமாளித்துக்கொள்ளத் தெரியும். ஆனால் துரை விடுவிடு என்று பேசினால், முதலியாரின் உடம்பு வெடவெட வென்று நடுங்கி ஆடும். ரிவினியூ இன்ஸ்பெக்டர், தாசில்தார் இவர்களிடம் இவருக்கு இருக்கும் சலுகையைக் கொண்டு, துரை ஜமாபந்தியில் பேர் சொல்ல முடியுமா?

ஆனால், அவருடைய அதிருஷ்டத்தை என்னவென்று சொல்லுவது? எப்படியோ துரை மனதைக் குளிரச் செய்து, ஜமாபந்தியைப் பூர்த்தி செய்துகொண்டு, வீடு திரும்புவார். துரை ஜமாபந்திக்குச் செலவான பணத்தை, மிராசுதார்கள் பங்கிட்டுக் கொடுப்பது வழக்கம் என்று உங்களுக்குத் தெரியாதா? கிராமக் கணக்கு உத்தியோகம் எவ்வளவு பெரிது என்பதற்கு வேறு ருசுவும் வேண்டுமோ?

குப்பு முதலியாருக்கு ஒருவரிடமும் பயம் கிடையாது. அவருக்குப் பூர்வ ஜன்மாந்திர பலனாய்க் கிடைத்த மனைவியிடம்தான் கொஞ்சம் பயம். வெளியேயிருந்து வீட்டுக்குள் போகும்பொழுது வெறுங் கையோடு போக அஞ்சுவார். வாடின வெற்றிலையாவது கையில் இருக்கவேண்டும். தொண்டையைக் கனைத்துக்கொண்டே போவார். முதலில் மனைவியைப் பார்க்கமாட்டார். சுறுசுறுப்பாக எது எதையோ எடுத்து வரிசைப்படுத்தி வைப்பதாகப் பாசாங்கு செய்வார். இடையில் மனைவியின் முகத்தைப் பார்த்துத் தைரியம் கொள்ளுவார். பிறகு எதுவும் ஓடுகிற ஓட்டம். முதலியார் சிவபூஜா துரந்தரர். ஸ்வாமி தரிசனம் தவறுவதில்லை. போகிற பொழுதே, எல்லோரும் எழுந்து நின்று அவருக்கு மரியாதை செய்யவேண்டும். மரியாதை தெரியாத அசடர்களிடம் எப்படிப் பழகுவது என்று அவருக்குத் தெரியும். 'பை நழுவினால் பையன் சரியாகப் போகிறான்' என்று அவர் சூத்திரமாகப் பேசுவார். கோயிலில், ஈசனோடு பேசுகிற மாதிரி, தியானம் செய்வார்; ஸ்தோத்திரம் செய்வார். ஆனால் எப்பொழுதும் கணக்கு நினைவுதான். தன் தலையின்

மேலே அரசாங்கம் சுமந்து நிற்கிறது என்பதை, அவர் கணப்பொழுதேனும் மறந்ததே யில்லை. குப்பு முதலியார் என்ற கணக்கர்கள் நீடூழி வாழ்க! இந்தியா மந்திரியின் மனம் எக்காலத்திலும் அமைதியில் ஊறியும் ஊன்றியும் கிடப்பதாக!

## உதவி ஆசிரியன் குஞ்சிதம்

"தோன்றல், திரிதல், கெடுதல் விகாரம், மூன்றும் மொழி மூவிடத்துமாகும்" என்பது நன்னூல் (இலக்கண) சூத்திரம். பொதுவாக, வார்த்தைகளுக்கு இந்த மூன்று கஷ்டங்களும், வார்த்தையின் முதலிலும், இடையிலும், கடையிலும் — கடைசியில், கடையில் அன்று — நேரும் என்பது இலக்கண விதி. இந்த விதிக்கு இணங்கி, குஞ்சித பாதம் என்பது குஞ்சிதம் ஆக நிற்கிறது.

வெள்ளைக்கார நாடுகளில், காதலின் மிகுதியால், சில புருஷர்கள் தங்கள் சொந்தப் பெயர்களை உதைத்துத் தள்ளி விட்டு, தங்கள் மனைவிமார்களின் பெயர்களையே, முழுதும் வைத்துக்கொள்ளுவார்களாம். முழுப் போடாக, பெயரையே மாற்றிக்கொள்ளுவதற்குப் பதிலாக, மதுரை சொக்கநாதன், தமது மனைவியின் பெருமையை உணர்ந்து — பாண்டிய ராஜ்யம் அவளுடையதுதானே — தன் பெயரை மீனாட்சி சுந்தரேசன் என்று வைத்துக்கொண்டார். இதைப் போலவே சீதாராமனும்.

குஞ்சிதபாதம் புது வழி முறித்தார். அவருடைய மனைவிக்கு ரஞ்சிதம் என்று பெயர். ஒரு நாள் சாயங்காலம்,

ரஞ்சிதத்துக்குக் கவிதை ஆவேசம் வந்து, 'ரஞ்சிதக் குஞ்சிதம் கொஞ்சும் கிளி' என்று சுரம்போட்டு இழுத்துக் கொண்டிருந்தாள்; தப்பிதம், பாடிக்கொண்டிருந்தாள். இதை வெளியிலிருந்து கேட்டுக்கொண்டுவந்த குஞ்சிதபாதம், தமது காதற் கனிமொழியாளின் கவிதை யாவேசத்திற் பிறந்த குஞ்சிதம் என்ற பெயரையே தமக்குச் சூட்டிக் கொண்டார்.

காலத்தில் செய்த உதவி உலகத்தைவிடப் பெரிது என்று சொல்வதுண்டு. அடிமாடுகளைப் போல உழைத்து, வாயில்லாப் பூச்சிகளாக மரிக்கும் பெண்ணினத்தைச் சேர்ந்த ரஞ்சிதத்துக்கு, தனது புருஷனுடைய தியாகத்தைக் கண்டு, உடல் பூரிப்படைந்தது. ரஞ்சிதக் குஞ்சிதம் கொஞ்சும் கிளி என்று பாடிக்கொண்டே அவள் குஞ்சிதத்தை முத்தமிட்டாள். 'அப்பா!' என்று பெருமூச்சுவிட்டார் குஞ்சிதம்.

'அப்பா!' என்று பெருமூச்சு விடக் காரணமென்ன? அவருடைய உத்தியோகம் அந்த வேலை செய்யும்படி செய்தது. உதவி ஆசிரியர்களைப் போல நொந்து சாகிற கூட்டம் இந்த உலகத்தில் கிடையாது. பத்திரிகையின் சொந்தக்காரர், தலைமை ஆசிரியர் — இவர்களின் தயவிலே வாழவேண்டியவர்கள். நிலையில்லாத் தேகம் என்று சொல்லுவதுண்டு; நிலையில்லா உதவி ஆசிரிய உத்தியோகம் என்றும் சேர்த்துக் கொள்ளலாம்.

பழம் அழுகிப் போனால் புரோகிதருக்குக் கொடுப்பதில் என்ன தடை என்று ஒரு பக்தன் சொன்னானாம். இது விகடமாக இருக்கலாம். ஆனால் பத்திரிகைகளுக்கு உதவி ஆசிரியர்களாக வருபவர்கள், வேறு எங்கேயும் நிலைத்த

உத்தியோகம் அகப்படாததனால்தான் வருகிறார்கள் என்ற எண்ணம் வெகுவாகப் பரவி நிற்கிறது. வயிற்றைக் காட்டிக் கொண்டு வேலைக்கு வருபவரை அதை விலைக்கு வாங்குகிற முதலாளி, பாத பூஜை செய்து, நல்ல ஆசனத்தில் அமர்த்தி சம்மானம் செய்து, நித்த நித்தம் நமஸ்காரம் செய்வானா? குடுமியைப் பிடிப்பதைக் காட்டிலும், வயிற்றைப் பிடித்து ஆட்டுவது எளிது.

ஆனால், குஞ்சிதம் வயிற்றைக் காண்பித்துக்கொண்டு, உத்தியோகத்துக்கு அலைந்தவரல்ல. தன்மதிப்பைக் காண்பித்துக்கொண்டு, உத்தியோகம் தேடியவர். தன்மதிப்புக்கும் கூலிச் சம்பளத்துக்கும் வெகு தூரம். 'கூலிச் சம்பளக்காரனுடைய முதுகு கூனியிருக்க வேண்டும்; சதா, பற்கள் வெளியே தெரியும்படியாக இருக்கவேண்டும்; ஆமாம் என்று சொல்லுவது போல, எப்பொழுதும் முகம் ஆடிக்கொண்டிருக்க வேண்டும். பொய்யைக் கற்பனையைப் போல், பேசத் தெரிய வேண்டும்.' இவைகள் கூலிச் சம்பளக்காரனிடமிருந்து முதலாளி வேண்டும் தன்மைகள்.

இந்தத் தன்மைகள் குஞ்சிதத்தினிடம் கிடையாது. அவர் நிமிர்ந்து நிற்பார். அவருடைய வாய்க்குப் பற்கள் இருக்கின்றனவோ என்று சந்தேகப்படும்படியாக, வாய் அநேகமாய் எப்பொழுதும் மூடியிருக்கும். கேட்ட கேள்விக்கு, உடனே பதில். வளைத்து, வளைத்துச் சொல்லுகிற பதிலன்று. கூடிய வரையில் மனச்சாட்சிக்குக் கட்டுப்பட்டவர்.

'அந்தச் சாக்கடை ஜலத்தை, உலர்ந்த சுண்ணாப்பில் ஊற்றி, வெற்றிலை போட்டுக்கொள்ளுகிறாளே, அந்த

அசுத்தமான பெண்ணுக்கும் புருஷனிருப்பானா?' என்று கேட்டதற்கு, 'கோட்டைக்கு வெளியிலே, குஷ்டரோகி முடவன் இருக்கிறானே, அவன்தான் அவளுடைய ஆசை நாயகன்' என்று இன்னொருவன் பதில் சொன்னானும். இனம் இனத்தோடு சேரும் என்று சொல்லுவது உண்மை. தன்மதிப்புள்ள குஞ்சிதத்துக்கு, அதே லட்சணம் பொருந்திய பத்திரிகாலயத்தில் வேலை கிடைத்தது.

பத்திரிகை வேலை கிடைப்பதற்கு முன், அங்கப் பிரதட்சணம் செய்யும் பக்தனைப் போல, ஒரு இடத்தில் அவர் தரித்ததில்லை. எப்பொழுதும் மிடுக்கான வார்த்தைகள்; எதையும் வெட்டிப் பேசும் மனோபாவம்; எதற்கும் குனிந்து கொடுக்காத தன்மை. இவைகளோடு கூடிய வறுமை, பெற்றோர்கள், சகோதர சகோதரிகள்; போதாத குறைக்கு, மனைவி. இவ்வளவு பக்க பலங்களில், ஒன்று இருந்தாலுமே போதும்; எல்லாம் சேர்ந்துகொண்டு, குஞ்சிதத்தை வெறி பிடித்தவனைப் போலச் செய்துவிட்டன. தாம் இருக்கிற இடத்தில், எல்லோருடனும் சண்டை — பாக்கி என்ன வேண்டும்?

'குஞ்சித ரஞ்சிதம் கொஞ்சும் கிளி' என்று பிராசம் போட்டுப் பாடிக்கொண்டிருந்தாள் ரஞ்சிதம். சாயங்கால வேளை. முகத்தில் ஈயாடாமல், குஞ்சிதம் வந்தார். குருணிக் கடுகை அவர் முகத்தில் வெடிக்கவிடலாம் போலிருந்தது. 'மடையன்' என்று முணுமுணுத்துக்கொண்டே வந்தார். காரணம் என்ன? அவருக்கும் தலைமை ஆசிரியருக்கும் மனவருத்தம். உயர்ந்த பத்திரிகாலயங்களில், இவ்வாறு நடைபெறாது. மட்ட ரகங்களிலே, கோள் சொல்லுவது

அதிகம். கோள் சொல்லுவது தற்காப்பு சாதனம் என்பது அற்பர்களின் நினைவு. ஆனால் குஞ்சித ரஞ்சிதத்தின் குரலைக் கேட்டவுடனே, ஆபீஸ் மடையனே, குஞ்சிதம் மறந்தார்.

பத்திரிகை ஆபீசிலே, தலைமை ஆசிரியருக்கும் உதவி ஆசிரியர்களுக்கும் மனக்கசப்பு நேருவது இயற்கை. கூலிக்கு உழைக்கிற ஆபீஸ்களில், மனமும் நடையும் ஒழுங்காகப் பக்குவப்படாதவர்கள் கூடிக்கொண்டால், கூச்சல்தான் மிச்சம். கோள் சொல்லுவதுதான் பிழைக்கும் வழி. மேலும், பத்திரிகாலயத்தில், எந்த வேலைக்கு எவன் லாயக்கு என்ற நியதி இல்லாமல், சகிட்டு மேனிக்கு எல்லோரும் எல்லா வேலைகளையும் செய்யத் துவக்கினால், 'எல்லாம் தெரிந்தவன்' என்ற எண்ணம் ஒவ்வொருவனுக்கும் தோன்றுவது சகஜம்தானே?

எல்லாத் தொழில்களிலுமே, மேலேயிருப்பவன் கீழே யிருப்பவனை மிஞ்சவிடுவதில்லை என்ற பழி எக்காலத்திலு முண்டு. இந்தப் பழியை, வார்த்தைகளால் போக்கிவிட முடியாது. அதுவும் பத்திரிகாலயத்தில் போக்கவே முடியாது. பத்திரிகாலயமே, தன்மதிப்புக்குப் பிறப்பிடமல்லவா? பத்திரிகாலயத்திலே, ஒட்டிக்கொள்ளவேண்டும் என்ற உறவுத் துடிப்பு, ஆசிரியர்களின் நரம்பில் உண்டாவதில்லை. தன் மதிப்புக் கோபம்தான், மூக்குக்கு மேலே, மேகம்போலத் திரண்டு நிற்கும். இதற்கு விலக்கல்ல குஞ்சிதம்.

குஞ்சிதம் ரொம்ப யோக்கியர். பொய்யைக் கண்டால் சீறி விழுவார். உழைப்பதில் அவருக்கு பிரியம் அதிகம். அநீதி எங்கே தலை காட்டினாலும், அதைக் கண்டு, மனம் பொங்குவார். எல்லாவற்றையும் காட்டிலும் அவருக்கு ரஞ்சி

தத்தின் பேரில் அளவு கடந்த அன்பு. அவளுக்கும் குஞ்சிதத்தினிடம் அப்படியே. குஞ்சிதத்தின் தன்மதிப்புக் கோபதாபம் தணிவதற்கு, ரஞ்சிதம்தான் குளிர்ந்த பன்னீர். ரஞ்சிதம் இல்லாவிட்டால், குஞ்சிதம் வாழ்க்கையினின்றும் மறைந்து போயிருக்கவும் கூடும். 'யோக்கியர்களுக்குக் காலம் இல்லை' என்பது அவரது பல்லவி. பத்திரிகை சம்பந்தமாகப் போகச் சொன்னாலும், பணக்காரர்களையும் போலித் தலைவர்களையும் பேட்டி காண, குஞ்சிதம் மனம் இசைவதில்லை.

# வேலைக்காரி அம்மாக்கண்ணு

**வா**ர நாட்கள், வாரத்துக்கு ஒரு தரம் திரும்பித் திரும்பி வருவதனால் கொஞ்சம் தேய்ந்து போனாலும் போயிருக்கும். சூரியன் சதா உருண்டுகொண்டே யிருப்பதனால் (சம்பிரதாயப் பொய்: சூரியன் உருளுவதில்லை என்று நிபுணர்கள் சொல்லுகிறார்கள்) ஒரு பக்கம் மூளியாய்ப் போனாலும் போயிருக்கலாம். ஆனால் இரவு பகலாய், சலிக்காமல் முப்பது வருஷ காலமாக, எங்கள் வீட்டில் வேலை செய்து வரும் அம்மாக்கண்ணுவின் உடம்பு ஏன் தேய்ந்து போகவே யில்லை?

அம்மாக்கண்ணுவின் முன்னத்திப் பற்கள் இரண்டும், உதட்டுக்கு வெளியே வந்து நீட்டிக்கொண்டிருக்கும். முன் உச்சி மயிரிலேதான் இப்பொழுது கொஞ்சம் நரை கண்டிருக்கிறது. தேகத்தில் அதிகமான சதைப்பற்றுக் கிடையாது. தேகம் குச்சி போல, நீண்டிருக்கும். சதைப் பிடிப்பு இல்லாத தேகத்தில், எலும்புகள் பார்ப்பவர்களின் கண்ணில் வந்து குத்துவது போலிருக்கும் என்று சொல்லுவதுண்டு. அம்மாக்கண்ணுவைப் பார்த்தால், அப்படி யொன்றும் ஆபத்து ஏற்படுவதில்லை.

அம்மாக்கண்ணு நடுத்தரமான உயரம்; கறுப்பு நிறம். நாள் ஓய்ந்தாலும் ஓயும்; அவளுக்கு வேலையிலிருந்து ஓய்வே கிடையாது. தினம் தினம் புது மாதிரி வேலையா? அதுவுமில்லை. செய்ததையே திருப்பித் திருப்பிச் செய்கிற 'கழுத் தறப்பு' வேலை. அவளுடைய வேலை மூளை வேலையா? இல்லவே யில்லை. அவள் செய்யும் வேலையை, யோசித்துச் செய்யவேண்டும் என்ற தேவையே கிடையாது. கடியாரத்தின் முள் ஓடிக்கொண்டிருக்கிற மாதிரியான வேலை.

அம்மாக்கண்ணு 'தேடிய ராசா' (புருஷன்) கலியாணம் செய்த ஐந்து வருஷங்களுக்குப் பிறகு விட்டுவிட்டு, எங்கேயோ, மாயமாய்ப் போனான். 'ஆந்தா! அம்மாக்கண்ணு! சும்மாக் கிட; உன் பல்லும் பவிசும் இருப்பதற்கு. உன்னைக் கட்டிக் காத்திட்டு எமன் கூப்பிடற வரையிலும் இருக்கப் போறேனுங்காட்டியும்! நான் எவளையாச்சும் இழுத்துக்கிட்டு அக்கரைச் சீமை போவப் போறேன்!' என்று அவள் புருஷன் அடிக்கடி சொல்லுவானாம். அவன் எங்கே, எவ்வாறு போயிருப்பான் என்பதை ஊகித்துக்கொள்ளுங்கள்.

கலியாணமாகவில்லை என்ற குறை நீங்கிற்றே யல்லாமல், அம்மாக்கண்ணு சொந்தக் குடும்ப சுகம், சொந்தக் குடும்பக் கவலை — ஒன்றுமே அறியாதவள். சென்ற முப்பது வருஷங்களாக நாங்கள்தான் அவளுடைய குடும்பம்; நாங்கள்தான் அவளுக்குக் குழந்தைகள். எங்கள் வீடுதான் அவள் வீடு. எங்கள் குடும்பத்தின் சுக துக்கம்தான் அவளுடைய சுக துக்கமும். கடைசி ஜாமக் கோழி கத்தினால் எழுந்திருந்து விடுவாள். காலையில் முதல் காக்கை கத்தினால் போதும், எங்களை எழுப்பிவிடுவாள். எங்கள் தாயாரிடம் இதைப் பற்றிச்

சலுகை சொல்லிக்கொள்ளப் போனாலும் பலிக்காது. 'வளரு கிற குழந்தை படுக்கையி லிருக்கலாமோ?' என்று அம்மாக் கண்ணு சொன்னால், அப்பீல் கிடையாது.

'வளருகிற குழந்தை படுக்கையிலிருக்கலாமோ?' வளருகிற, வளர வேண்டிய மனிதர்கள் படுகிடையாக இந்த நாட்டிலிருப்பதைத் தெரிந்துகொண்டு, அதற்கு மாற்றுத் தேடுவதுபோல, அம்மாக்கண்ணு சொன்னாளா? உயிர் மல ரும் விடியற்காலத்தில் உறங்கலாகாது என்ற அனுபவத்தைக் கண்டாளா? தூங்கிப்போன நாழிகை மனிதனுடையதன்று என்ற அபூர்வ உண்மையைத் தெரிந்து சொன்னாளா? எதுவாயிருந்தால் என்ன? 'வளருகிற குழந்தை படுக்கையி லிருக்கலாமோ?' எதிர்வாதமில்லாத பேச்சு.

கோழியோடு எழுந்திருக்கிற அம்மாக்கண்ணு, இரவில் கோவில் கடைசி மணி அடித்த பிறகுதான் படுத்துக் கொள்ளுவாள். ஓடிப் போன புருஷன், நடுநிசியில் வந்து கதவை இடிப்பான் என்ற ஆசையோ, சந்தேகமோ என் னவோ? கதவு இடிக்கிறாப் போலச் சத்தம் கேட்டால் போதும், 'யார், யார்?' என்று பதறிக்கொண்டு எழுந்திருப் பாள். 'அம்மாக்கண்ணு! எலி ஓடுகிற சத்தம்; தகரத் தைக் கீழே தள்ளிவிட்டது. கதவை ஒருவரும் இடிக்க வில்லை' என்று நாங்கள் யாராவது தப்பித் தவறிச் சொன் னால் போதும், 'நீ ஏன் இன்னும் தூங்கவில்லை?' என்று கூச்சல் போடுவாள்.

அம்மாக்கண்ணு செய்கிற வேலையின் ஜாப்தா தேவையா? ஜாப்தா தயாராய் வைத்திருக்கிறேன். வாசலுக் குச் சாணி தெளிப்பாள்; வீடு கூட்டுவாள்; வீடு மெழுகு

வாள்; மாடு கறப்பாள்; மாட்டுக்காரன் வராவிட்டால் மாடுகளை மேய்த்துக்கொண்டு வருவாள். பாத்திரங்கள் துலக்குவாள்; எங்களுக்கு எண்ணெய் தேய்த்து விடுவாள். எங்கள் துணிமணிகளை அவள்தான் துவைப்பாள். நெல் அறுவடைக் காலத்தில் களத்துக்குக் கங்காணம் செய்ய (மேற்பார்வை பார்க்க) அவள் போவாள். நெல் புழுக்குவாள்; நெல் குத்துவாள்; மருந்து அரைப்பாள்; குழந்தைகளுக்கு மாத்திரை கரைத்துப் போட்டுவாள். எங்கள் பந்துக்கள் வீட்டுக்குச் சேதி கொண்டு போவாள். எங்கள் வீட்டிலே அதிகாரம் செய்வாள்.

எந்த ஸ்திரீயும் தன் புருஷன் இறக்கிற வரையிலும் சுமங்கலி யல்லவா? அம்மாக்கண்ணு தன் புருஷன் இறந்த சேதி கேட்கிற வரையிலும் சுமங்கலி என்று சொல்லிக் கொள்வதை யார் தடுக்க முடியும்? இதைப்பற்றி நாங்கள் அவளிடம் கேலி செய்ததுண்டு. 'நான் கைம்பொஞ் சாதி (விதவை) மாதிரிதான். ஆனால் அந்த மாதிரி எண்ணிக்கொண்டால், அது அவுங்களுக்கு (ஓடிப்போன புருஷனுக்கு)ப் பாதகம். அவுங்க, என் நினைப்பினால், செத்துப் போய்ட்டாலும் போய்டுவாங்க. அவுங்க மவராசனா, எங்கேயாவது நல்லாயிருக்கட்டும்' என்று அவள் பதில் சொல்லுவதைக் கேட்பவர்கள் கண்ணீர் விடாமலிருக்க முடியுமா?

எங்கள் வீட்டிலே எங்கள் தாயாருக்கும் தகப்பனாருக்கும் தகராறு ஏற்பட்டால், அதைத் தீர்த்து வைக்கிற பஞ்சாயத்துப் பொறுப்பு அம்மாக்கண்ணுவைச் சேர்ந்தது. 'அம்மா சேலை யில்லாமல், பழஞ் சேலையைக் கட்டிக்கிட்டு,

எத்தனை காலம் வீடுவீடாய் நுழைகிறது ? அவுங்க வீட்டிலே கண்ணாலம் வருது. கிழிஞ்ச சேலையோடு அம்மா போக முடியுமா?' என்று அம்மாக்கண்ணு சொன்னால், அதைத் தகப் பனார் ஏற்காமலிருக்க முடியுமா? 'நீ மாத்திரம் கிழிந்த சேலை கட்டிக்கொண் டிருக்கிறாயே! உனக்குப் புதுச் சேலை வேண்டாமா?' என்று நாங்கள் கேட்டால், 'என் புருசன் பக்கத்தி லிருக்காங்களா, நான் புதுச் சேலை கட்டிக்கிட்டு மினுக்கிக் குலுக்கிக்கிட்டு நடக்க?' என்பாள் அம்மாக் கண்ணு.

எங்கள் வீட்டு கௌரவம், கிழிந்த துணி வழியாகக் கூடப் போகக்கூடாது என்று வைராக்கியத்துடன் பேசும் அம்மாக்கண்ணுவை என்னதான் செய்யப்படாது? குல தெய்வம், கும்பிடு தெய்வம், வீட்டுத் தெய்வம்கூடத் தனது பக்த குடும்பத்தார்களிடம் இவ்வளவு கவலையும் சிரத்தையும் காண்பிப்பதில்லையே! குலதெய்வம் இருக்கிற இடத்திலே அம்மாக்கண்ணுவைப் பிரதிஷ்டை செய்து கும்பிட்டா லென்ன? பழைய குல தெய்வத்துக்குக் கோபம் வந்தால் இன்னொரு இடத்துக்குப் போகும். அவ்வளவுதானே? அம்மாக்கண்ணுவுக்குச் சாபம் கொடுக்க முடியாது. அவள் சாபம் கொடுத்தாலும் ஒருவேளை பலிக்கலாம்.

அம்மாக்கண்ணு ரொம்ப 'சூடிகை'. ஒரு தரம் ஒருவரைப் பார்த்தால் போதும். அவர்களைப் பற்றித் தேவையான அளவு தெரிந்துகொள்ளுவாள். 'நல்லவங்க, பொல்லாதவங்க' என்று அவள் தீர்ப்புச் சொல்லிவிட்டால் போதுமானது. அவளுடைய முடிவிலே தவறே இருக் காது. 'அவன் பொல்லாப் போக்கிரி; பாக்கையிலேயே

தெரியுதே!' என்றால், அது சரியாகத்தான் இருக்கும் அவனிடம் நாங்கள் பழகும்படி விடவே மாட்டாள்.

அம்மாக்கண்ணுவுக்கு மனிதர்களைப் பற்றிக் கதையே தெரியாது. காக்காய், குருவி, நரி, கழுதை இவைகளின் கதைதான் தெரியும். கதையையும் நன்றாகச் சொல்லத் தெரியாது. கதை நன்றா யில்லையே என்றால், 'உனக்கு அவசரம்; உனக்குக் கேக்கத் தெரியல்லே' என்பாள். சொல்லத் தெரியாத குற்றம், குறை ஒன்று இருப்பதாகவே அவள் எண்ணினதே கிடையாது.

தனக்கு ஒன்றும் இல்லையே என்ற சிந்தனையாவது விசாரமாவது அவளுக்கு இருந்ததில்லை. வெளியூர்களுக்குப் போய், நாங்கள் ஊருக்குத் திரும்பி வந்தால் 'வீட்டுக்கு என்ன கொணாந்திருக்கே?' என்று கூசாமல் கேட்பாள். 'எனக்கு என்ன கொண்டு வந்திருக்கிறாய்?' என்று அவள் கேட்டதே கிடையாது. வீட்டு பக்தி அபரிமிதமாய்க் கொண்ட அம்மாக்கண்ணுவிடமிருந்து, நம்மவர்கள் தேச பக்தியை ஏன் கற்றுக்கொள்ளக் கூடாது? மானம் இன்னதென்று, நாம் எல்லோருமே, அவளிடமிருந்து நன்றாகப் பாடம் கற்றுக்கொள்ளலாம்.



# நடைச் சித்திரம்

ஆசிரியர்: வ.ரா.

குழந்தை ராமு
மைக் குறத்தி
தாசில் அய்யர்
வாத்தியார்
நாணுவய்யர்
மந்திரி பதி
பெரிய கலெட்டர்
சாமி
குப்பிப் பாட்டி
சமையல் சாமா
தரகு கிருஷ்ணன்
டாக்டர் திருமலை
மைனர்
துரைக்கண்ணு
பூசாரி சரவணை
தாலூகா குமாஸ்தா
தாஸி கோகிலாம்பாள்
ஹோட்டல் மணி
கான்ஸ்டேபிள்
சுப்பய்யா

முதலிய

**37**

சித்திரங்கள்




ஜி. டி., சென்னை